## பாப்பாவின் பச்சிளம் சருமத்தில் முத்தமிடுதல்போல் மென்மையானது

ஜான்ஸன்ஸ் பேபி சோப்—
பாப்பாவின் சிறிய உலகின் சில
சிறந்த பொருட்களில் ஒன்றாகும்.

பாப்பா மீதான உங்கள் ஸ்பரிச
மென்மையும் பாசமும்
போன்றதாகும் ஜான்ஸன்ஸ்
பேபி சோப்பில் உள்ள லனோலின்.
மென்மை மணம் வழங்குகிறது
ஜான்ஸன்ஸ் பேபி சோப—
நாளெல்லாம் குழந்தைக்கு
நறுமணம் தருகிறது.




ஜான்ஸன்ஸ் பேபி சோப்
தூய்மையானது. மென்மையானது.
பாதுகாப்பானது

**Johnson & Johnson**

# முதிர்கன்னிகள் படும்பாடு!

அது ஒரு நல்ல மழைநாள்—

மழையின் கனம் தாங்காமல் வீட்டோரம் ஒதுங்கிய அந்தப் பெண்ணைப் பார்த்தால், குளிரில் நடுங்கும் புறாக்குஞ்சு போல இருந்தாள். கண்களில் மட்டும் கண்ணீர். இயல்பான ஆவலில் அவள் மனம் புண்படாமல் கேட்டபோது எதிர்பார்த்ததற்கும் மாறாகப் பொரிந்து தள்ளினாள்—

''ஏம்மா அழறேன்னு கேக்கக் கூட ஒரு ஜீவன் இங்க இருக்கேன்னு நினைக்கறப்ப ஆச்சர்யமா இருக்கு ஆன்ட்டி. எங்கேயோ பிறந்து ஏதோ சூழ்நிலையில் வளர்ந்து இங்க வந்தேன் பிழைப்புக்காக. கிடைச்ச வேலை போறும்; இதுலேருந்து நல்லவேலையைப் பிடிக்கலாம்னு நம்பிக்கையோட ஹாஸ்டல்ல இருக்கேன். ஆனா நல்ல கவர்ன்மெண்ட் ஜாப், வந்தப்ப அந்த ரிஜிஸ்டர் போஸ்ட்டை அப்படியே திருப்பி அனுப்பிச்சுட்டாங்க...''



''யாரும்மா அந்தப் புண்ணியவானுங்க.''

''எங்க வார்டன்தான்...''

''ஏன்..?''

''எனக்குச் சொல்லத் தெரியலே. இதுவே இல்லே. நாங்க அவுட்டிங் கிளம்பறப்ப ஏதோ ஒரு வேலை வச்சு நிறுத்திடுவாங்க. முழுக்க டிரெஸ் பண்ணிக்கிட்டு வாசல்ல அடியெடுத்து வைக்கறப்ப தடுத்து நிறுத்திட்டதை நினைச்சா அழுகையா வரும். ப்ரதர்ஸ் யாராவது பார்க்க வந்தா அசிங்கமா பேசுவாங்க. இப்படி எத்தனையோ? சாப்பாடா அதுக்கு மேலே. எல்லாத்தையும் பொறுத்துகிட்டேன். ஆனா என் எதிர்காலத்தையே இருட்டடிக்கிற மாதிரி ரிஜிஸ்டர் போஸ்ட்டை ரெஃப்யூஸ் பண்ணிட்டதைத்தான் என்னால் தாளவே முடியலே. இனி எனக்கு ஏது எதிர்காலம்...''

# மஞ்சுளா ரமேஷ்



சந்தேகம் நெருட ஒரே ஒரு கேள்விகேட்டேன். ''உங்க வார்டன் கல்யாணம் ஆகாதவர்களா...''

''ஆமாம்...''

அந்தச் சிறிய பெண்ணிற்குப் புரியவேயில்லை. என்னால் புரிந்து கொள்ள முடிந்தது. இந்தப் பிரச்னைகளுக்கெல்லாம் காரணம் என்ன என்று.

யாரோ ஒரு எழுத்தாளர் ரொம்ப அழகாக எழுதியிருந்தார்.

''பருவம்... இயற்கை... இவை இரண்டும் தான் எத்தனை மகத்தானது. அவற்றோடு ஒத்துப் போகும் போது இந்தப் பெண்களை அவை இரண்டும் சேர்ந்து தெய்வங்களாக ஆக்குகின்றன. ஆனால் இயற்கைக்கு எதிராகச் செயல்படும்போது அதே பெண்ணைப் பேயாக்கி விடுகிறதே''

ஆமாம், இதுதான் அந்த வார்டனைப் பொறுத்த வரை நடந்திருக்கும் உண்மை. தனக்குக் கிட்டாத வாழ்க்கை இவளுக்குக் கிட்டி விட்டதே. தனக்கு இல்லாத அழகு இவளை மலர வைப்பதா இப்படி. இன்னும் எத்தனையோ... ஆண்களுடன் பேசினால் அதைத் தவறாகவே பார்ப்பது... அலங்கரித்துக் கொண்டால் வயிறெரிய, கண்ணெரியப் பார்ப்பது... இப்படி இன்னும் நிறைய சொல்லலாம்.

பொதுவாக ஒரு மேல்நிலைக்குப் போகும் பெண்கள் திருமணத்தை மறுத்து விடுகிறார்கள். அந்த வயதில் லட்சியம், படிப்பு, தொழில் என அதிலேயே அக்கறை போய் விடுகிறது. எல்லாம் முடிந்து ஒரு நிலைக்கு வரும் சமயம் வயது நாற்பது ஐம்பதை

எட்டி விடுகிறது. அந்த வயதில் இளமையா யான உலகம் கண்களைக் கரிக்கிறது.

இப்படிப்பட்ட 'முதுகன்னி'களிடம் சிக்கிக் கொண்டு தவிக்கும் 'இளந்தளிர்'கள்தான் எத்தனை இல்லை? ஒரு கொடுமையான விஷயம். ஆனால் பல இடங்களிலும் நிகழ்ந்து கொண்டிருக்கும் உண்மையைச் சொல்லட்டுமா?

தனியார் கல்லூரிகள் சிலவற்றில் இருக்கும் மிஸ் பிரின்ஸிபால்களிடம் சிக்கிக் கொண்டு மணமான இளம் பெண்கள் படும் பாடு கொஞ்ச நஞ்சமல்ல. ஏப்ரல் 'மே'யில் பிரசவம் அவது போல கணக்குப்போட்டுக் கொண்டு கர்ப்பம் தரிக்கும் பெண் விரிவுரை யாளர்கள் கூட உண்டு. இல்லையென்றால் மெட்டர்னிட்டி லீவை யார் தருவார்கள்? வயிற்றைச் சாய்த்துக் கொண்டு இருக்கும் போது கேட்கும் பாட்டு மட்டுமில்லாமல் இதற்கும் சேர்த்தல்லவா சாத்துப்படி வாங்க வேண்டும்?

இப்படி எத்தனையோ சொல்லலாம். வாழ்க்கையில் பருவங்களைத் தவறவிட்ட பெண்கள் பிறகு மனம் இறுகி இளம்பெண் களைப் போட்டுக் கரிக்கும் நிகழ்ச்சிகள்

---

**வீட்டுத்தோட்டத்தில் பாகல் பயிர் செய்யுமுன் அவ்விதைகளை இலேசான துணியில் கட்டி, தண்ணீரில் ஒருநாள் முழுவதும் ஊறவைத்துப்பின் விதைத்தால் அவை விரைவில் முளைக்கும். -கனகா**

---

எத்தனையோ... மணமாகாதவர்கள் என்ன? சிறிய வயதிலேயே தன் கணவனை இழந்து ஒரே மகனை வளர்க்கப் பாடுபட்ட தாய்மார் களில் சிலர் மாமியாராகும் போது மருமகளை வாழ விடுவதில்லையே? இளம் விதவையாகத் தான் இழந்த இன்பங்களை இந்தக் 'குட்டிச் சாத்தான்' அனுபவிப்பதா என அவர்களின் படுக்கையறை வாசலிலேயே படுப்பாள். மகனின் கிட்டேயே மருமகள் நெருங்காமல் பார்த்துக் கொள்வாள்.

வாழாவெட்டியாக அல்லது விதவையாக அம்மா வீட்டோடு வந்து விடும் நாத்த னார்கள் பண்ணும் விஷமங்கள்தான் எத்தனை இல்லை?

எனக்குத் தெரிந்து ஒரு பெண் பண்ணிய அட்டகாசம் கொஞ்சநஞ்சமில்லை. அண்ணன் வீட்டுக்கு வந்தவுடன் 'பொலபொல'வென கண்ணீர் வடிப்பாள். மாமியார் வீட்டில் சண்டை போட்டுக் கொண்டு வந்து விட்ட நாத்தனார்க்காரி.

''என்னடா பண்ணினே என் தங்கையை. ஏற்கெனவே அவ நொந்து போயிருக்கா உனக்கென்ன அவ்வளவு திமிர்?''

ஆபீஸில் என்ன எரிச்சலோ, அவனுக்கு. எல்லாவற்றையும் சேர்த்துவைத்து மனைவியை மொத்துவான். மனைவி வீட்டுக்கு விலக்காக இருந்தால் 'மடி'யாகக் கொம்பால் அடித்து அவளுக்குப் 'பரிசு' கொடுப்பான். தங்கை யாகப் பட்டவள் கதவிடுக்கில் ஒளிந்து கொண்டு இந்த உற்சவத்தைக் கண்டு களிப் பாள்.

சில பெண்களிடம் ஏனிந்த ராட்சஸத் தனம்?

பெண் பூவாக மலர்ந்து தாயாகக்கனிந்து தெய்வமாக வாழ வேண்டியவள். அப்படி வாழும் பெண்கள் எத்தனை பேர் இல்லை. அவர்களின் சதவிகிதம் தான் அதிகம்.

தான் வாழாத வாழ்க்கையையும் சேர்த்து மருமகன் வாழட்டும் எனத் தன் உடை மையை எல்லாம் கொடுத்து மருமகனைத் திருமகனாக்கி அழகு பார்க்கும் மாமி யார்கள் இல்லையா?

'வாழாவெட்டியாக நான் தான் இருக் கேன். என் கையால் வளர்ந்த தம்பி அமோகமாக வாழட்டும்', என அவனுக்காக மெழுகாக உருகி அந்த ஒளியில் அவன் வாழ்வில் தீபமேற்றும் அக்காள் இல்லையா?

'எனக்குத்தான் கல்யாணம் ஆகவில்லை. இதோ என்னோடு வேலை பார்க்கும் இந்தச் சின்னஞ் சிறிசுகள் சந்தோஷமாக வாழட் டும்.'

என மனமுருகி அவர்களுக்கு உதவிகள் செய்து அவர்கள் மனம் கனியக் கனிய நன்றி கூறுவதையே பேரமுதமாக நினைத்து வாழும் மேலதிகாரிகள் இல்லையா?

பின் சில பெண்கள் பேயாக மாறுவது ஏன்? இத்தனைக்கும் படித்திருக்கிறார்கள். உலக விஷயம் முழுவதும் தெரிந்து கொள் கிறார்கள். 'மனப் பக்குவம்' மட்டும் ஏனோ வருவதில்லை.

ஒரு சிறிய துரும்பைக் கூட மற்றவர் களுக்குக் கொடுக்க மாட்டேன் என்று அது என்ன பிடிவாதம்?

'நாம் பேசும் இந்தப் பேச்சால் மற்றவர் மனம் எவ்வளவு புண்படும்' என்று ஏன் நினைத்துக் கூடப் பார்க்க மாட்டேன் என் கிறார்கள்?

இத்தனைக்கும் இவர்களை மீறி எதுவும் நடப்பதில்லை. 'எனக்குத் திருமணம் வேண் டாம்' என்று முடிவெடுத்துத் தனி வாழ்க் கைக்குத் தயாராகி விட்டாயிற்று. அப்புறம் ஏனிந்தக் கலக்கம், பொறாமை, வயிற் றெரிச்சல்

பெண்—

அது எப்போதும் குளிர்ச்சியானதாக இருக்க வேண்டும்.

பெண்மை—

அது அண்டி வருவோர்க்கெல்லாம் அன் பெனும் அமுதை வழங்குவதாக இருக்க வேண்டும்.

பெண் எப்போதும் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும்.

அவள் – பேயாக மாறக் கூடாது.

# நீங்கள் ஒரு பேசா மடந்தையா?



பெண்களில் கிட்டத்தட்ட பாதி பேர் வெட்கப்பட்டு, கூச்சப்பட்டு ஒதுங்குபவர்கள்தான்.

இதில் நெருங்கிய உறவினர், தோழிகளுடன் கூட தாராளமாகப் பேசாதவர்கள் முதல் — வெளி மனிதர்களிடம் முன்பின் தெரியாதவர்களிடம் பழக கூச்சப்படுபவர்கள் வரை எல்லா ரகங்களும் உண்டு. இவர்கள் ஆண்களுடன் கலந்து பழக வேண்டிய சூழ்நிலையை அறவே தவிர்ப்பார்கள். அப்படியே ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொள்ள நேரிட்டாலும், கன்னம் சிவக்க, வயிற்றில் பட்டாம்பூச்சி பறக்க, கால் நடுங்க, ஒரு மூலையில் நிற்பார்கள்.

இப்படிப்பட்டவர்களுக்கு, தங்களைப் பற்றி மற்றவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்று தெரிந்தால் சௌகரியமாக இருக்கும் அல்லவா?

மனிதர்கள், பொதுவாக, இதுபோல் வெட்கப்பட்டு அதிகம் பேசாதிருப்பவர்களை மதிக்கிறார்கள், விரும்பவும் செய்கிறார்கள் என்கிறார் ஒக்லஹோமா பல்கலைக் கழகத்தைச் (யு. எஸ். ஏ.) சேர்ந்த டாக்டர் வாரன் ஜோன்ஸ் என்கிற மனவியல் நிபுணர்.

இது மட்டுமல்ல: இன்னமும் கேளுங்கள். பேசாதிருப்பவர்களை மற்றவர்கள் ரொம்பப் புத்திசாலியாகக் கருத வாய்ப்புண்டு — அவர்கள் ஆழ்ந்து சிந்திப்பவர்கள் போல் தோன்றுவார்கள்! குறைவாகப் பேசுவதால் ஏடாகூடமாக உளற அதிக வாய்ப்பில்லை.

இவர்களை மற்றவர்கள் நம்புவார்கள். தங்கள் உள்ளம் திறந்து பேசுவார்கள். —இவர்கள் மற்றவர்களிடம் போய் வம்பு பேச மாட்டார்கள் என்ற நம்பிக்கை.

இவர்கள் ஒரு குழுவில் சேர்ந்து உழைக்கத் தகுதியானவர்கள். அதிகாரம் செலுத்த வேண்டும், மற்றவர்களுக்கு மேல் செல்வாக்குடன் விளங்க வேண்டும் என்ற ஆர்வம் இல்லாமல் ஒதுங்கிப் போகும் குணம் உடையவர்களாதலால், காரியத்தில் குறியாய்ச் செயல்பட்டுக் குழுவின் லட்சியத்தைப் பூர்த்தி செய்வார்கள்.

நாணிக் குனிந்து முகம் சிவக்கும் பெண்களையே ஆண்கள் அதிகம் விரும்புகிறார்கள் — மனைவியாக அடைய ஆசைப்படுகிறார்கள். பேசா மடந்தைகளை இழுத்து வைத்துப் பேசப் பிரியப்படுகிறார்கள்.

இவர்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தை மற்றவர்களிடம் தூண்டிவிடுகிறார்கள்.

எப்பொழுதும் தானே பேசாமல், மற்றவர்களைப் பேச விட்டுக் கேட்பதால், இவர்கள் மனிதர்களை நன்றாகப் புரிந்து கொள்கிறார்கள். கேட்பதில் நேரமும், கவனமும் செலுத்துபவர்கள் மற்றவர்களால் விரும்பப்படுபவர்கள். நிறைய விஷயங்களைக் கேட்டுக் கற்றுக் கொள்வதால், சமநிலையிலுள்ள, மற்றவர்களை விட இவர்கள் புத்திசாலிகளாக இருக்கிறார்கள்.

- ஜெயா. வி. ராமன்.

## இம்மாத இல்லத்தரசி போட்டி

**பொருள்:** புதிய இனிப்பு வகைகள் **முடிவு தேதி:** 15-9-'94

**சமையல் கூப்பன்**

................ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

## நமக்குள்ளே ஒரு கடிதம்

### பெண்களே கோழைத் தனத்தை விடுங்கள்!

பெண்களில் படித்த பட்டதாரியான பெண்கள் மிகவும் கோழைகளாக நடந்து கொள்கிறார்கள். அவர்களின் திருமணங்கள் அவர்களைக் கேளாமலேயே பெரியோர்களால் நிச்சயிக்கப்படும் போது எதிர்த்துத் தன் விருப்பத்தைச் சொல்லத் துணிவின்றி செயல்படுகின்றனர். தன் கணவனைத் தானே தேர்ந்து எடுக்கும் திறமை மிகுந்தவர்கள் இக்காலப் பெண்கள். ஆனால் சிலர் வீட்டில் உள்ள பெரியவர்களுக்குப் பயந்து கொண்டு அவர்கள் நிச்சயித்த வரனுக்கு சரி என்று சம்மதித்து விடுகின்றனர். ஆனால் மணமகன் தனக்கு ஏற்றவன் அல்ல என்று தனிமையில் புழுங்கி தன் வாழ்வையே முடித்துக் கொள்ளுகின்றனர். அதனால் அவர்களுக்கு என்ன பயன்? நிச்சயம் செய்த பெரியவர்களும், பெற்றோரும் வாழ்நாள் முழுவதும் கண்ணீர் விடுகின்றனர். நிச்சயித்த பெரியோர்கள் நாளடைவில் மறந்து விடுகின்றனர். ஆனால் பெற்றவளின் நிலை? அதிலும் அவள் ஒரே மகளாக இருந்து விட்டால் அந்தத் தாயின் நிலை விவரிக்க இயலாது. அதனால் அந்நிலை ஏற்படாமல் இருக்க படித்த பட்டதாரியான பெண்கள் மனம் திறந்து தன் விருப்பத்தைத் தெரிவிக்க வேண்டும். தங்கள் கோழைத்தனத்தை விட வேண்டும். எம். காம் வரைபடிக்க வைத்து, நிச்சயித்து கல்யாணம் முடியும் வரை மௌனியாகி பிறகு தற்கொலை செய்து கொண்ட பெண்ணின் அபலைத் தாயின் வேண்டுகோள் இது.



பதினொரு வயது யோகலட்சுமியின் அரங்கேற்றம் கும்பகோணத்தில் சமீபத்தில் நடந்தது. அச்சிறுமியின் பாத அசைவுகளும், அபிநயமும் சிறப்பாக இருந்தன. சிறுமியாக இருந்தாலும் சிறிது கூட மேடை பயமே இல்லாமல் ஆடியது குறிப்பிடத்தக்கது.



### புகையில்லாத அடுப்பு!

காஸ், ஸ்டவ் என்பதைத் தாண்டி மின்சார சாதனங்கள் நிறைந்துவிட்ட இந்நாளில் யாரும் அடுப்பை உபயோகிப்பதில்லைதான். ஆனால் எல்லாமும் தீர்ந்து விடும் நாட்களில் பரண்மேல் இருக்கும் 'குமட்டி'யைத் தூசுதட்டத் தான் வேண்டியிருக்கிறது.

அதில் முன்னேற்றமடைந்த அடுப்பொன்றை 'ஷீட் சிஸ்டம்ஸ்' கம்பெனியினர் அறிமுகப்படுத்தி உள்ளனர். 'ப்ரியாக்னி' என அழகான பெயரில் வந்துள்ள இந்த அடுப்பு முக்கியமாகப் புகைவதில்லை. காரணம் காற்று செல்வதற்கு நல்ல வசதி இருக்கிறது. எரிபொருளும் 25 சதம் மிச்சப்படுகிறது.



ஸி.பீ.ஆர் ஐ. டிசைன்

## உதவி ஜனாதிபதிக்குப் பெண்மணி!

இந்தியாவில் அல்ல; அமெரிக்காவில்தான்! ஜிரால்டின் பெர்ரரோ அமெரிக்க சரித்திரத்தில் முதல்தடவையாக நாற்பத்தெட்டு வயதுப் பெண்மணி உதவி ஜனாதிபதி பதவிக்கு வேட்பாளராக நியமிக்கப்பட்டிருக்கிறார்! நியூயார்க்கில் 'குயின்ஸ்பரோ'வைச் சேர்ந்த பெர்ரரோ இத்தாலிய வம்ச பரம்பரையைச் சேர்ந்தரோமன் கத்தோலிக்கர்! 1978-ம் வருஷம் இவர் அமெரிக்கப் பிரதிநிதிகள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்! 'டெமாக்ரடிக்' (ஜனநாயக) கட்சியின் 'உதய நட்சத்திரம்' என்ற புகழைப் பெற்றவர்!

பெர்ரரோ ஒரு வக்கீல். இவரது கணவர் ஜான் ஜாக்கரோ மான்ஹாட்டனில் ஒரு ரியல் எஸ்டேட் புள்ளி! குடும்பத்தைக் காக்க அவரது விதவை அன்னை பணிபுரிந்ததை கௌரவிக்கத் தன் ஆரம்பப் பெயரை அப்படியே வைத்துக் கொண்டதாகச் சொல்கிறார் ஜிரால்டின் பெர்ராரோ! ஜனநாயகக் கட்சியில் ஜனாதிபதி பதவிக்கு நிற்கும் வால்டர் மாண்டேல் உதவி ஜனாதிபதி பதவிக்கு ஒரு பெண்மணியைத் தேர்ந்தெடுத்துள்ளது அமெரிக்காவையே ஒரு கலக்கு கலக்கியிருக்கிறது!

—பி. எஸ். எம்.





சரோஜாதேவியின் 'நட்சத்திர' வாழ்க்கை

அடுத்த இதழில்—

எழுத்தாளர் 'சுஜாதா' 'மங்கையர் மலர்' வாசகிகளின் கலந்துரையாடல்!



# கஸ்தூரி பா

ஸ்ரீவேணுகோபாலன்



''இந்த நகை நமக்கு எதுக்கு? எவ்வளவு விலை உயர்ந்தது தெரியுமா?'' என்றார் காந்தி!

கஸ்தூரிபாவுக்கு வெகுமதியாக வந்த நெக்லஸ் அது! ஆப்பிரிக்க இந்தியர்கள் அதை அன்பளிப்பாக அவரிடம் கொடுத்திருதார்கள். 50 கினி (1050 பவுன்) தங்கத்தில் தயாரிக்கப்பட்ட அழகான நெக்லஸ் அது.

ஆப்பிரிக்க இந்தியர்கள் காந்தி குடும்பத்தின் சேவைகளைப் பாராட்டி அவர்களுக்கு அளித்த பரிசு!

பரிசு அது மட்டுமல்ல! பல்வேறு இந்திய குழுக்களும், சங்கங்களும் தங்கம், வெள்ளி, வைரங்களை வெகுமதியாக வாரி வழங்கி இருந்தன.

காரணம் இருந்தது.

தங்களுடன் இருந்து தங்கள் நலனுக்காகவும் சுய உரிமைக்காகவும் போராடியகாந்தி அப்போது தாயகம் திரும்பிக் கொண்டிருந்தார்.

அவர் மீது மாறாத அன்பை வைத்திருந்த இந்தியர்கள் தங்கள் நன்றியைத் தெரிவிக்கும் பொருட்டு கூட்டங்கள் நடத்தி வழி அனுப்பு உபசாரங்கள் நிறையச் செய்து கூடவே விலை மதிப்பில்லா வெகுமதிகளையும் வழங்கி இருந்தார்கள்.

காந்திக்கு அந்த அணிகள், ஆபரணங்கள், தங்க கடிகாரங்கள், நெக்லஸ்கள் எல்லாவற்றையும் பார்க்கும்போது வேதனையாக இருந்தது.

அவர் செய்த சேவைகளுக்கு வெகுமதிமதியா அவை? அவைகளை அவர் வாங்கிக் கொள்ளலாமா? சேவைக்குக் கூலிகள் போல இருந்தன அல்லவா அவை!

பல இரவுகள் உறக்கம் வராமல் போய்விட்டது. மனைவி கஸ்தூரிபாவிடம் அதைப் பற்றிப் பேச ஆசை! அதனால் இனிமேலும் கம்மா இருக்க முடியாது என்று அன்று கேட்டு விட்டார்.

வருஷம் 1899. இருவருக்கும் வயது அப்போது முப்பது.

''நகை உங்களுக்கு வேண்டாம். உங்க பிள்ளைகளுக்கும் வேண்டாம் தெரியும். நீங்க சொல்லிச் சொல்லி அதுங்கள் மனசை மாத்திட்டீங்க! உங்க பேச்சுக்குத் தகுந்த படி தான் இனிமே அதுங்க ஆடும்! நாளைக்கு எனக்கு நாட்டுப் பெண்ணுங்க வந்தா என்ன செய்வது? அவங்களுக்கு வேண்டாமா நகை! அதையே விடுங்க! நமக்கே நாளைக்கு என்ன நடக்குமின்னு யாரு கண்டா? இந்த விஷயத்திலே பிடிவாதம் பிடிக்காதீங்க! நகை நமக்கே இருக்கட்டும்!'' என்றாள்.

''இதோ பாரு! நாம்ப நம்ம குழந்தைகளுக்கு எல்லோரையும் போல பால்ய விவாகம் பண்ணப் போறதில்லே. அவங்களைப் படிக்க வைக்கப் போறோம். நல்ல வயசு வந்தப்புறம் தான் கல்யாணம் செஞ்சு வைக்கப் போறோம். நிச்சயமா



அப்போ நாம்ப நகை மேலே ஆசை வைக்கிற நாட்டுப் பெண்களைத் தேர்ந்தெடுக்கப் போறதில்லை'' என்றார் காந்தி.

''அதை எப்படி அவ்வளவு தீர்மானமாச் சொல்லிட முடியும்?'' என்று திருப்பிக் கேட்டார் கஸ்தூரி பா!

''சரி, அப்படியே ஒருநிலை வந்தாலும் அப்போ கேளு பார்த்துக்கறேன்'' என்றார் காந்தி.

''கேட்கணுமா? உங்களை ஏற்கெனவே புரிஞ்சுக்கிட்டாச்சு. என் நகையை எல்லாம் பொதுக் காரியத்திலே பாழாக்கிட்டீங்க! என் நினைப்பை துளி கூட நீங்க லட்சியம் பண்ணலை. நாட்டுப் பெண்ணுக்கு நகை வாங்கிப் போடுவாராம், நகை! போதாததற்கு குழந்தைகளை வேறு சாமியாராக்கப் பார்க்கறீங்க! இதெல்லாம் எங்கே கொண்டு போய் விடுமோ, தெரியாது! நான் நகையை தரப் போறதில்லை!'' என்று தீர்மானமாகக் கூறினாள் கஸ்தூரி பா!

காந்தி அவரைத் தீவிரமாகப் பார்த்தார்.

''சரி! இந்த நெக்லஸை உன் சேவைக்குக் கொடுத்தார்களா? என் சேவைக்குக் கொடுத்தார்களா?'' என்றார்.



''உங்க சேவைக்குத்தான்! ஆனால் என் சேவை மட்டும் குறைச்சலா? உங்களுக்காக ராத்திரி பகலா கஷ்டப்பட்டு உழைச்சிருக்கேன்! அது சேவையிலே கணக்கு இல்லையா? நீங்க எல்லா வேலையும் என் மேலே போட்டுட்டுங்க! உங்க கிட்டே அடிமையா நான் வேலை செஞ்சேன். நினைவு வச்சுக்குங்க!'' என்றார் கஸ்தூரி பா! அவர் கண்களில் கண்ணீர் துளிர்த்து விட்டது.

காந்தி கலங்கி நின்றார்.

ஒருவிதமாக கஸ்தூரிபாவின் அசிரத்தையான இணங்கலைப் பெற்று நகைகளை அறக்கட்டளையின் பேரில் பாங்கில் போட்டு வைத்தார்.

காந்திக்கும், கஸ்தூரி பாவுக்கும் நடைபெற்ற எத்தனையோ சச்சரவுகளில் இந்தச் சச்சரவும் ஒன்று.

கஸ்தூரிபாவின் வாழ்க்கை ஒரு சராசரி இந்திய மனைவியின் வாழ்க்கை போலவே கஷ்டமாகவும், துயரம் நிரம்பியதாகவும் இருந்தது.

ஆரம்பகால காந்தி ஒரு லட்சியபுருஷனாக இல்லை. சராசரி இந்தியக் கணவனைப் போன்ற கொடுமையும், ஆதிக்க புத்தியும் உடையவராக இருந்தார். கஸ்தூரிபா வின் மீது அவர் அறிந்தோ, அறியாமலோ நிறையக் கொடுமைகளை இழைத்தார்.

இருவருக்கும் பதின்மூன்றும் வயதில் திருமணம் நடந்தது. கஸ்தூரிபா போர்ப்பந்தரில் 1869—ம் வருஷம் பிறந்தார். அந்நாளைய வழக்கம் போல கஸ்தூரி பாவை அவர் பெற்றோர்கள் படிக்க வைக்கவில்லை.

திருமணம் 13—வது வயதில் நடந்ததும் காந்தியின் வீட்டுக்கு அவர் வந்து சேர்ந்தார். காந்தி அப்போது உயர்நிலைப்பள்ளியில் படித்துக் கொண்டிருந்தார்.

ஒரு மனைவி தன் கணவன் என்ன சொன்னாலும் கீழ்ப்படிய வேண்டும் என்ற கருத்து அவரிடம் ஆழமாக ஊறி இருந்தது. இதன் காரணமாக கஸ்தூரி பாவிடமிருந்து அவர் நிறைய எதிர்பார்க்க ஆரம்பித்தார். தம்மைப் போன்ற வயதுடைய சிறுமி அவள் என்று அவர் நினைக்கவில்லை.

அவளுக்குப் படிப்பு அறிவில்லை என்பதை அறிந்து, அவரே எழுதப் படிக்கச் சற்றுக் கொடுக்கத் தொடங்கினார். எல்லா விதங்களிலும் கஸ்தூரி பா அவரது எதிர்பார்ப்பைப் போலவே இருக்கவேண்டும் என்று கருதினார்.

கஸ்தூரிபா கோயிலுக்குப் போகக்கூடாது! சிநேகிதிகளைப் பார்க்கக் கூடாது என்றெல்லாம் காந்தி அவருக்குக் கட்டளை இடத் தொடங்கினார்.

கஸ்தூரிபா ஒரு வெகுளியான பெண். சூது, வாது அறியாதவள். தன் கணவன் தன் மீது ஏன் இந்தக் கண்டிப்புக்களைச் சுமத்துகிறார் என்று தெரியவில்லை. காந்தி சொல்வதை அவர் கேட்டுக் கொண்டாலும், உள்ளூற மனம் வருந்த ஆரம்பித்தார்.

உயர்நிலைப்பள்ளி மாணவனாக இருந்தபோது காந்திக்கு ஒரு நண்பன் கிடைத்தான். அவன் காந்திக்கு அடிக்கடி துர்போதனை செய்ய ஆரம்பித்தான்.

**சமையல் குறிப்பு:**

சப்பாத்திக்குக் கோதுமைமாவு பிசையும் பொழுது சிறிது ஓமத்தையோ அல்லது சுக்குப்பொடியையோ சேர்த்துப் பிசைந்தால் சப்பாத்தி வாசனையாகவும் இருக்கும்; சுலபமாக ஜீரணமும் ஆகும்.

வெந்த பயத்தம்பருப்போ, துவரம் பருப்போ மீந்து விட்டால் அவைகளையும் மாவுடன் சேர்த்தும், சப்பாத்தி செய்யலாம். மாவுடன் வெந்த கீரைகளையும் பிசைந்து செய்யலாம்.

முளை கட்டிய கொத்துக் கடலையை அரைத்து மாவுடன் சேர்த்துப் பிசைந்து செய்யப்படும் சப்பாத்தி மிகச் சத்துள்ளதாக இருக்கும்.

—சியாமளா தியாகராஜன்.

அதை ஒருவாறு உணர்ந்த கஸ்தூரிபா தம் கணவரைத் தாமே கண்டிக்கத் தொடங்கினார். 'அவன் நல்லவன் தான்' என்று காந்தி அவனுக்குப் பதில் சொல்லுவார்.

இந்தச் சேர்க்கை சீக்கிரத்தில் விபரீத பலன்களைக் கொடுக்க ஆரம்பித்தது.

காந்தியின் குடும்பம் சுத்த சைவம். நண்பனின் தூண்டுகோல் பேரில் அவர் மாமிசம் சாப்பிட ஆரம்பித்தார்.

அது மட்டுமல்ல! அவன் கொடுத்த போதனையில் கஸ்தூரி பாவின் கற்பின் மீது சந்தேகம் கொள்ள ஆரம்பித்தார்.

இதனால் இருவருக்கும் சச்சரவுகள் தோன்ற ஆரம்பித்தன. கஸ்தூரி பா மீது காந்தி இல்லாத சட்டங்களை எல்லாம் பிறப்பிக்க ஆரம்பித்தார். கஸ்தூரியின் ஒவ்வொரு இயக்கத்தையும் அவர் கட்டுப்படுத்த ஆரம்பித்தார். கஸ்தூரி எல்லாவற்றையும் பொறுமையாக ஏற்றுக் கொண்டார்.

பின்னால் இந்த நிகழ்ச்சியைப் பற்றி தமது சுயசரிதையில் எழுதிய காந்தி, தமது தவறுகளுக்கு மனம் நொந்து வருத்தம் தெரிவிக்கிறார்.

'என் நண்பன் எனக்கு மேலும் மேலும் தூபம் போட்டான்! என் மனைவியோடு உள்ள என் பிணக்குகள் அதிகரித்தன. நான் ஒரு விசுவாசமுள்ள கணவன்தான்: ஆனால் என்னிடம் நிறைய பொறுமை இருந்தது. இந்த ரீதியில் நான் என் மனைவிக்கு இழைத்த கொடுமைகளுக்காக என்னை ஒரு போதும் மன்னித்துக் கொள்ளமாட்டேன். ஒரு வேலைக்காரன் மீது சந்தேகப்பட்டால், அவன் அந்த வேலையை விட்டே போய் விடலாம்! ஆனால் ஒரு மனைவி மீது சந்தேகப்பட்டால் அவள் என்ன செய்வாள்? ஒரு ஹிந்துப் பெண் விவாகரத்துக்கு ஓட மாட்டாள்! சட்டம் அவளுக்கு நிம்மதி தாராது. விரக்தியின் எல்லைக்கே என்

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்



## காம்ப்ளான்®

**ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன**

வளரும் குழந்தைகளுக்கென்றே சிறப்பான சில தேவைகள் உள்ளன. அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக வழங்கக்கூடிய ஊட்டச்சத்துக்களான புரதங்கள் அவர்களுக்கு தேவை.

வளரும் வயதில் அவர்களுக்குத் தேவைப்படும் மிகச்சிறந்த புரதம் மற்றும் 22 மூலாதார ஊட்டச்சத்துக்கள் அளிக்கிறது காம்ப்ளான்.

உங்கள் குழந்தைக்கு அன்றுடம் இருவேளை அளியுங்கள் காம்ப்ளான்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்: சாக்கலேட், ஏலக்காய்—குங்குமப்பூ மற்றும் ஸ்ட்ராபெர்ரி—மற்றும் சாதா ரகத்திலும் கூட.




பால் சேர்த்திடத் தேவையில்லை.



GKBE.884 GLC.2012.6.Tam.R

**திட்டமிட்ட பரிபூரண உணவு – காம்ப்ளான்®**

மனைவியை அனுப்பிய கொடுமைக்கு நான் என்னை ஒரு போதும் மன்னித்துக் கொள்ள மாட்டேன்.''

கஸ்தூரி பா.எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டுதான் வந்தாள். நிச்சயம் தன் கணவர் மாறுவார் என்று நம்பிக்கை வைத் திருந்தாள். ஆனால் அநேக சமயங்களில் அந்த நம்பிக்கை கூட அசைவு கொடுத்தது. ஆனால் கஸ்தூரி தனது மன உறுதியை இழக்கவில்லை.

இந்தச் சந்தேகங்கள் தொடர்ந்து ரொம்ப நாள் நீடித்தது.

நாளாவட்டத்தில் காந்தியிடம் சிறிதுசிறி தாக ஏற்பட்ட மனப்பக்குவமே இந்தச் சந்தேகங்களைப் படிப்படியாக விட்டுவிடக் காரணமாக மாறிற்று.

ஆனால் அந்தப் பக்குவம் எவ்வளவு மெதுவாக வந்து கொண்டிருந்தது?

அது வரும் வரை கஸ்தூரி பா பட்ட அல்லல்களுக்குக் கணக்கு ஏது?

அந்தச் சிறு பருவத்தில் காந்திக்கு வலு வான காம இச்சைகள் இருந்தன.

இதன் காரணமாக ஒரு முக்கிய நிகழ்ச்சி நடந்தது.

காந்திக்கு அப்போது திருமணமாகி மூன்று ஆண்டுகள் ஆகியிருந்தன. உயர்நிலைப் பள்ளியை முடித்திருந்த வேளை! காந்தியின் தந்தை நோய்வாய்ப்பட்டு படுத்த படுக்கை யாக இருந்தார்.

எந்த வேளையில் அவர் உயிர் பிரியுமோ என்ற ஒரு நிலை இருந்தது.

காந்திக்கு இயல்பாகவே பணிவிடைசெய் யும் பண்பு இருந்தது.

இதனால் தினமும் இரவும், பகலும் தன் தந்தை பக்கத்தில் இருந்து அவருக்குப் பணிவிடை செய்து வந்தார். அவருக்கு வேளாவேளைக்கு மருந்து கொடுப்பதுடன், அவரது கால்களைப் பிடித்து விட்டு இதம் கொடுத்து வந்தார். தந்தை மீது அவருக்கு பக்தி விசுவாசமே இருந்தது.

அந்த முக்கிய தினம் வந்தது.

(தொடரும்)

# சொல்ல விரும்புகிறோம்

பாரதி பாடிய புதுமைப்பெண்களை உருவாக்கும் முயற்சியில் இறங்கியுள்ள ''மங்கையர் மலர்''லா 'முதல் கோணல்' போன்ற பெண்களை மட்டம் தட்டும் கதை வெளியாகிறது? இந்த நெடுங்கதையில், வேலைக்குப் போவதனாலேயே பெண்கள் காதலிப்பதாகவும், இறுதியில் தந்தையே பெண்ணைக் காதலிக்கச் சொல்வதாயும் இருக்கும் இக்கதையை படித்து விட்டு என் மனம் குமுறி அழுதது. தயவு செய்து இது போன்ற கதைகளுக்கு இடமளிக்க வேண்டாம்.
கு. பா. மனோகரன், சென்னை-78.

''முதல் கோணல்'' பத்மாவின் தந்தையின் இயல்பை வித்யா சுப்பிரமணியத்தின் கருத்துக்கும் ஒருபடி மேலாக ம. செ. சித்திரத்தில் காட்டினார். ம. செ. கைகளுக்கு ஒரு ஷொட்டு.
சுதா சேவுகன், கல்யாண்.

''சமத்து பேசாம நீயும் யாரோடயானும் ஓடிப் போயிடேன்'' என்ற வரிகள் மனதை உலுக்கி விட்டது.
பேபி சதாசிவம், திருவெண்காடு.

'ரோஜா செடி வைத்திருக்கிறீர்களா?' என்னும் கட்டுரை மிகவும் பயனுள்ளதாக இருக்கிறது. இது போன்ற உபயோகமான கட்டுரைகளை தங்கள் இதழில் அடிக்கடி வெளியிடும்படி கேட்டுக் கொள்கிறோம்.
வள்ளிராணி சீதாநந்தன், குதிரைக்கல்மேடு.

'காணக் கண் கோடி வேண்டும்' கட்டுரை, கண்களைப் பராமரிக்கும் வழிகளை சீரிய முறையில், எளிய வழியில் சொல்லித் தந்தது என்பதில் ஐயமே இல்லை.
வி.கி.கிருஷ்ணரத்தினம், காட்டாங்குளத்தூர்

பத்து நிமிடத்தில் ஒரு ஆபரேஷன்' என்ற தலைப்பில் நவீன குடும்ப நலத்திட்ட ஆபரேஷன் பற்றி மிகவும் தெளிவாக விளக்கி எழுதியுள்ளீர்கள். என் வீட்டில் உள்ளவர்களும், மற்ற நண்ப, உறவினர்கள் கூடப் படித்து மகிழ்ந்தார்கள்.
ப. வை. கமலவேணி, மயிலாடுதுறை-2

''இந்துத் திருமணத்தை ஒப்பந்தமாகக் கருதாமல் வாழ்க்கைப் பந்தமாக நினைக்கிறார்கள்'' என எழுதியிருக்கிறீர்கள். எல்லா மதத்தினரும் இவ்விதமாகவே நினைக்கிறார்கள் என்பதையும், விவாகரத்தை எவ்வளவு தள்ளிப் போட முடியுமோ அவ்வளவு தள்ளிப் போடுகிறார்கள் என்பதையும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.
டி. ரெஜினா, சென்னை-10.

'சில பிரச்சினைகள்: சில வார்த்தை'களில் மஞ்சுளா ரமேஷின் 'தடுக்கி விழுந்தவர்கள்' கட்டுரை படித்தேன். ஏதோ கடனுக்கு, நிர விசாரிக்காமல் வீண் பகட்டுக்காக தடபுடல் கல்யாணம் செய்யும் பெற்றோர்களும், முற்போக்கு என்ற பெயரில் தவறான பாதையில் செல்லும் பெண்களும் சிந்திக்க வேண்டிய சிறந்த கட்டுரை!
திருமதி. நரசிம்மராவ், திருவையாறு

வித்யா சுப்பிரமணியம் அவர்களின் ''முதல் கோணல்'' நெடுங்கதை மட்டுமல்ல, நெஞ்சைத் தொடுங்கதை, அந்த 'அப்பா' கதாபாத்திரம் இருதயத்தில் விசாலமாய் இடம் பிடித்து விட்டது. ம. செ. அவர்களின் பொருத்தமான ஓவியம் கதைக்கு மெருகூட்டியது.
ஏ. ஜி. கண்ணன், திருவல்லிக்கேணி.

''வழிகாட்டும் பெண்மணிகள்'' பகுதி ஒவ்வொரு பெண்ணும் படிக்க வேண்டியது. வழி காட்டிய பெண்மணிகள் பாரதத்தில் இருந்திருக்கிறார்கள் என்ற மனநிறைவை ஒவ்வொரு பெண்ணும் அடைந்து பாரதி கண்ட புதுமைப் பெண்ணாக மாறுவாள் என்பதில் மாறுகருத்தில்லை
நா. செந்தில் முரளி, கோவை-2.

நான் அண்மையில் ருசி(படி)த்த சிறுகதைகளில் நல்ல சிறுகதை 'மலட்டு நிலம்' தான்.
அ. சொராவணன், விருத்தாசலம்.

மங்கையர்கள் தங்களுடைய எண்ணங்களையும் — ஆதங்கத்தையும் துணிவுடன் எழுத 'நமக்குள்ளே ஒரு கடிதம்' பகுதி துணையாக இருக்கிறது.
''வாகை இமயன்'' பெங்களூர்-53

அட்டை வண்ணப்படம்: யோகா

# வீட்டை அலங்கரிக்கலாமா?

பிரம்பு மற்றும் மூங்கிலினால் ஆன ஃபர்னிச்சர் முன்பெல்லாம் வீட்டிற்கு வெளியேயும் தோட்டங்களிலும் தான் உபயோகித்து வந்தார்கள். ஆனால் இட நெருக்கடி காரணமாகவும் விலை ஏற்றம் காரணமாகவும் ஃபர்னிச்சர் டிசைன் செய்பவர்கள் கவனம் இப்போது மலிவாகவும் சுலபமாகவும் கிடைக்கும் பிரம்பின் பக்கம் திரும்பி இருக்கிறது என்கிறார் திருமதி ரஞ்ஜனி வெங்கட்ராகவன்.

பிரபல கிரிக்கெட் வீரர் வெங்கட்ராகவனின் மனைவியான இவர் சாந்தோம் நெடுஞ்சாலையிலுள்ள கல்சுரல் அகாடமியில் இன்டீரியர் டெகரேஷன் வகுப்புகள் நடத்துவதுடன், தனிப்பட்ட முறையிலும் வீடுகளில் இன்டீரியர் டெகரேஷன் செய்ய ஆலோசனைகள் வழங்குகிறார். ''பிரம்பினாலேயே வீட்டை அலங்கரிப்பதுதான் இப்போதைய ஃபேஷன்...'' எனக் கூறும் ரஞ்சனி தரும் சில டிப்ஸ்கள்:

பிரம்பு மிகவும் லேசாக இருப்பதால் குடும்பத் தலைவிகள் இதைச் சுலபமாக நகர்த்தி வைத்துவிட்டு சுத்தப்படுத்தலாம். லேசாக இருப்பதால் பார்வைக்கு அதிக இடம் அடைத்துக் கொள்ளாதது போல் இருக்கும். சிறிய துவாரங்கள் நிறைய இருப்பதால் காற்றோட்டமாக இருக்கும். நம்முடைய சீதோஷ்ண நிலைக்கு இது மிகவும் உகந்தது.

ஒரே பொருளால் ஆன ஃபர்னிச்சர் தான் சாதாரணமாக ஒத்துப்போகும். ஆனால் பிரம்புடன் மரச்சாமான்களை இணைத்து அலங்கரிக்கலாம். உதாரணமாக கறுத்த பிரவுன் வண்ண சோபா செட்டிற்கு ஏற்றதாக பிரம்பினால் ஆன க்யூரியோ கேபினட்டிற்கும் அதே வண்ணம் அடித்து உபயோகிக்கலாம்.



ஒருவர் உட்காரும் பிரம்பு நாற்காலிகள் இப்போது நிறைய கிடைக்கின்றன. உங்கள் அறையின் அளவுக்கேற்ப இவைகளை வாங்கலாம். பெரிய அளவில் தேவையானாலும் அல்லது சாதாரணமாக லேசான நாற்காலிகள் தேவையானாலும் இடைக்கும். நல்ல டன்லப் குஷனுக்கு சாட்டின் உறை தைத்துப் போட்டால் பார்வைக்கு விலையுயர்ந்த பொருளாகக் காணப்படும்.

அலங்காரப் பொருட்கள் வைக்கும் க்யூரியோ காபினெட்டுகள் கண்ணாடிக் கதவுகளுடன் கிடைக்கும். இதை நீங்கள் உங்கள் வரவேற்பறையில் வைக்கலாம். நல்ல உறுதியான பிரம்பினால் ஆன இதன்மேல் உங்களுடைய டி. வி., வீடியோ மற்றும் ஸ்டீரியோவையும் வைக்கலாம்.

பெரிய அறையை இரண்டாகத் தடுக்கச் சிறிய சக்கரம் வைத்த தடுப்புக்கள் கிடைக்கின்றன. இதை வரவேற்பறை மற்றும் சாப்பிடும் அறையின் இடையே வைக்கலாம். வரவேற்பறையில் அழகிய செடிகள் வைக்க விரும்புகிறவர்களுக்கும் தொட்டிகளை வைக்கப் பிரம்புத் தொட்டிகள் கீழே வைக்கும்படியும் மேலே தொங்கவிடவும் கிடைக்கின்றன.

பிரம்பு சோபாக்களால் அலங்கரித்த இந்த அறைக்கு தேங்காய் நார் கார்ப்பெட்டுகள் மிகவும் எடுப்பாக இருக்கும்.

இந்தப் பிரம்பு சோபாக்களுக்கு நீங்கள் எந்த நிறம் வேண்டுமானாலும் அடித்துக் கொள்ளலாம். உதாரணமாகக் கறுப்பு, வெள்ளை அல்லது வேறு எந்த ஷேடுகளும் அடிக்கலாம். தேவையானால், வார்னிஷ் செய்து கொள்ளலாம்.

பிரம்பு திவான்களை சோபாக்களுக்கு பதிலாக உபயோகிக்கலாம். இவைகளை இரவில் படுக்கையாகவும் மாற்றிக் கொள்ளலாம்.

மேலேயிருந்து தொங்கும் கூடை நாற்காலி போன்றவைகளை தொங்கவிட்டால் அழகாக இருப்பதுடன் வசதியாகவும் இருக்கும். இவைகளைப் பராமரிப்பதும் மிகவும் சுலபம். மாதத்திற்கு இருமுறை நன்றாக தூசி தட்டி அதற்கு மேலும் அழுக்காகிவிட்டால், சோப்பு, சோடா மற்றும் தண்ணீர் விட்டு நன்றாகக் கழுவலாம்.

ரூபாய் 400 முதல் ரூபாய் 10,000 வரை எந்த விலையில் வேண்டுமானாலும் பிரம்புநாற்காலிகள்மற்றும்சோபாக்கள் கிடைக்கின்றன. அதனால் மத்தியதர வீட்டினர் மட்டுமல்லாமல் மிகவும் பணக்காரர்களும் தங்கள் பங்களாக்களை பிரம்பினால் அலங்கரிக்கலாம்.

இப்போது கரையான், செல் மற்றும் பூச்சிகள் தாக்காமல் பதப்படுத்தப்பட்டு வருகிறது.

—கலாமூர்த்தி.

வண்ணப்படம்: 'யோகா'

மைதிலி கணவனைத் தனியாக அழைத்துக் கிசுகிசுத்தாள்.

''இதோ பாருங்கோ, ஆபீஸ்லே ஆடிட் நடக்கற நேரம். இப்ப என்னாலே லீவை நெனைச்சுக் கூடப் பார்க்க முடியாது. அதுவும் இந்த மாதிரி காரணத்துக்கெல்லாம் லீவை வேஸ்ட் பண்ணவும் முடியாது... ஏன் அவளை லீவு போடச் சொல்றது... தடுக்கி விழுந்தா, லீவ் போட்டுட்டு சத்தற இல்லையா? இதுக்குப் பெரியவ என்ன... சின்னவ என்ன...?''

ராகவன் கெஞ்சும் குரலில், ''இன்னிக்கு ஒருநாள் மைதிலி... ப்ளீஸ்... என்னாலேயும் நகர முடியாது. அம்மா தெனம் தொண தொணக்கறா...''

''நோ என்னாலே முடியாது... இப்ப உங்களுக்கு ஆபீஸுக்கு சமையல் ஆகணுமா வேண்டாமா..?''

ராகவன் முகம் தொங்க வெளியே வந்த போதே, சந்துருவின் மனைவி புரிந்து கொண்டு சற்று உரக்கவே, கணவனிடம் சொன்னாள்: ''இங்க பாருங்கோ எனக்கு மட்டும் ஆபீஸ்லே வெத்து பேப்பரை கவர்லே வெச்சுத் தரல்லே... இதுவரை எல்லா லீவையும் எடுத்தாச்சு. இனிமே லீவுன்னு கேட்டா உதைக்கத்தான் வருவா— சின்ன பிள்ளை வரட்டுமே... இப்ப என்ன அவசரம் ''

இவர்கள் பேசுவது எல்லாமே மீனாட்சிக்குத் தெளிவாகக் கேட்டது. என்ன செய்வது? அந்தக் காலத்துக் கட்டையானதாலோ, என்னவோ, உடம்பு தளர்ந்து போனாலும், கண்ணும், காதும் நன்றாகவே வேலை செய்தன. இவர்கள் பேச்சிலிருந்து இனி இவர்களை நம்பிப் பயனில்லை என்பது புரிந்து போனது.

விஷயம் ஒன்றும் பெரிதில்லை. மீனாட்சியின் கணவருக்கு – இவர்களைப் பெற்ற தகப்பனாருக்குக் கண்ணாடி மாற்ற வேண்டும். ஆறு மாதமாகச் சொல்லியும் இரண்டுமுறை அவர் தடுக்கி விழுந்தும், இவர்களுக்கு நேரம் கிடைக்கவில்லை. டாக்டரிடம் அழைத்துப் போக மனைவிசனை கெஞ்சுகிறார்கள்.

அதான் சின்னவன் சொல்லிவிட்டானே.. என்ன அவசரம் என்று. சின்னப் பிள்ளையே வரட்டும்... மீனாட்சி யோசித்தாள்...

இவர்களென்ன லீவே போடாமலா இருக்கிறார்கள்? பிறந்த வீட்டு விசேஷங்களுக்குத் தவறாமல் செல்லவும், ஒன்றுவிட்ட சித்திப் பெண்ணின் சீமந்தத்திற்கு ஒத்தாசைக்கும், சினிமாவுக்கும் கச்சேரிக்கும்... இன்னும் . இப்படி எத்தனையோ...

பெற்ற பிள்ளைகளே சரியில்லை. அப்புறம் தானே மற்றவர்கள். ம்... இன்று எங்களுக்காக ஒருநாளைச் செலவழிக்க இத்தனை ஆர்ப்பாட்டம். அலைக்கழிப்பு. அன்று இவர்களுக்காக எத்தனை நாட்கள்? அவள் மனம் நினைவுகளைத் திரும்பிப் பார்த்தது....

''மீனாட்சி சாயந்திரம் வேலையெல்லாம் முடிச்சுண்டு ரெடியா இரு... லால்குடியோட கச்சேரிக்குப் போகணும்... அவரோட வாசிப்புன்னு உசிரை விடுவியே...''

அவள் மனம் சந்தோஷத்தில் துள்ளியது. ஆனால் உடனேயே அதை ஒதுக்கி விட்டு, ''ராகவனுக்கு லேசா ஜுரமாத் தெரியறது. படிக்கற கொழந்தை. இப்பவே பாக்கலேன்னு அதிகமாகப் போய்ச் சிரமப்படுவான். கச்சேரி அப்புறமா கிடைக்கும்போது போகலாம்னு... முதல்லே குழந்தையைக் கவனியுங்கோ...''

''சரி, விடு.''

இன்னொரு நாள்.

''மீனாட்சி ஆபீஸ்லே எல்லாருமா பத்து நாளைக்கு டூர் போகப் போறா. பத்ரிநாத், ரிஷிகேஷ் எல்லாம். பசங்களை அத்தை ஆத்துல விட்டுட்டுப் போய்ட்டு வரலாமா? திரும்ப இது மாதிரி கிடைக்காது...''

''ஐயையோ... இந்தச் சமயத்திலா? எல்லோருக்கும் பரீட்சை



இட்டக்க வர்ரது.. ராகவனும், சந்துருவும் பெரிய ஒளாளா போயிட்டா... அங்க, இங்க விட்டுட்டுப் போறு படிப்புல நாட்டம் இல்லாம இருப்பா... இன்னும் கொஞ்ச நாள்... இதோ அதோன்னு அவாளை ஒப் பேத்திட்டாப் பின்னுடி நிம்மதின்னு...''

''நீ என்னிக்குத் தான் கூப்பிட்ட எடத் துக்கு வந்திருக்கே... என்னவோ உன் பசங்க தான் படிக்கிற மாதிரி. எப்படியாவது ஒழி...''

அன்று அந்த நேரத்திற்குக் கோபப்பட் டாலும் பின் பிள்ளைகள் முதல் வகுப்பில் தேறி, நான், நீ என்று முன்னுக்கு வந்த போது, சந்தோஷப்பட்டு அவர்களை முன் னேற்றினரே...

மீனாட்சியின் நினைவு கலைந்த போது கண்களின் ஓரம் ஈரம் கட்டியிருந்தது. கணவரைப் பார்த்தாள். அவர் கட்டிலில் கண்களின் அவஸ்தையுடன் உட்கார்ந்திருந் தார். கணவருக்குப் பசி வந்து விடுமே

## ஊவக்கோல் பசுக்கள்



என்ற நினைவு உந்தியதும் தன்னாமையுடன் சமைக்க எழுந்தாள். எத்தனை பேருக்குச் சமைத்துப் போட்ட கைக்கு, இன்று ஒரு வேளை சமைத்துப் போட ஆளில்லை. இந்த வீட்டில் மூன்று இடத்தில் அடுப்பு எரிய வேண்டும் என்ற அவசியமில்லை. ஆனால் அப்படித்தான் எரிந்து கொண்டிருக் கிறது.

திருவல்லிக்கேணியில் இருக்க அந்தப் பெரிய வீடு மீனாட்சிக்கு மாமனார் பக்கத்தி லிருந்து கிடைத்திருக்கது. பத்து வருடங் களுக்கு முன்பு ராகவனும், சந்துருவும் சின்னப் பிள்ளை முரளியும், அமர்க்களப் படுத்தி, அட்டகாசமாய்ச் சிரித்து சந்தோ ஷத்துடன் புழங்கி வந்த வீடுதான் இன்று இப்படி...

ஐந்து வருடங்களுக்கு முன் ராகவனுக்கு மைதிலியைப் பெண் பார்த்துச் சம்மதம் தெரிவித்து, மூத்த மருமகளாய் ஏற்றுக் கொண்ட போது பிரச்னை எதுவும் இல்லை. மைதிலி வேலைக்குப் போனதால் மீனாட்சியே சமையலைப் பார்த்து, வீட்டைப் பார்த்துக்




கொண்டிருந்தாள். முடியா விட்டாலும் வேறு வழியில்லை.

மீனாட்சியால் முடியாவிட்டால், மைதிலி யின் முணுமுணுப்பு தொடங்கிவிடும். நாமும் தான் என்ன செய்கிறோம் என்று மீனாட்சியே இழுத்து விட்டுக் கொண்டாள்.

அடுத்த வருடமே சந்துருவுக்குக் கல்யாண மாகி அவனுக்கும் மனைவி வந்தாள் — வேலைக்குப் போகும் பெண் வேண்டாம் என்று கடுத்தும், சந்துரு பிடிவாதமாய்ப் பண்ணிக் கொண்டான். அவன் மனைவி மைதிலியை விடக் கெட்டிக்காரியாய் இருந் தாள்.

குடும்பத்தில் கலகலப்பு இருக்கும் என்று நினைத்ததற்கு மாறாக சலசலப்பே அதிக மிருந்தது. அவன் வந்த இரண்டாவது மாதத்தில்—

இரண்டு நாட்களாக மீனாட்சி தலைசுற் றலும், வயிற்றுப் போக்குமாய் படுத்த படுக்கையாய் இருந்தாள்.

முதல் நாள் மைதிலி பொறுப்புடன் பார்த்துக் கொண்டாள். இரண்டாம் நாள், மூன்றும் நாள் என்று வளர்ந்துகொண்டே போய் ஒரு வாரமாகி விட்டபோது, வீட்டில் பிரச்னையும் வளர்ந்து விட்டிருந்தது.

மைதிலியும், சந்துருவின் மனைவியும் ஒற்றுமையாக இல்லாததால், அவரவர்கள் தங்கள் பிரச்சினைகளை சுயநலத்துடன் பெரி தாக்கி, விரிசல் ஏற்படுத்தினர்.

சந்துருவின் மனைவி எந்த ஒத்தாசையும் செய்வதில்லை என்று மைதிலி முகத்தை உயரத் தூக்கி வைத்துக் கொண்டு, தன்னால் ஆபீஸுக்கும் போய்க் கொண்டு சமையலையும் இத்தனை பேருக்குச் செய்ய முடியாது என்று போர்க் கொடி உயர்த் தினாள். சின்னவள் தானும் சளைத்தவளில்லை என்று நிரூபிக்க கணவனுடன் இரண்டு நாட்கள் பிறந்தகம் சென்று விட்டாள்.

அந்த ஆத்திரம் முழுவதையும், இரவு கணவனிடம் கொட்டித் தீர்த்ததில் காலை யில் ராகவன் மாறிப் போனான்.

அன்று மாலை சந்துரு வந்ததும் தன் முடிவை வெளிப்படுத்தினான்:

"இதோ பாரு சந்துரு. அம்மாவால முடியலை. அவ படுத்துட்டா. இந்த ஆத்தையும், பார்த்துண்டு, வேலைக்கும் போக மன்னியாலே முடியாது... உன் பெண்டாட்டி விரலை அசைக்கிறதில்லே... தனியாப் போயிடலாம்னு, இத்தனைப் பெரிய வீட்டையும் வெச்சுண்டு, வெளியில வாட கையும் குடுக்க முடியாது. அதனால இந்தாத்துலேயே ரெண்டு பக்கமா தனித் தனியா இருந்துக்கலாம். ஒருத்தர் பாடு மத்தவாளுக்கு வேண்டாம்."

சந்துரு ஏதோ சொல்ல வாய் திறப்ப தற்கு முன், அவன் மனைவி ஜாடை காட்டினாள். அவளுக்கு இந்தத் திட்டம் பிடித்திருந்தது. தன்னுடைய வருமானமெல் லாம் இந்தக் குடும்பத்திற்கே போய் விடுமே என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தவளுக்கு இந்த தனிக் குடித்தன முறை பிடித்திருந் தது. வாடகைப் பணமும் மிச்சமாகிறது. வீட்டைப் பார்த்துக் கொள்ள இரண்டு கிழங்கள். சட்டென்று மாமியார், மாமனா ரது நினைவு வந்ததும் கணவனிடம் சொன் னாள்:

"என்ன அம்மாவும், அப்பாவும் யார் பொறுப்புல இருக்கறது"

ராகவன் இந்தக் கேள்விக்குத் தயாராய் இருந்தவனைப் போல் பதில் சொன்னான்: "அம்மாவோட சாப்பாடு, துணிமணி பொறுப்பெல்லாம் என்னோடது. அப்பாவை பார்த்துக்கறது உன்னோடப் பொறுப்பு... ஏதாவது அதிகப்படி செலவுன்னு முரளியக் கேட்டுக்கலாம்..."

இந்தப் பேச்செல்லாம் அரைகுறையாய் காதில் விழுந்த போதே, மீனாட்சி துவண்டு விட்டாள். இவர்களாகவே தீர்மானித்து, முடிவெடுத்து முடித்தபின், அவளிடம் யோசனை என்று பெயருக்குக் கேட்டபோது, அவள் பதில் சொல்லாமல் மௌனமாய் இருந்து விட்டாள். தன் கணவருக்கு

# வியர்க்குருவினின்று நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

## நைஸில் உபயோகியுங்கள்

**வியர்க்குருவினின்று விரைவில் நிவாரணம் பெறுங்கள்.**






HTB-GLL/88G6

நைஸில், மருந்துக்கலவையுள்ள பவுடர் ஆகும். வியர்க்குருவின் எந்தவிதத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே விசேஷமுறையில் தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவ தனின்றும், பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது இது.

1. அளவுக்கு மீறிய வியர்வையைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது. 3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.




உடல் நலத்தின் உறைவிடம்

**க்ளாக்ஸோ**

இரண்டு வருடம் முன்பாகவே, தள்ளாமை வந்து காது சுத்தமாய் அடைத்து, கண்களும் சிறிது பழுதாகி விட்டதற்கு இப்போது சந்தோஷப்பட்டாள். இந்த வரை நல்லது.

பிள்ளைகளின் இந்த முடிவே அவளை உலுக்கித் தளர்த்தி விட்டது. இவர்களுக்கு எப்படிப் புரிய வைப்பது? புரிந்து கொள்ளும் நிலையிலும் அவர்கள் இல்லை. இனி அவர்களை அடக்கி உட்கார்த்தி வைக்கும் பருவமும் இல்லை அது. பெற்றவர்களைப் பிரித்து வைத்துச் சோறு போடும் இவர்களுக்காகவா அன்று அத்தனை மாய்ந்து போனேன் என்று மீனாட்சியின் மனம் அரற்றியது.

மறுநாளிலிருந்து இரண்டு குடித்தனங்கள் ஆரம்பமானது.

மீனாட்சிக்கு கைஉழைப்பு இருந்ததால் பிரச்னை இல்லை. காலையில் எழுந்து குளித்து, காபி போட்டு, மகனுக்கும் மருமகளுக்கும் கொடுத்து, பின் விளக்கேற்றிவிட்டு சமைத்து முடித்ததும் இருவருக்கும் பரிமாறி... இப்படியே உடம்பு உழைத்துக் கொண்டிருந்தது, மைதிலிக்கு சௌகரியமாய் இருந்தது. வீட்டுப் பிரச்னையே இல்லாமல் ஹாயாகக் கணவனுடன் சுற்ற முடிந்தது.

கிழவரின் பாடுதான் திண்டாட்டமாகி விட்டது. சந்துருவின் மனைவிக்கு மஹா எரிச்சல். இந்தக் காது கேளாத கிழத்துக்கு, நேரத்திற்குப் பணிவிடை செய்ய வேண்டுமே என்று. ஆறு மணிக்கு எழுந்திருப்பவருக்கு, ஏழு மணிக்குக் காப்பியும், ஒன்பதுமணிக்கு அரக்க, பரக்க அவருக்குச் சாப்பாட்டைப் போட்டுவிட்டு ஓடுவதும்...

இரவில் பாதி நேரங்களில் வெளியே சாப்பிட்டுவிட்டு, இவருக்காக எரிச்சலுடன் ஏதாவது கிளறுவதும்... மாமியார் பார்த்துக் கொள்ள மாட்டார்களா என்ற எண்ணத்தில், மத்யானத்திற்கு ஒன்றுமே செய்யாமல் போய் விடுவதும்...

மீனாட்சி மனதுக்குள்ளே அழுது கொண்டிருப்பாள், இந்தக் காட்சிகளை பார்த்துத் தாங்க முடியாமல், ராகவனின் வீட்டிலிருந்து ஏதாவது செய்து தரலாம் என்றால் இருவரும் ஒத்துக் கொள்ள மாட்டார்களே.

பத்துப் பதினைந்து நாட்கள் கூடச் சென்றிருக்காது. இந்த அவலத்தை தாங்கிக் கொள்ள முடியாமல் மீனாட்சி பிள்ளைகளிடம் கத்தினாள். "இதோ பாருங்கடா. நீங்க ரெண்டு பேரும் எப்படியாவது போங்கோ.. உங்களோட சேர்த்து அவரையும் ஏன் வதைக்கறீங்க? எங்களை நீங்க யாரும் பார்த்துக்க வேண்டாம். வாடகைப் பணமா நெனச்சுண்டு பணத்தைக் குடுத்திடுங்கன்னு, நானும், அப்பாவும், இதோ இந்த ரூம்லே இருந்துக்கறோம்... என்னாலே அவர் வயிறு வாடறதை பார்த்துண்டிருக்க முடியாது... எங்கரெண்டுபேருக்குச் சமைச்சுக்க என்னாலே முடியும்..."

அன்றிலிருந்து தான் அந்த வீட்டில் மூன்று இடத்தில் அடுப்பு எரியத் தொடங்கியது.

அதன் பிறகு இரண்டு மருமகள்களும், உள்ளூர சந்தோஷமாகவே இருந்தனர். பிரச்சினை இன்னும் எளிதாகி விட்டதைப் போல் நிருப்திப்பட்டனர். ஆபீஸ், வீடு, அவரவர்கள் வீட்டு வேலை என்று கச்சிதமாய் குடும்பம் நடத்தினர். பால்வாங்கி வைக்கவும், வீட்டைப் பார்த்துக் கொள்ளவும் மாமியார். அடுத்து வந்த வருடங்களில் ஆளுக்கு ஒரு குழந்தை பெற்றுக்கொண்டு, மாமியாரின் பராமரிப்பில், விட்டுச் செல்லும் நிம்மதியுடன் ஆபீஸ் சென்று வந்தனர்.

மீனாட்சிக்குத்தான் சுமை அதிகமாகி விட்டது. சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டு அக்கடா என்றும் இருக்க முடியாமல், இரண்டு குழந்தைகளையும் பார்த்துக்

> வெந்தயம் மூன்று டீஸ்பூன் எடுத்து முதல் நாள் இரவு ஊற வைத்து மறுநாள் காலையில் அம்மியில் நைசாக அரைத்துத் தலையில் தடவி சிறிது நேரம் ஊற வைத்துக்குளித்தால் (தலையை நன்கு அலசி) தலையில் உள்ள அழுக்கு, பிசுக்கு எல்லாம் பறந்து போகும். தலைமயிர் பஞ்சு போல் இருக்கும். உடம்புக்குக் குளிர்ச்சியும் கூட.
>
> —ரமாசம்பத்.

கொள்ள வேண்டும். அவைகளின் துறுதுறுப்புக்கு ஈடு கொடுக்க முடியாத வயது. சரியாகக் கண் தெரியாத கணவர். வேலைக்காரியிடம் வேலை வாங்கி, பால் வாங்கி மூடி வைத்து இரண்டு குழந்தைகளுக்கும், அவரவர்கள் வீட்டிலிருந்து எடுத்துச் சாப்பிட வைத்து, தூங்கப் பண்ணி... இப்படி இன்னும் எத்தனையோ...

மீனாட்சி முடியாமல் தான் செய்து கொண்டிருந்தாள். இந்தப் பொறுப்புக்களிலிருந்து விடுதலை கிடைத்து, யாராவது உட்கார்த்தி வைத்து சமைத்துப் போட மாட்டார்களா என்று மனம் ஏங்கியது. திருமணமான நாளிலிருந்து இன்று வரை உழைத்துக்கொண்டிருந்தஉடல் ஓய்வுக்காக கெஞ்சியது. செய்து முடித்து விட்ட, பழைய கடமைகள், மாற்று உருவத்தில், முதுமையிலும் வந்து தாக்கும் போது மனம் கசந்து தான் போகிறது.

இவர்களுக்கு எப்படிப் புரிய வைப்பது? முதுமை என்பது உடலுக்கு ஓய்வு அளிக்கப்

படவேண்டிய பருவம்தானே தவிர, மனமும், உணர்ச்சிகளும், செத்து மடிந்து விடும் பருவம் அல்ல என்பதை.

இளமையில் உழைத்துக் கொட்டியதை யெல்லாம் விரயமாக்கி விட்டு 'வயதான வர்கள்தானே, வீட்டைப் பார்த்துக் கொண்டு, குழந்தைகளைப் பார்த்து இரண்டு வேலைகளையும் செய்தால் குறைந்தா போய் விடுவார்கள். யாருக்காக செய்கிறார்கள்... பெற்ற பிள்ளைகளின் குடும்பத்துக்காகத் தானே... சும்மா வீட்டிலே உட்கார்ந்து என்ன செய்யப் போகிறார்கள்' என்று பேசி, இரும்ப ஒட்டத்தில் போட்டு ஆன்மாவையே நசுக்கி விடுகிறார்களே...

இதிலும் எத்தனை கேவலம். உழைக்க வலுவுள்ளவர்கள் சிறிது சமாளித்துக் கொள்ளலாம். முடியாதவர்கள்? மீனாட்சிக்கு தன் கணவரை நினைக்கும் போதே கண்கள் கசிந்தது.

அவள் கடைசிப் பிள்ளை முரளியை அதிகம் நம்பியிருந்தாள்.

வெளியூரில் வேலையிலிருந்த முரளிக் காவது, வேலைக்குப் போகாத பெண்ணைப் பார்த்து, சற்று வசதிக் குறைவான இடமாய் இருந்தாலும் தேவலை, அடக்கமாய் ஆத்துக் காரியம் பார்த்துக் கொள்பவளாய் இருப்பவளுக்கு, முடித்துக் கொடுக்க நினைத் இருந்தாள். முரளியின் மனைவியாவது மனதுக்கு இதமாய் இருப்பாள் என்று நம்பியவளுக்கு மேலும் அதிர்ச்சி தான்.

> கூழ்வற்றலை வேர்கடலையை வறுப்பது போல மணலில் இட்டுப் பொரித்தால் கரகரப்பாகவும், பெரிதாகவும் பொரியும். எண்ணெயே தேவையில்லை.
> —கே.பி. பரமேஸ்வரி

அவன் எதற்குமே இடம் கொடுக்காமல், இரண்டு வருஷங்களுக்கு முன், ஒரு கிறிஸ்துவப் பெண்ணை மணந்து கொண்டு, அம்மாவிற்குச் சகிப் படாது என்று தெரிந்து கொண்டு, அங்கேயே தங்கி விட்டான். மூன்று மாதங்களுக்கு ஒரு முறை வந்து, இரண்டு நாள் தங்கி விட்டுப் போவான். அவ்வளவுதான்.

முரளியின் இந்தச் செய்கைக்குப் பிறகு, அவளுக்கு எல்லாமே இவர்கள் தான் என்று ஆகிவிட்டதால், மூன்று அடுப்பு எரியும் அவஸ்தையையெல்லாம்பொறுத்துக்கொண்டு அவர்கள் பேச்சுக்களை எல்லாம் ஒதுக்கி விட்டு, தள்ளாமையை பொருட்படுத் தாமல், வேலை செய்து கொண்டிருக்கிறாள்.

இதற்காக மட்டும்தானா? இல்லை.

அத்தனையும் மீறி அந்தக் குழந்தைகள், 'பாட்டி, பாட்டி' என்று கழுத்தைச் சுற்றும் போது, கண்ணுக்குப் புலப்படாத ஒன்று, உடலில் சென்று கரைகிறதே, அந்தக் கரைச்சலில் புண்பட்ட மனம் கூட சில நிமிடங்களுக்குப் பூவாய் மாறிப் போகிறதே!

இதோ அன்பையும், பாசத்தையும் பொழிந்து வளர்க்கப்பட்ட பிள்ளைகள் மாறிப்போய், வளர்ந்து ஆளாக்கிவிட்ட பெற்றவர்களை — உயிரும் உணர்வுமாய் இருப்பவர்களை — உயிரற்ற வைக்கோல் பசுக்களாய் நடத்தும் அவலங்கள் எத்தனை இடங்களில்நிகழ்ந்துகொண்டிருக்கின்றன.

வயதான பெற்றோர்கள் என்றாலே இடைஞ்சலாய், வைக்கோல் பசுக்களாய் நினைத்து ஒதுக்கும் இவர்களிடம் அன்பை யாசிக்கவா முடியும்!

மீனாட்சியின் கண்களிலிருந்து சூடாகக் கண்ணீர் இறங்கியது. மனம் வழக்கத்திற்கு அதிகமாய்க் கனத்தது. கணவரை நினைத்த போது கண்ணீர் அதிகமானது. ம்... அவர் இப்படி பொசுக்கென்று ஒடுங்கிவிட்டாரே. கண்களில் பொறை வளர்ந்து, ஆபரேஷன் செய்ய நான் பார்த்துக் கொண்டு.... கண்ணாடியை மாற்றிக் கொள்ள முடியாமல் தடுக்கி விழுந்து கொண்டு...

மீனாட்சி சுய உணர்வுக்கு வந்தாள். பேரனும், பேத்தியும் பாட்டி, பாட்டி என்று உலுக்கினர். சமைக்க வேண்டும் என்று உள்ளே வந்தவள் இவர்கள் பேச்சால் அடிபட்டு, அப்படியே பிரமை பிடித்து உட்கார்ந்து விட்டிருக்கிறாள். எத்தனைநேரமாய் உட்கார்ந்திருந்தாளோ?

எல்லோரும் அவரவர்கள் வேலையைப் பார்த்துக் கொண்டு சென்று விட்டிருந் தனர். குழந்தைகள் மதுவும், சுரேஷும் தான் பாட்டி, பாட்டி என்று அழைத்துக் கொண்டிருந்தனர். மீனாட்சி எழுந்திருக்க நினைத்தாள். முடியவில்லை... உடல் கல்லாய் கனத்தது. எத்தனை முயன்றும் கையைக்கூட அசைக்க முடியவில்லை.

"மீனாட்சி சமையல் ஆச்சன்னா, ஒருவாய் போட்டியானா சாப்டுட்டு படுத்துப்பேன்.."

கணவரின் குரல் எங்கோ தூரத்தில் கேட்டது... சிரமப்பட்டுக் கண்களைத் திறந்த போது, மங்கலாய் அவர் நடந்து வருவது தெரிந்தது... திரும்பவும் ஏதோ மசமசப்பு கண்களை மறைத்தது.

"ஐயோ... நீங்க எதுக்கு எழுந்து வர்றேள்... ரெண்டுநாள் முன்னாடிதானே விழுந்தேள். டேய், அப்பாவுக்கு கண்ணைக் காட்டணும்டா... முரளி வந்தா அழைச் சுண்டு போவானா..." ஏதேதோ பேச நினைத்தாள். ஆனால் உதடு கூட அசைய வில்லை.

இதற்குள், மதுவத்தி விளையாடிக் கொண் டிருந்த சக்கர ரயிலின் மேல் அவர் காலை வைத்து விட, அது வழுக்கிக் கொண்டு ஓட, இவர் தொப்பக்கடீர் என விழுந்ததும், இரண்டும் சேர்ந்து ஒரே குரலில் "பாட்டி' தாத்தா விழுந்துட்டார், எழுந்து வாங்கோ பாட்டி" என்று அலற...

இவை எதுவுமே புரிந்து கொள்ள முடி யாமல், மீனாட்சி சாய்ந்து விட்டிருந்தாள்.

# எல்லோருக்கும் வருவதுதான்!





பெண்களுக்கென்று பொதுவாகச் சில அசௌகர்யங்கள் இருக்கும். குடும்பத்தில் உழலும் பெண்கள் டாக்டரைப் பார்க்காமலே தள்ளிப் போட்டுக் கொண்டு போவார்கள். இவர்களுக்கு அதிகம் வரும் வியாதி என்ன என்று பார்க்கலாம்.

1. கல்யாணமாகாதவர்கள்.
2. திருமணமானவர்கள்
3. நாற்பது வயதிற்கு மேற்பட்டவர்கள்

என மூன்று வகைகளில் இவர்களுடைய நோயைப் பிரிக்கலாம்.

## திருமணமாகாதவர்கள்

- நம் நாட்டுப் பெண்கள் சாதாரணமாக 12 அல்லது 13 வயதில் பருவம் அடைகின்றனர். பருவமடைந்த பெண்களில் பெரும்பாலானவர்களுக்கு இருக்கக் கூடிய பிரச்னை முதல் இரண்டு வருடங்களுக்கு மாதவிலக்கு அதிகமான இடைவெளிக்குப் பின் வருவதேயாகும். 28 அல்லது 30 நாட்களுக்கு ஒரு முறை வருவதற்குப் பதிலாக இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்கு ஒரு முறை வரலாம். இதற்காகக் கவலைப்பட வேண்டியதில்லை. இரண்டு அல்லது மூன்று வருடங்களுக்குப் பிறகு இது சரியாகி விடும்.

- திருமணமாகாத பெண்களில் சிலர் மாதவிலக்கின் போது வயிற்று வலியால் அவதிப்படுவது உண்டு. இது சகஜமானது தான். பலருக்கு இந்த வலி தாங்க முடியாத அளவிற்குப் போகும். அதிகம் செல்லம் கொடுத்து வளர்க்கப்பட்டதாலோ, மனச் சோர்வினாலோ, கவலை தரும் குடும்பச் சூழ்நிலையாலோ, பரீட்சை பயத்தாலோ இவ்வாறு நிகழலாம். திருமணமாகி குழந்தை பிறந்த உடன் சரியாகி விடும். அப்போதைக்கு ஏதேனும் வலி நிவாரணி மாத்திரைகளைச் சாப்பிடலாம்.

- அதிகமான உதிரப் போக்கு இருத்தல் மற்றொரு பிரச்சினை. இதை மருத்துவ ஆலோசனையுடன் மருந்துகள் மூலமாகக் குணப்படுத்தலாம். ரண சிகிச்சை தேவையில்லை.

## திருமணமானவர்கள்

- திருமணமான பெண்களுக்கு மாதவிலக்கின்போது கடுமையான வயிற்று வலி (Dysmenorrhoea) இருப்பின், உடனடியாக மருத்துவரை சந்தித்துக் கட்டி ஏதாவது இருக்கிறதா எனப் பரிசோதித்து விடுவது நல்லது.

- அதேபோல அதிகமான உதிரப்போக்கு இருந்தாலும் தொற்று நோய்கள் அல்லது கட்டிகள் ஏதும் இருக்கிறதா என்று நிச்சயித்துக் கொள்ளுதல் வேண்டும்.

- சீரற்ற மாத விலக்குகள் — இரு மாதங்களுக்கு ஒரு முறை என ஏற்பட்டு அதிகமான உதிரப் போக்கும் இருந்தால் மருத்துவ ஆலோசனை பெற்று மருந்துகளோ அல்லது அறுவை சிகிச்சையோ தேவையா என நிச்சயித்துக் கொள்ளலாம்.

- இடுப்பெலும்பு அல்லது அடிவயிற்று எலும்புப் பகுதியில் ஏற்படும் நோயை 'பெல்விக் இன்ஃபெக்ஷன்' என்பார்கள். இதன் காரணமாக அடிவயிற்றில் கடுமையான வலி ஏற்படலாம். உடனே மருத்துவரைக் கலந்து ஆலோசித்து க்ஷயரோகம் போன்றவை இல்லை என நிச்சயித்துக் கொள்ள வேண்டும். குழந்தை பிறந்த பின்னே, கருச்சிதைவின் விளைவாகவோ இது ஏற்படலாம். இந்நோய் கருப்பப்பை போன்ற தனிப்பட்ட உறுப்புகளையோ அல்லது திசுக்களையோ பாதிக்கலாம்.

- சிறுநீரகக் குழாயில் நோய் ஏற்படுதல் (urinary Infection) பெண்களை அதிகமாகப் பாதிக்கும் நோய். பெண்களது சிறுநீர்க் குழாய் மிகவும் குறுகியதாக இருப்பதால் தொற்று நோய்கள் எளிதாகப் பற்றுகின்றன. கருத்தரிக்கும் காலத்தின் போது கர்ப்பப்பை விரிவடைந்து சிறுநீரகக் குழாயின் மீது அழுத்துவதால் இந்த நோய் வரும் சாத்தியக் கூறுகள் உள்ளன.

- Leucorrhoea — இதை வெள்ளைப்படுதல் என்பர். வெளிப் படுகையில் எரிச்சலோ,

தூர்வாடையோ இல்லாது இருப்பின் பிரச்சினை ஏதும் இல்லை. மாதவிலக்கிற்கு இடையிலோ, அல்லது மாதவிலக்கிற்கு முன்போ, கருத் தரித்திருக்கும் போதோ இவ்வாறு ஏற்படுதல் சகஜம். ஆனால் துர்நாற்றத்துடனோ, சிறிதளவு இரத்தப் போக்குடனோ, வெள்ளைப்படுதல் இருந்தால், அப்பகுதியில் எரிச்சலும் இருப்பின், மருத்துவ ஆலோசனை பெறுதல் அவசியம். ஏனெனில் இதற்குப் புற்றுநோய் காரணமில்லை என நிச்சயித்துக் கொள்ள வேண்டும்.

## நாற்பது வயதிற்கு மேல்..

● சாதாரணமாக 45–50 அல்லது 55வயதிற்குள் மாதவிலக்கு நின்றுவிட வேண்டும். இவ்வாறு மாதவிலக்கு நிற்காது, அதிகமான உதிரப் போக்கு இருந்தாலோ, மாதவிலக்கு நின்று சில மாதங்களுக்குப் பின்னர் மீண்டும் உதிரப் போக்கு இருந்தாலோ மருத்துவ ஆலோசனையுடன் டி. அண்ட் சி. செய்து கொள்ள வேண்டும். புற்றுநோய் இல்லை என்பதை ஊர்ஜிதப்படுத்திக்கொள்ள வேண்டும்.

● இவற்றைத் தவிர சாதாரணமாக வயது பேதமின்றி எல்லாப் பெண்களுக்கும் இருக்கக் கூடிய பிரச்சினை முதுகு வலி.

குழந்தைகள் பிறப்பதற்கு முன் இத்தகைய முதுகு வலி இருப்பின், சிறுநீரகக் குழாயில் ஏற்பட்டுள்ள நோய் காரணமாக இருக்கலாம். அடி வயிற்றெலும்பு நோயும் காரணமாக இருக்கலாம். கர்ப்பமாக இருப்பவர்களுக்கு முதுகு வலி இருந்தால் கர்ப்பப் பையினை அடிவயிற்றெலும்புடன் இணைக்கும் பிணைப்புச்சதை (Ligaments) இழுக்கப்படுவது காரணமாக இருக்கலாம். குழந்தை பிறந்த பிறகு உடற்பயிற்சிகளால் இந்த முதுகு வலியினை ஓரளவிற்குச் சரி செய்து விடலாம்.

தொகுப்பு: தமயந்தி.
தகவல்கள்: டாக்டர் திருமதி. –
சுஹாசினி குணசேகரன்.

## பருப்பு உருண்டைக் குழம்பு

தேவையான பொருட்கள்:

(5 பேர் உள்ள குடும்பத்திற்கு.)
துவரம் பருப்பு – அரை ஆழாக்கு.
கடலைப் பருப்பு – 1 ஆழாக்கு.
பயத்தம் பருப்பு – அரை ஆழாக்கு.
மிளகாய் வற்றல் – 6,
உப்பு – தேவையான அளவு.
பெருங்காயம் – சிறு துண்டு.
இவை அனைத்தும் பருப்பு உருண்டை செய்வதற்கு.
குழம்பிற்கு:
மிளகாய் வற்றல் – 6,
கொத்துமல்லி விதை – 2 டீஸ்பூன்.
சீரகம் – 1 டீஸ்பூன்.
து. பருப்பு – 1 டீஸ்பூன்,
க. பருப்பு – 1 டீஸ்பூன்,
தேங்காய்த் துருவல் – அரை மூடி.
புளி – எலுமிச்சம் பழ அளவு.

தாளிக்க:

நல்லெண்ணெய் – 4 டீஸ்பூன்.
கடுகு, உளுத்தம்பருப்பு – 1 டீஸ்பூன்.
கறிவேப்பிலை, கொத்துமல்லித்தழை.

செய்முறை:

முதலில் துவரம் பருப்பு, கடலைப் பருப்பு, பயத்தம் பருப்பு மூன்றையும் ஒன்றாகப் போட்டு ஊற வைக்க வேண்டும் ஊறிய பின் கல் அரித்துத் தண்ணீரை நன்றாக வடிக்க வேண்டும். மிக்சியிலோ அல்லது ஆட்டுக்கல்லிலோ போட்டு கரகரப்பாக அரைக்க வேண்டும். அரைக்கும் பொழுது பருப்புடன் ஆறு மிளகாய் வற்றல் 1 துண்டு பெருங்காயம் உப்பு சேர்த்து அரைக்கவேண்டும். அரைத்த மாவில் கறி வேப்பிலை, கொத்துமல்லித் தழை முதலியவற்றைப் பொடியாக நறுக்கிப் போட்டுப் பிசைந்து, சிறு சிறு உருண்டைகளாக உருட்டி வைத்துக் கொள்ள வேண்டும். இந்த உருண்டைகளை இட்லித் தட்டில் வைத்து வேக வைத்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

புளியை வெந்நீரில் ஊறவைத்து கரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். மிளகாய் வற்றல், கொத்துமல்லி விதை, சீரகம், துவரம் பருப்பு, கடலைப் பருப்பு முதலியவற்றைச் சிறிது எண்ணெய் விட்டு வாணலியில் வறுத்து எடுத்துக் கொள்ள வேண்டும். இதை அம்மியிலோ அல்லது மிக்சியிலோ, நைசாக அரைக்க வேண்டும். அரைக்கும் பொழுதே தேங்காய்த் துருவலையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

புளிக்கரைசலில் அரைத்த விழுது உப்பு, மஞ்சள்பொடி போட்டுக்கொதிக்க வைக்கவும். கொதிக்கும் பொழுது வேக வைத்த உருண்டைகளையும் கொத்து மல்லித் தழையையும் போட்டு கடுகு தாளித்துக் கொட்டி இரண்டு டீஸ்பூன் தேங்காய் எண்ணெய் விட்டு ஒரு கொதி வந்ததும் இறக்கி விடவும்.

திடீரென்று விருந்தினர் வந்தாலும் காய்கறி இல்லாத நாளிலும் இந்தக் குழம்பு ஒரு வரப் பிரசாதமாகக் கைகொடுக்கும். குழம்பு பிசைந்து சாப்பிடவும் உருண்டை தொட்டுக்கொள்ளவும் பொருத்தமாக இருக்கும்.

பின் குறிப்பு: அரை மூடி தேங்காய்த் துருவல் அதிகம் என்று நினைப்பவர்கள் கொஞ்சம் தேங்காய்த் துருவல், கசகசா கொஞ்சம், பச்சரிசி 1 டீஸ்பூன் வைத்து அரைத்துக் கொள்ளலாம்.

–திருமதி. ஆ. சுப்புலட்சுமி கணபதி.

# அழகுக்குக் கொஞ்சம் திராட்சை!

● அழகுக் கலை நிபுணர்கள் உலக முழுவதும் திராட்சை ரசத்தைத் தோலில் சுருக்கத்தைத் தவிர்க்க உபயோகிக்கிறார்கள். சரும நோய்களுக்கும் எரிச்சலுக்கும் திராட்சைச் சாறு, இலைகள் உபயோகப்படுகின்றன. முகப் பரு, கட்டி முதலியவைகள் குணமடைய திராட்சை ரசச் சாற்றைக் குடிப்பது பயனைத் தரும். சொறி சிரங்குகளும் காய்ந்து விடுகின்றன.

● திராட்சைப் பழமும் உலர்ந்த திராட்சையும் ஆயுர்வேத யுனானி வைத்தியத்தில் உபயோகப்படுகின்றன. ஜீரண சக்தியை வலுப்படுத்தி, குடல் புண், சிறுநீரகம் முதலியவற்றைச் சுத்தப்படுத்துகிறது. மலச் சிக்கலை தவிர்த்து, அதனால் ஏற்படும் பருக்கள், கண்களின் கருவளையம் முதலியவற்றை நீக்குகிறது.

● திராட்சை உடலுக்குக் குளிர்ச்சி அளிக்கிறது. காபி, டீ முதலிய பானங்கள் அருந்துவதால் ஏற்படும் அஸிடிடியைத் தவிர்க்கிறது. திராக்ஷாவா ச்யவனப்ராசா முதலிய ஆரோக்கியத்திற்கான புஷ்டி டானிக்குகள் திராட்சை சாற்றில் தயாரிக்கப்பட்டவையாகும்.

திராட்சைக் கொட்டையிலிருந்து ஒரு மஞ்சள் நிற எண்ணெய் எடுக்கப்படுகிறது. அது சோப் தொழிற்சாலையில் உபயோகப் படுகிறது.





- உலர்ந்த சருமத்தை உதிரச் செய்யத் திராட்சைச் சாற்றைப் பன்னீருடன் கலந்து உபயோகப்படுத்தலாம். இந்தச் சாற்றை சருமம் மிருதுத் தன்மை அடையவும் பயன்படுத்தலாம். எலக்ட்ராலிஸினால் முகத்தில் ஏற்படும் கறும் புள்ளிகளை எடுக்கும்போது சில சமயம் ரத்த நாளங்கள் பிளவுபடுகின்றன. அதற்கும் முகத்தில் அதனால் ஏற்படும் சிறு வீக்கங்களுக்கும் திராட்சை சாற்றை தடவுவதன் மூலம் குணம் காணலாம்.
- தொண்டை கரகரப்பு, வாய்ப் புண் முதலியவற்றிற்கும் திராட்சைச் சாற்றைக் கடைத்துக் கொப்பளித்தால் பயன் கிடைக்கிறது. கறுப்புத் திராட்சையிலிருந்து ஒரு வகை சிவந்த சாயம் வெளிப்படுகிறது. 'இநேஸயானின்' என்ற இந்தச் சாயம் லிப்ஸ்டிக், ரூச் முதலிய அழகு சாதனங்களில் உபயோகப்படுகிறது.

- தினந்தோறும் திராட்சை உட்கொள்வதால் சருமத்தின் பளபளப்பு அதிகரிக்கும். தலை சுற்றல் ஏற்படாமல் ரத்த ஓட்டத்தை சீரடைய வைக்கும்.
- குழந்தைகளுக்கு உலர்ந்த திராட்சையை வெந்நீரில் மசித்துக் கொடுத்தால் மலச் சிக்கல் ஏற்படாது.
- பத்து திராட்சைப் பழங்களை நன்றாக ஒரு டம்ளர் நீரில் கொதிக்கவைத்துத் தண்ணீர் அரை டம்ளராக வற்றிய பின் வடிகட்டி அருந்தினால் மாதவிடாய் சமயங்களில் ஏற்படும் வயிற்று வலி நீங்கும்.

- வயிற்றில் சூட்டினால் பாதிப்பு ஏற்பட்டால் பத்து பதினைந்து திராட்சைப் பழங்களைத் தண்ணீரில் இரவு ஊறவைத்துக் காலையில் தோலை நீக்கிச் சிறிது சர்க்கரை கலந்து குடிக்க வேண்டும்.

- காலி வயிற்றில் காலை எழுந்து ஒரு கப் திராட்சைச் சாறு அருந்தினால் மைக்ரேன் தலைவலி நன்றாகக் குறையும். அதிகத் தலைவலி இருந்தால் கருவேப்பிலைச் சாற்றைக் கலந்து குடிக்கவும்.
- ஜுரத்தினால் வாய்க் கசப்பு, வாயிலெடுத்தல் முதலியவை குறைய பத்து உலர்ந்த திராட்சையை நசுக்கிக் கொதிக்கவைத்துச் சிறிது மிளகுப் பொடி கலந்து கொடுக்கலாம்.
- நெஞ்சில் கபம் இல்லாத உலர்ந்த இருமலுக்கு உலர்ந்த திராட்சையைத் தோசைக் கல்லில் வாட்டி அதில் உப்பு மிளகு தூவி சுவைத்தால் பயன் தரும்.
- கண் எரிச்சலுக்கும், உலர்ந்த திராட்சை ஊறவைத்து பிழிந்து சாற்றைக் குடித்தால் பயன் தரும்.

-ரேகா




**பொ**துவாக 'அறுவை சிகிச்சை' என்ற சொல்லைக் கேட்டவுடனேயே மனதில் பயம். அறுவை சிகிச்சை பற்றிய தவறான எண்ணங்களும், சந்தேகங்களும் ஏற்படுகின்றன. சிலர் அறுவை சிகிச்சையினால் உடலில் நிரந்தர ஊனம் ஏற்பட வாய்ப்புள்ளதாகக் கூட எண்ணி விடுகின்றனர். மருத்துவத் துறையில் 'அறுவை சிகிச்சை' இன்றியமையாத ஒரு பாகம் ஆகும். மருந்து, மாத்திரையினால் குணப்படுத்த இயலாத சில நோய்களை அறுவை சிகிச்சையினால் நிரந்தரமாகக் குணப்படுத்த முடியும்.

இரண்டாவது உலக மகா யுத்தத்திற்குப் பிறகு அறுவை சிகிச்சை மிகவும் பிரபலமடைந்து இருக்கிறது. அறுவை சிகிச்சை பிரபலமடைவதற்கு 'ஆன்டி-பயாடிக்ஸின்' புதுமையான, நவீனமான கண்டுபிடிப்புகளும், ரசாயனத் துறையில் ஏற்பட்ட முன்னேற்றமும் 'அனெஸ்தீஷியா' துறையில் ஏற்பட்ட முன்னேற்றமுமே முக்கியக் காரணங்கள் ஆகும்.

# ஆபரேஷன் என்றாலே அரண்டுவிடுகிறீர்கள்!

அறுவை சிகிச்சைக்குப் பலரும் தயங்குவதன் முக்கியக் காரணம் என்னவென்றால், அறுவை சிகிச்சையின் காரணமாக உடம்பில் ஏற்படும் ரணமும், வலியுமே ஆகும். ஆனால் இன்றோ நவீன மருந்துகளின் கண்டுபிடிப்பால், ரணமும், வலியும் அறவே இருப்பதில்லை.

**சரி, இனி ஒரு ஆபரேஷன் எப்படி நடக்கிறது எனப் பார்ப்போமா?**



பொதுவாக ஆபரேஷன் செய்வதற்கு முன் செய்யப்படும் ஏற்பாடுகள்: ஆபரேஷன் செய்வதற்கு ஏதுவாக மயக்க மருந்துகொடுப்பதை 'அனஸ்தீஷியா' எனக் கூறுகிறார்கள். அனஸ்தீஷியா கொடுப்பதற்கு முன்பாக 'ப்ரீ-மெடிகேஷன்' கொடுக்கப்படுகிறது. ஆபரேஷன் செய்வதற்கு ஒரு மணி நேரம் முன்பாகக் கவலை, பயம், ஆகியவை நீங்குவதற்காகவும் நுரையீரலில் நீர் சுரக்காமல் இருப்பதற்காகவும் ப்ரீ-மெடிகேஷன் எனப்படும், அட்ரோபின் – பெத்தடின் ஒரு ஊசி போடப்படுகிறது. டெட்டனஸ் வியாதியிலிருந்து தடுப்பதற்கு டெட்டனஸ் தடுப்பு ஊசி போடப்படுகிறது.

பொதுவாக எந்த ஆபரேஷன் செய்வதற்கு முன்பாகவும் எந்தவிதமான திட உணவோ, நீராகாரமோ உட்கொள்ளாதிருத்தல் அவசியமாகும். உடலின் எந்தப்பாகத்தில் ஆபரேஷன் செய்ய இருக்கிறார்களோ அந்தப் பாகத்தைச் சுத்தப்படுத்தி, ஆபரேஷனுக்கு ஏற்றவாறு செய்கிறார்கள்.

காலை வேளை ஆபரேஷன் செய்வதற்கு ஏற்றதாகும். ஆனால் கண்டிப்பாகக் காலை வேளையில் தான் செய்ய வேண்டும் என்பதில்லை. மற்றும் பெண்களுக்கு மாதவிலக்கு நாட்களில் ஆபரேஷன் செய்யாதிருத்தல் நல்லது. கடுமையான கோடைக்காலத்தில் குழந்தைகளுக்கு ஆபரேஷன் செய்வதைத் தவிர்ப்பது நல்லது. பொதுவாக மார்சளி, இரத்த அழுத்தம் ஆகியவைகளை பரிசோதித்து அவை குறைந்த பிறகே ஆபரேஷன் செய்யவேண்டும்.

**மயக்கம் கொடுக்கும் முறை:** மயக்கம் கொடுப்பதற்காகக் 'குளோரோபார்ம்'

கொடுப்பது இன்று அறவே இடையாது. பென்டொதால், ஸ்கோலின் இரண்டும் நரம்புகளினூடே செலுத்தப்படுகிறது. நுரையீரலில் ஓர் குழாய் மூலம் ஆக்ஸிஜன் நைட்ரஸ் ஆக்ஸைட், ஈதர், ஹெலாதின் போன்ற வாயுக்கள் செலுத்தப்படுகின்றன. பெரிய ஆபரேஷன்களுக்கு Muscle – Relaxation தரப்படுகிறது. ஆபரேஷன் முடிந்த பிறகு சில மருந்துகள் கொடுத்து மாற்று முறையைக் கையாண்டு மயக்கம் நீக்கப்படுகின்றது.

பொதுவாகப் பலருக்கும் செய்யப்படும் இரண்டு அறுவை சிகிச்சையைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம்.

## 1. அப்பெண்டிஸைடிஸ்:

ஆண், பெண் இருபாலாருக்கும் பொதுவாக 11–17 வயது வரை, பரவலாகச் செய்யப்படும் ஓர் ஆபரேஷன் அப்பெண்டிஸைடிஸ். முன் காலத்தில் அப்பெண்டிக்ஸ் எனப்படும் 'குடல்வால்' உடல் உறுப்புகளில் பயனற்ற ஒன்றாகக் கருதப்பட்டது. ஆனால் இன்றோ தடுப்புச் சக்தியில் (Immunology) அப்பெண்டிக்ஸ் பெரும் பங்கு வகிக்கின்றது. அப்பெண்டிக்ஸின் காரணமாக அப்பெண்டிஸைடிஸைத் தவிர கட்டி, காசநோய் போன்ற பல் வேறு நோய்கள் வருவதற்குக் கூட வாய்ப்புக்கள் இருக்கின்றன. ஆனால் இவை வெகு அபூர்வம் தான். அப்பெண்டிக்ஸ் 18–வது நூற்றாண்டிற்குப் பிறகே அதிகமாக ஆராயப்பட்டது.

**நோயின் அறிகுறிகள்:** முதலில் தொப்புளைச் சுற்றி லேசாகத் துவங்கும் வலியானது சிறிது நேரத்தில் அடி வயிற்றில் கடுமையான வலியாக மாறிவிடும். கடுமையான வயிற்று வலியைத் தொடர்ந்து வாந்தியும், சிலருக்கு ஜுரமும் இருக்கக் கூடும். இத்தருவாயில் எக்ஸ்ரே போன்ற பரிசோதனைகள் அவ்வளவு பயனுள்ளதாக இருப்பதில்லை. மற்றும் இந்த நிலையில் சாதாரண வலி நிவாரண மாத்திரைகளை உட்கொள்ளுதல் பயனளிக்காமல் போவதோடு உடலுக்கு ஊறு விளைவிக்கக் கூடும். ஆகையால் இந்த நிலையில் ஒரு மருத்துவரை அணுகினால், அவர் அடுத்து வரும் பல இன்னல்களைத் தவிர்ப்பதற்காக உடனடியாக அறுவை சிகிச்சை செய்து கொள்ளும்படி கூறுவார். ஆனால் சில சமயங்களில் தவிர்க்க முடியாத காரணங்களினால் வயிற்று வலியை கட்டுப்படுத்தி, ஆறு வாரங்களுக்குப் பிறகு ஆபரேஷன் செய்யப்படுகிறது. இதை இன்டர்வெல் – அப்பெண்டிக்ஸ் என்று கூறுவார்கள்.

அப்பெண்டிக்ஸை அறுவை சிகிச்சை செய்து நீக்காவிடில் வயிற்றில் அப்பெண்டிக்ஸ் –ஐ சுற்றிக் கட்டி ஏற்பட்டு கரைவதற்குப் பல நாட்கள் ஆகிவிடும், இதை 'அப்பெண்டிகுலர் மாஸ்' என்று கூறுவார்கள் அல்லது அப்பெண்டிக்ஸ் சீழ் கோர்த்துக் கொண்டு விடும். இதை அப்பெண்டிகுலர் ஆப்ஸிஸ் என்று கூறுவார்கள். ஆனால், அப்பெண்டிக்ஸ் வெடித்து விட்டாலோ நோயாளியின் உயிருக்கே ஆபத்தாகும். மற்றும் வெடித்து விட்ட அப்பெண்டிக்ஸில் ஆபரேஷன் செய்வது மிகக் கடினமான ஒன்றாகும். ஆகையினால் கடுமையானவயிற்று வலி திடீரென்று ஒருவருக்குத் தோன்றுமாயின் அதைப் புறக்கணிக்காமல் உடனடியாக ஒரு மருத்துவரிடம் கலந்தாலோசிப்பது மிக அவசியம்.

அடிவயிற்றில் ஒரு துவாரத்தை ஏற்படுத்தி, அதனுள் ஆயுதத்தைச் செலுத்தி அப்பெண்டிக்ஸ்–ஐ அப்புறப்படுத்தி விடுகிறார்கள். பொதுவாக இந்த ஆபரேஷன் 20–30 நிமிடம் வரை நீடிக்கும். அப்பெண்டிக்ஸ் வெடித்து விட்ட நிலையில் உடனே ஆபரேஷன் செய்ய வேண்டும்.

வயதானவர்களுக்கும், சிறு குழந்தைகளுக்கும் அப்பெண்டிக்ஸ் வருமாயின் அது சற்று கவலைக்குரியது.

**ஆபரேஷனுக்குப் பின்பு:** குடலில் காற்று சேராமல் இருப்பதற்காக மூக்கு வழியாக 'ரைல்ஸ் ட்யூப்' என்று ஓர் குழாய் செலுத்தப்படுகிறது. ஆபரேஷன் முடிந்து 48 மணி நேரம் ஆன பின்பு குடல் வேலை செய்யத் துவங்கும். அதுவரை வாய் வழியாக எந்த ஆகாரமும் உட்கொள்ளாதிருத்தல் அவசியம். உடலில் சக்திக்காக 'ட்ரிப்ஸ்' கொடுக்கப்படும். ஒரு வாரத்திற்குப் பிறகு தையல் பிரிக்கப்படும். பொதுவான அப்பெண்டிஸைடிஸ் ஆபரேஷன் காரணமாக எந்தவிதமான பின்விளைவுகளும் ஏற்படுவதில்லை.




## 2. தைராய்ட்

கழுத்தின் முன்புறத்தில் காற்றுக் குழாயின் முன்னே அமைந்திருப்பது தான் தைராய்ட் சுரப்பி ஆகும். உடலில் அயோடின் குறைவினால் தைராய்ட்நோய்கள்

வரக்கூடும். தைராய்டில் தோன்றும் நோய் களை ரண சிகிச்சையினால் முற்றிலும் குணப் படுத்த இயலும். தைராய்ட் 'தைராக்ஸின்' (Thyroxin) என்னும் இரவத்தை சுரக் கின்றது. 1878—ஆம் ஆண்டு தியோடர் கோக்கர் (Thedor Kokher) என்பவர் தைராய்டு சுரப்பியில் வெற்றிகரமாக அறுவை சிகிச்சை செய்ததைப் பாராட்டி அவருக்கு நோபல் பரிசு வழங்கப்பட்டது.

தைராய்டில் முக்கியமாகத் தோன்றும் நோய்கள் என்னவென்றால்; 1. தைராய் டில் கட்டி, 2. வெகு அதிகமாக வேலை செய்யும் தைராய்ட்.

**தைராய்ட் கட்டி:** சில பெண்களுக்குப் பிரசவ, கர்ப்ப காலத்தில் தைராய்ட் பெரிதாகக் காணப்படும். இதை பிஸியலாஜிகல்காய்ட்டர் என்று கூறுவார்கள்.

**நோயின் அறிகுறிகள்:** கழுத்தில் தோன்றும் ஒரு வீக்கமானது விழுங்கும்போது மேலும் கீழும் போய் வரும். அது இடது அல்லது வலது பக்கம் தோன்றும். பொதுவாக இந்த வீக்கத்தின் காரணமாக வலி எதுவும் தோன்றுவதில்லை. மேலும் இந்த நோயினால் ஏற்படுகின்ற வீக்கத்தை நோயாளியின் நண்பர்களே முதலில் கவனிக்க வாய்ப்புள் ளது. இந்தத் தைராய்ட் கட்டியானது சில சமயங்களில் புற்று நோயாகக் கூட மாறி விடக் கூடும். ஆகையால் இதைப் புறக்கணித்தல் ஆகாது. தைராய்டில் பல கட்டிகள் தோன்றும் வாய்ப்புள்ளதோடு, புற்று நோயினால் பாதிக்கப்பட்ட தைராய்டி னால் உடலின் மற்ற பாகங்களுக்குப் புற்று நோய் பரவ வாய்ப்பிருக்கிறது. அறுவை சிகிச்சையினால் மட்டுமே இந்த நோயைக் குணப்படுத்த இயலும்.

**2. அதிகமாக வேலை செய்யும் தைராய்ட்:** மிக அதிக அளவில் தைராக்ஸின் சுரப்ப தினால் இந்நோய் ஏற்படுகின்றது. இந் நோயை 'க்ரேவ்ஸ் டிஸீஸ்' எனக் கூறு வார்கள். இந்நோயின் காரணமாக முழு தைராய்ட் சுரப்பி வீங்கிக் காணப்படுகிறது.

இந்நோய் பொதுவாக 25–40 வயதுக் குட்பட்ட பெண்களையே அதிகபட்சம்தாக்கு கின்றது. நோயாளியின் கண்கள் சுரந்து வெளிநோக்கி வந்து விடும். இந்நோயாளிக்கு அதிகமாகப் பசியெடுக்கத் துவங்கும். உடல் சற்று சூடாக இருக்கும். ஆனால் நிறைய உணவு உட்கொண்ட போதிலும் நோயாளியின் உடலில் எடை குறைவதோடு நோயாளி மெலிந்து காணப்படுவார். இதயத்துடிப்பு அதிகமாக இருக்கும். இத்தரு ணத்தில் நோயை உடனடியாகக் குணப் படுத்தாவிடில் நோயாளி இருதய நோயினால் இறக்க நேரிடும். சிலர் கண்பார்வையைக் கூட இழக்க நேரிடலாம். இந்நோயை மருந்துகளினால் கட்டுப்படுத்த இயலும். இதற்கென்றே ப்ரத்யேகமாகத் தயாரிக்கப் படும் அயோடின் ஐஸோடோப்ஸ் இந்நோய்க் கேற்ற மருந்தாகும். ஆனால் இம்மருந்து களுக்கு நோய் கட்டுப்படாவிடில், அறுவை சிகிச்சையைக் கண்டிப்பாக நாடவேண்டும்.

முறையான பல பரிசோதனைகளுக்குப் பிறகு நோயாளியை ஆபரேஷனுக்குத் தயார் செய்கிறார்கள். மயக்கம் கொடுத்த பிறகு, நோயாளியின் கழுத்தில் அறுவை சிகிச்சை செய்து தைராய்ட் நோயைக் குணப்படுத்துகிறார்கள். இந்த ஆபரேஷன் சுமார் ஒரு மணி நேரம் நீடிக்கும். மயக்கம் நன்கு தெளிந்த பிறகு வாயால் உணவு உட்கொள்ளலாம். 5 நாட்களுக்குப் பிறகு தையல் பிரிக்கப்படும். ஒரு சிலருக்கு இந்த ஆபரேஷன் காரணமாக குரலில் சிறிது மாற்றம் ஏற்படலாம்.

கட்டுரை வடிவம் -சித்ரா சிவகுமார்.

---



ஐரோப்பிய மாடலான ஃபாஷன் க்வீன் ஃபிரைட்ரைக்ஜில் அண்மையில் பெங்களூர் வந் திருந்தார். அவர் இவ்வாறு இந்திய நங்கையருக்குப் புகழாரம் சூட்டியிருக்கிறார்: ''இந்தியப் பெண்கள் தங்கள் அசாதாரண அழகிய தோற்றத்தால் நிச்சயமாக ஐரோப்பாவில் பெரும் சிறப்படைய முடியும். சராசரி இந்தியப் பெண்மணி நல்ல தோற்றம் உடையவர்தான். இன்னும் சற்று அதிகக் கவனம் செலுத்தி, கொஞ்சம் உணவைக் குறைத்து உண்டு வந்தால், அவர் காண்பவர்களைப் ப்ரமிப்படையச் செய்வார்.''

—எஸ். ஏ. காதர்.



நட்சத்திர வாழ்க்கை

# ஏது கிடைத்தாலும் திருப்தியே!

“நான் யார்? எங்கிருந்து வந்தேன். இந்த ஜென்மாவில் நான் இப்படிப் பிறக்கக் காரணம் என்ன? ஒவ்வொரு பிறப்பிலும் செய்யும் பாவத்தின் பலனாக அடுத்த ஜென்மாவை எடுக்கிறேன். இனி எங்கு போகப் போகிறேன்...

இதையெல்லாம் நான் தெரிந்து கொள்ள, கொள்ள மனசு ரொம்ப விசாலமாகிறது. மற்றவர்களைப் பார்க்கும் பார்வை விசாலப் பட்டது. இதுவரை 'ஹே... இவர்களைப் பற்றித் தெரியாதா ...' என்று அலட்சியமாக நினைத்தது போல இப்போது நினைக்க முடியலை. ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு காரணம் இருந்து தான் ஆகனும் என்று எல்லா மனிதர்களையும் மதிக்கத் தோன்று கிறது...”

இப்படியெல்லாம் பேசுபவர் யார் என்று நினைக்கிறீர்களா? முன்னாள் பிரபல நடிகை, இப்போதும் பல படங்களில் நடித்துக் கொண்டிருக்கும்—

திருமதி ராஜசுலோசனாதான்!

நான் பார்த்த பல குணச்சித்திர நடிகைகளும் இன்று அமைதியான வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். சிறிய சிறிய பிரச்னைகள் இருக்கலாம். ஆனால் அது எல்லாக் குடும்பங்களிலும் இருப்பதுதான். ஆனால் நடுவில் வந்த சிலரைப் போல மன முடைந்து வாழ்க்கையை முடித்துக் கொள்வதும், தூக்க மாத்திரையை நாடுவதும், போதைப் பொருளுக்கு அடிமையாவதும் போல இவர்கள் இல்லை. அதற்குக் காரணம் இவர்களுடைய வேர்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

நல்ல கட்டுப்பாடான கலாசாரமிக்க குடும்பப் பின்னணியில் இருந்து வந்திருக்கிறார்கள். பணமும் வாழ்க்கைக்குத் தேவை என்றுதான் இருந்தார்களே தவிர பணமே வாழ்க்கை என்றில்லை. புகழை விரும்பினார்களே தவிர அதற்கு அடிமையாக வில்லை. இதனால் தான் பிரபலமாகி சக்கரத்தில் உயர்ந்து தாழும்போது அமைதியாக ஒதுங்கிக் கொள்கிறார்கள் அருமையாக வாழ்கிறார்கள். எதைஎதையோ படிக்கும் இன்றைய நடிகைகள் வாழ்க்கையில் இவர்களைப் படித்தால் நன்றாக இருக்கும். திருமதி. ராஜசுலோசனாவும் இன்று அருமையான வாழ்க்கையைத்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

“எங்களுடைய சொந்த ஊர் சித்தூர் என்று பேரே தவிர வளர்ந்ததெல்லாம் மெட்ராஸில் திருவல்லிக்கேணியில்தான். எங்களுடைய குடும்பம் ரொம்பப் பழமையான குடும்பம். ஒரு லெவலுக்கு மேல் பெண்கள் வெளியே வரக் கூடாது என்பார்கள். அம்மா, அப்பாவிற்கு ஒரே செல்லப் பெண்ணாக வளர்ந்தேன்.

எங்கள் வீட்டில் பங்கஜம் டீச்சர் குடி வந்த போது தான் என்னுடைய கலைவாழ்க்கையில் பிள்ளையார் சுழி கண்ணுக்குத் தெரியாமல் போடப்பட்டது. அவங்க பாட்டு டீச்சர். நிறைய பெண்கள் பாட்டுக் கத்துக்க வருவாங்க. எல்லாரும் பத்து வயசுக்கு மேல. ஆறு வயசுப் பெண்ணான நானும் அவங்களோட சேர்ந்து கத்துவேன். ஆனா பாட்டு வரலை.

அப்போ 'வேதாள உலகம்' படம் ரிலீசாச்சு. படமெல்லாம் பார்க்கக் கூடா அன்னு இட்டிலை அப்பாகிட்டே கெஞ்சிக் கூத்தாடி பர்மிஷன் வாங்கிகிட்டு சினிமாவுக்குப் போனேன். அதுலே குமாரி கமலா வெல்லாம் டான்ஸ் ஆடியிருக்காங்க. அதப் பாத்ததிலேருந்து நானும் அவங்களைப்போல டான்ஸ் ஆடணும்னு ஆசை வந்துடிச்சு.

அப்பாகிட்ட வாயைத் திறக்க முடியாது. பங்கஜம் டீச்சர் தான் அடைக்கலம். 'நீ பேசாம இரு. இங்க பக்கத்துல சரஸ்வதி கான நிலையத்தில் கத்துக் தர்றாங்க. முதல்ல சேர்ந்துடு. அப்புறமா அப்பா கிட்ட சொல்லிக்கலாம்'னு தைரியம் கொடுத்தாங்க. கே. லலிதா தான் குரு. டான்ஸ் கிளாஸ் ஆரம்பிச்சது. மொதல்ல பாட்டுக் கத்துக்க பக்கத்துத் தெருவுக்குப் போறேன்னு அம்மா சமாளிச்சாங்க. அப்புறம் மூணுமாசம் கழிச்சு பங்கஜம் டீச்சர் மெதுமெதுவா விஷயத்தை விட்டாங்க.

“அவருக்கு டான்ஸ்ல ரொம்ப இன்ட்ரஸ்ட் இருக்கு. நீங்க ஏன் வேண்டாங்க நீங்க. குழந்தைக்கு எதுல ஆர்வம் இருக்கோ அதுல ஈடுபடட்டுமே. அவ என்ன மேடையிலயா ஆடப் போறா? சும்மா கத்துக்கட்

~மஞ்சுளா ரமேஷ்~



டும்'' அப்படி இப்படின்னு சொல்லிக் கோபமா மொறைச்ச அப்பாவை சமாதானம் பண்ணிட்டாங்க.

ஒன்றரை வருஷத்துல நல்லா கத்துக்கிட்டேன். லலிதா அரங்கேற்றம் பண்ணலாம்னுங்க. அப்பா முடியவே முடியாதுன்னாரு. அவர்கிட்டே கெஞ்சிக் கூத்தாடி ''அரங்கேற்றம் மட்டும் பண்ணிடறேன். அப்புறம் ஆடவே இல்லேன்னு' சொல்லி அரங்கேற்றம் பண்ணேனும். அவ்வளவுதான். அதோட அதை மறந்துட்டு வீட்லேயே இருந்தேன்.

தாம்பரம் லலிதா ஒருநாளைக்கு வீட்டுக்கு வந்தாங்க. 'மேட் பஜார்'ல ஒரு டான்ஸ் நடக்குது. சும்மா பார்க்கலாம்; வாயேன்'னு கூப்பிட்டாங்க. இருப்பியும் கெஞ்சல் தான். அப்பாகிட்ட ஒரு வழியாச் சம்மதம் வாங்கிட்டுப் போனேனும். அங்க போனு கிருஷ்ணன் பாம்பாட்டின்னு வர்ற வேஷங்களை வர்றவர் அன்னைக்கு உடம்பு சரியில்லாம வரலை. அவங்கல்லாம் ஒரே தடமாடிக்கிட்டு இருந்தாங்க. தாம்பரம் லலிதா,

''பாவம், இந்த டேன்ஸ் நடந்தாத்தான் அவங்களுக்கு சம்பாத்தியம். உனக்குத்தான் ஆடத் தெரியுமே. கொஞ்சம் கைகொடுத்து காப்பாத்துன்''னுங்க.

எனக்கு அப்பாவை நினைக்க ஒரே நடுக்கம். 'நா சொல்லிக்கிறேன்'னு தாம்பரம் லலிதா கொடுத்த தைரியத்துல ஆடினேன். வீட்டுக்குப் போனவுடனே பூகம்பம்தான். இனிமே இந்த மாதிரி வேலையெல்லாம் வச்சுக்காதேன்னாரு அப்பா.

அதோட முடியலே அந்த விவகாரம். நடனம் பார்க்க அங்கே வந்திருந்த டைரக்டர் சின்னஹா 'கிருஷ்ணன் வேஷம் போட்ட பெண் யாரு' என்று விசாரித்துக்கொண்டு வீடு தேடி வந்து விட்டார். அப்பா மறுத்துக் கதவைச் சாத்தி விட்டார். விடவில்லை சின்னஹா. மீண்டும் வந்தார்.

''சினிமா உலகத்துல இருக்கறவங்க எல்லோருமே கெட்டவங்க இல்லே. நா உங்களை கம்பெனிக்குக் கூட்டிக்கிட்டுப் போறேன் பாருங்க. உங்க பெண்ணுக்கு நல்ல திறமை இருக்கு. அதனால தான் இவ்வளவு தூரம் சொல்றேன்'' அப்படின்னாங்க.

அப்பாவை அவர்களுடைய கம்பெனிக்குக் கூட்டிக்கிட்டு போனாங்க. ரொம்ப நேரம் அவர்களெல்லாம் பேசினதுல அப்பா சரின்னுட்டு வந்துட்டாரு. தெலுங்கிலும், தமிழிலுமாக சேர்ந்து எடுத்த அந்தப் படத்துல நான் நடனமாடினேன்.

அப்பா சொல்லிட்டு வந்துட்டாரே தவிர 'நாம நம்ப பொண்ணு வாழ்க்கையைக் கெடுத்துட்டோமோ'ன்னு பயம் வந்துடிச்சு. அந்த உள்ளக் குடைச்சலிலேயே உடம்பு சரியில்லாம விழுந்துட்டாரு. இரண்டுமாசம் படுத்த படுக்கைதான்.

''நாம செஞ்ச பாவத்துக்கு இவளுக்குக் கல்யாணம் பண்றதுதான் மாற்று''ன்னு நினைச்சு உடனே செயல்படுத்திட்டாரு. பக்கத்துல இருந்த ஒருத்தர நிச்சயம் பண்ணிட்டாரு. கல்யாணம் முடிஞ்சதும் இரண்டு மூன்று படங்கள்ள நடனம் இருந்தது.

என்னோட மகன் பிறந்தான். சந்திரபாபு என் நடனங்களைப் பார்த்துட்டு மாங்கல்யம்ங்கற படத்துல கேரக்டர் ரோலுக்குப் புக் பண்ணினாரு.''

ஆக விதி, இவர் நடிகையாக வேண்டும் என்று நிச்சயித்து விட்டபோது யார்தடுத்து என்ன பயன்? மெதுமெதுவே நடிகையாகி பிரபல நட்சத்திரமாகி விட்டார். தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஹிந்தி ஆகிய ஐந்து மொழிகளிலும் நடித்து விட்டாராம். படித்தால் மட்டும் போதுமா, நல்லவன் வாழ்வான், தேடி வந்த செல்வம் எனப் பல நடிகர்களோடும் நடித்தார். ஒரு பத்து வருஷம் முன்னணி நடிகையாக வாழ்க்கை வேகமாக ஓடியது.

சொந்த வாழ்க்கையிலும் பல பிரச்னைகள். பணம் மனதோடு ஒத்துப் போகவில்லை.



✲ கணவருடன்



✲ இரட்டைப் பெண் குழந்தைகளுடன்



சின்னஞ்சிறு காயத்தில்கூட அழுக்குப் புகுந்துவிடும்
இதனால் காயம் பெரிதாகும், கஷ்டம் உருவாகும்.

# உடனடியாக பாண்ட்-எய்ட் உபயோகியுங்கள்

உலகில் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்—அது, காயங்களில் அழுக்குப் புகாமலும், தொற்றிலிருந்தும் காயங்களைப் பாதுகாக்கிறது.

ஆகவேதான் பாண்ட்-எய்ட் முழுப் பாதுகாப்பானதாகும். பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள நிருபணமான ஆன்டிசெப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலுள்ள நுண்துளைகள் காயங்களை விரைந்தாற்றிட உதவுகின்றன. ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.




**கைவசம் வைத்திருங்கள் பாண்ட்-எய்ட்**
**ஏனென்றால், காயங்கள் எங்கும் எந்நேரமும் ஏற்படலாம்.**

Johnson & Johnson

# தேநீரும் விருந்தோம்பலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்

உங்கள் இல்லத்திற்கு வருகை தரும்
நண்பருக்கு முதலில் வழங்குவது எது ?
நல்வரவு என்று சொல்லும் புன்னகையும்
நல்லதொரு கோப்பை தேநீரும் தானே !
அது வழி வழியாய் வரும் உங்களுடைய
கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில்
காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள்
இருந்தால் ? உடன் புதிய பால் கிட்டாத
நிலையானாலோ ?
ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள்
பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண
உதவுகிறது. சிக்கனமாக, விரைவாக,
எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்கு
களுக்கும் இது ஈடு இணையற்றது..

# ஸாகர்

## ஸ்கிம் மில்க் பவுடர்

கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான
குணங்கள் உண்டே இதில்.




ASP/SMP/5/84



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங்
பெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10,
ஆனந்த் 388 001, குஜராத்.

தம்பதியரிடையே மனக்கசப்பு. ஒருவருக் கொருவர் பிரிந்து விட்டார்கள். மனதோடு ஒத்துப் போன பிரபல தெலுங்கு டைரக்டரின் மகனும், இப்போதைய டைரக்டருமான எஸ். வி. ராவைத் இரண்டாம் திருமணம் செய்து கொண்டார். இரட்டைப் பெண்கள் பிறந்தார்கள்.

''நேரம் காலம் பார்க்காமல் உழைக்க வேண்டிய தொழிலிது. சின்னக் குழந்தைகளை எப்படிச் சமாளித்தீர்கள்'' என்றேன்.

''ஒரு பெண்ணோ, ஆணோ முன்னுக்கு வர வேண்டுமானால் அவர்களுடைய குடும்பம் பூராவும் அவர்களுக்கு ஒத்துழைப்பு தர வேண்டும். அதேபோல நடிகையாக வர வேண்டுமானால் ஒத்துழைப்போடு அவளை முழுமையாகப் புரிந்து கொண்ட குடும்பமாகவும் இருக்க வேண்டும். ஒருத்தி பிரபலமாகிறாள் என்றால் அவளுக்குப் பின்னால் அவளுடைய குடும்பமே இருக்கிறது என்றுதான் அர்த்தம். நான் செய்த பாக்கியம் என்னுடைய அம்மா எனக்கு முழுமையான சப்போர்ட் கொடுத்தார்கள். வீட்டுத் தொல்லை, குழந்தைகள் தொல்லை எதுவுமே

> பிள்ளையார் கொழுக்கட்டை செய்ய அரிசி மாவு கிளறும் பொழுது, ஜலத்துடன் ஒரு கரண்டி பால் விட்டால், பூரணம் வைத்துக் கொழுக்கட்டை வேகும் பொழுது மேல் மாவு வெடிக்காமல் இருக்கும்.
>
> —ஜெயா வி. ராமன்.

எனக்கு இருந்ததில்லை. இரண்டரை வருஷத்துக்கு முன்னாடி அம்மா காலமாயிட்டாங்க. இப்பதான் குடும்ப பாரம்கறது எனக்கு என்னன்னே தெரிய ஆரம்பிச்சிருக்கு...''

''அப்புறம் உங்க ஃபீல்டிலே என்னாச்சு''

''அறுபத்தொன்பதுலே எனக்கு ஒரு ஆக்ஸிடெண்ட். ஸ்டேஜ்லேருந்து விழுந்துட்டேன். ஆறு மாசம் படுக்கையோட இருந்தேன். கால்ல பலத்த அடி. அதுக்கப்புறம் நடமாட முடியுமான்னே இருந்தவ இன்னிக்கு நடனமாடற அளவுக்கு வந்திருக்கேன்னா அதுக்கு இறைவன் அருள்தான் காரணம்னு சொல்லணும்.''

''அப்படின்னா உங்க டான்ஸை நீங்க விடவே இல்லையா...''

''இல்லே.. டாப் ஹீரோயினா இருந்தப்ப கூட எப்படியோ டான்ஸ் ஆடிக்கிட்டுத் தான் இருந்தேன். கூச்சப்படிய அப்பல்லாம் தமிழ்நாட்டிலே ஆண்கள் தான் ஆடிக்கிட்டு இருந்தாங்க. அத கத்துக்கிட்ட முதல் பெண் நான்தான்னு கூட சொல்லலாம். அப்புறமா கதக் கத்துக்கிட்டேன். டான்ஸ் பிராக்டிஸ் பண்ண டைமே இருக்காது. ராத்திரி பதினொரு மணிக்குக் கூட பிராக்டிஸ் பண்ணியிருக்கேன்...''

''ப்ரோக்ராம்ஸ் பண்ணியிருக்கீங்களா...''

''நிறைய... டான்ஸ் புரோம்ராம்காக அமெரிக்கா, ஜப்பான்னு எட்டுமாசம் வெளிநாட்டிலேயே தங்கியும் இருக்கேன்..''

''இப்போ எப்படிப் போறது உங்க லைஃப்''

''இப்பவும் நான் பிஸி ஆர்ட்டிஸ்ட்தான். அதுக்குக் காரணம் என்னுடை கேரக்டர் தான்னு சொல்லணும். இன்னிக்கு நான் ஸ்டுடியோவுக்குள்ள நுழைஞ்சாலும் சாதாரண லைட்பாய் கூட, 'என்னம்மா சௌக்யமா'ன்னு கேட்பாங்க. நானும் அதே அன்போட தான் எல்லார்கிட்டயும் பழகறேன். யங் ஆர்ட்டிஸ்ட்டோடயும் என்னால கலந்துக்க முடியுது. ஒதுங்கி பத்தாவோட இருக்கறவ இல்லே நான். அதனால இன்னிக்கும் படங்கள் வருது. நிறைய டான்ஸ் புரோக்ராம்ஸ். அப்புறம் டி. வி. லே பல இடங்கள்ள பேச கூப்பிடறாங்க...''

''பேச நீங்களா, கூட்டத்துலா...''

ராஜசுலோசனா சிரிக்கிறார். ''ஆமா, ஒரு தடவை பிரம்மகுமாரி ஸமாஜத்துக்குப் போனேன். எளிய வகையில மக்களுக்கு டீச் பண்றாங்க. சினிமா உலகில் பக்தியை எப்படிப் பரப்பலாம்னு பேசக் கூப்பிட்டாங்க. ஏதோ பேசினேன். அங்க வந்தவங்க பேச்சுக்களையும் கேட்டேன். ஏதோ ஒரு மன நிறைவு எனக்கு இருந்தது. அவங்களே பல இடங்கள்லே என்னைப் பேசக் கூப்பிட்டாங்க. பேசிக்கிட்டும் வர்றேன்...''

''கடைசியா ஒரு கேள்வி. நீங்க நடிகையா வந்ததுக்காக எப்பவாவது வருத்தப்பட்டு இருக்கீங்களா...''

''நிச்சயமா இல்லே. எது கிடைத்தாலும் திருப்தியோட இருக்கறவ நான். அது எங்கப்பாவோட அட்வைஸ். அதே பிரகாரமா வளர்ந்துட்டேன். இன்றைக்கு எனக்கு விதிச்ச கடமை இதுன்னு வந்த வேலைய பர்பெக்டா செய்ய முயற்சிப்பேன். அதைச் சிறப்பாச் செய்வேன். அதனால நான்சினிமா நடிகை ஆனேனேன்னு வருத்தப்பட்டதில்லே.

ஆனா எங்களுடைய சொந்தக்காரங்க நடுவுல எங்க குடும்பத்தையே ஒதுக்கிவச்சாங்க. எனக்கு உறவினர் யாருன்னே தெரியாது. அப்புறமா பணம், புகழ்னு வந்தப்பறம் அவர் வந்து சேர்ந்துகிட்டாங்க. இதுதான் உலகம்னு இருந்துட்டேன். அதுவும் இப்பப்ப எனக்கு மனசு ரொம்பவும் சஞ்சலமில்லாம இருக்கிறதால வருத்தமே இல்லே.''

என்கிறார் அமைதியாக. மிகுந்த பண்பட்ட பெண்மணியாக விளங்கும் இவர் வாழ்க்கை எப்படிப் போகும் என்பதும் தெரியாது. என்கிறார். ஆனால் வாழும் வாழ்க்கையை நிறைவோடு வாழும் திருமதி ராஜசுலோசனாவும் பின்பற்றப்பட வேண்டியவர்தான்.

# பெண்ணைப் பிடிக்கலே!

அபிராமி துர்க்காதாஸ்

நல்லதொரு நாடகம் நடந்துமுடிந்த அரங்கமாக காட்சி தருகிறது அந்தப் பெரிய ஹால்.

காலையிலிருந்து மிகவும் கவனமாக அலங்கரிக்கப்பட்டிருந்த நாற்காலிகளும், மேசைகளும், பூக்கிண்ணங்களும் இப்போது கவனிப்பாரற்றுக் கிடக்கின்றன.

சாப்பாட்டு மேசை மீது பெண்பார்க்க வந்தவர்கள் நாசூக்காகக் கொறித்து விட்டுப் போன பஜ்ஜியும், சொஜ்ஜியும் ஈக்களுக்கு விருந்தாகிக் கொண்டிருக்கின்றன.

''அப்பாடி, ஒரு வழியாக இந்தப் பெண் பார்க்கும் படலம் முடிந்தது'' ஆயாசத்தோடு நாற்காலியில் வந்து அமருகிறாள் அம்மா.

''பையன் எப்படி ''

அப்பா கேட்கிறார்.

''பையன் சுமாராத்தான் இருப்பான்னு நெனைச்சேன். ஆனா ரொம்ப ரொம்ப சுமாரா இருக்கான். நல்ல கருப்பு'' அலட்சியமாகச் சொல்லுகிறாள் அம்மா.

''உன் பெண் ரொம்ப அழகோ ''

இதுவரை பிள்ளை வீட்டுக்காரர்களுக்காக ரொம்பவும் சிரமப்பட்டு அடக்கி வைத்திருந்த நாக்கை அவிழ்த்து விடுகிறார் அப்பா.

அவருக்குக் கொஞ்சம் அடங்காப்பிடாரி நாக்கு.

''காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு'

குறும்புச் சிரிப்பு சிரித்தபடி வருகிறாள் பத்மினி. அவள் தான் இன்றைய பெண் பார்க்கும் நாடகத்தின் கதாநாயகி.

''பையன் எப்படிம்மா இருக்கான் பரவாயில்லையா '' அப்பா கேட்கிறார்.

''எனக்குப் பிடிக்கல்லே ''

பட்டென பதில் சொல்கிறாள் பத்மினி.

''ஏண்டி பிடிக்கல்லே? வரதட்சணை காலணா கேட்கல்லே. என்ன நகை போடப் போறேன்னு ஒரு வார்த்தை கேட்கலியே. ஒரு பெரிய உத்தியோகம் பார்க்கிறான். கைநிறையச் சம்பளம் வாங்கறான். நீ இருக்கிற அழகுக்கு இவனை விட ஒத்தியா ஒனக்கு மாப்பிள்ளை கிடைப்பானு ''

உணர்ச்சிவசப்பட்டுவார்த்தைகளை கடுமையாக வீசுகிறாள் அம்மா.

''நான்தான் அழகில்லேங்கறது எல்லோருக்கும் தெரிஞ்ச விஷயமாச்சே. நான் அழகா இல்லாவிட்டாலும் எனக்கு வர்ற கணவன் அழகா இருக்கணும்னு நான் ஆசைப்படக் கூடாதா ''

மனசில் இருப்பதை வெளிப்படையாகக் கொட்டியதைக் கண்டு அப்பா, அம்மா இருவருமே திகைத்துப் போகிறார்கள்.

''அப்போ என் பெண்ணுக்குப் பிள்ளையைப் பிடிக்கல்லேன்னு எழுதிப் போட்டுடறேன்.''

அப்பா சிடுசிடுக்கிறார்.

''சேச்சே, அப்படியெல்லாம் எழுதக் கூடாது. சகுனம் சரியில்லேன்னு எழுதிடுங்கோ.''

அம்மா மதி மந்திரியாக யோசனை சொல்கிறாள்.

''யாரும் எதுவும் எழுத வேண்டாம். நானே பேசிக்கறேன் ஃபோன்லே'' பத்மினி எழுந்து கொள்கிறாள்.

பத்மினியைப் பெண் பார்த்து விட்டு வந்த குமார் வீட்டிலும் இதே மாதிரிதான் வாக்கு வாதம் நடக்கிறது.

''ஏண்டாப் பெண் பிடிக்கல்லேங்கறே: நல்ல இடம், ஒரே பொண்ணு. நாம கேக்காமலேயே கையிலே நிறைய தருவா போல இருக்கு. நகையும் முப்பது பவுனுக்கு மேலே போடுவாப் போலே இருக்கு. பாங்கிலே நல்ல வேலையும் பாக்கறு. ஏண்டா வேண்டாங்கறே ''

குமாரின் அம்மா பொரிந்து தள்ள, குமாரின் அப்பா அதை ஆமோதித்துக் கொண்டிருக்கிறார்.

''எல்லாம் இருக்கு. ஆனா அழகுதான் இல்லை. அட, அழகுதான் இல்லேன்னாலும் இப்படி ஒரு கருப்பா ''

''சரி, சரி, அவனுக்குப் பிடிக்கல்லேன்னு விட்டுடுங்கோ. நாளைக்கே பையனுக்குப் பெண்ணைப் பிடிக்கல்லேன்னு எழுதிப்போட்டுடுங்கோ.''

குமாரின் அம்மா தீர்மானமாகச் சொன்ன போது குமார் இடைமறிக்கிறான்.

''அப்படியெல்லாம் அநாகரீகமாக எழுதாதீர்கள் அப்பா, நானே பெண்ணிடம் நேரிலே பேசிப் பக்குவமா சொல்லிடறேன்.''

மறுநாள் மதியம், டிபன் நேரத்தில் பத்மினி குமாருக்கு ஃபோன் செய்ய எண்ணி டெலிபோனிடம் வந்த போது, டெலிஃபோன் மணியடிக்கிறது.

டெலிஃபோன் ஆபரேட்டர் ஷோ ரிசீத்தபடி, ஃபோனை எடுத்தவன், பத்மினியிடம் நீட்டுகிறான்.

''பத்மினி உனக்குத் தான் கால்.''

குமார்தான் பேசுகிறான்.

''உங்க கிட்டே ஒரு விஷயம் பேசணும் மிஸ். பத்மினி. உங்க ஆபீஸுக்கு வரட்டுமா ''

''நானும் உங்ககிட்டே பேசணும்னு தான் வந்தேன். நான் இப்போ எங்க ஆபீஸ் காண்டீனுக்குப் பக்கத்திலே இருக்கிற

ரெஸ்டாரண்டுக்குப் போகிறேன். இப்ப வரமுடியுமா உங்களாலே ''

''ஓ... என்கிட்டே ஸ்கூட்டர் இருக்கு. ஒரு ஐந்து நிமிஷத்திலே வந்து உங்களை மீட் பண்றேன்.''

ஹோட்டல் ஹோலில் இருவரும் எதிரும் புதிருமாக ஒருவரை ஒருவர்பார்த்தபடி உட்கார்ந்திருக்கிறார்கள்.

யார் முதலில் எதைப் பேசுவது என்று புரியாமல் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

பத்மினி இன்று முகத்தில் மேக்கப் ஒன்றுமில்லாமல், சாதாரண வெளிர்நீல பாலியஸ்டர் சேலையும் அதே வண்ணத்தில் சோளியும் முகத்தில் புன்னகையுடன் இருந்தாள்.

குமார்தான் பேச்சைத் துவக்குகிறான்.

''நான் உங்களை ஏன் சந்திக்க விரும்பினேன்னு நீங்க கேட்கவே யில்லையே ''





அழகே உருவான டயனு இளவரசி, இப்போது உருக்குலைந்து போயிருக்கிறார். கணவனைப் பற்றிய மனக்கவலைதான். சார்லஸ் இளவரசர் பயங்கரமான விளையாட்டுக்களில் ஈடுபட்டு வருகிறாராம். இன்றும் தம்மை ஆட்கொண்டிருக்கும் தமது மாமுனார்டு மவுண்ட் பேட்டன் இறந்த சோகத்தை அவர் இன்னும் மறக்கவில்லை. ஆவியுலகத்திலிருக்கும் அவருடன் ஒய்ஜா போர்டு மூலம் தொடர்பு கொள்ள இளவரசர் முயன்று கொண்டிருக்கிறாராம்.

—எஸ். ஏ. காதர்.

''ஒரு நிமிஷம், சர்வரை காப்பிகொண்டு வரச் சொல்றேன். சாப்பிட்டுக்கொண்டே பேசலாமே'' என்றுள் பத்மினி.

காப்பி வந்தது.

எந்தக் காலேஜில் படித்தார்கள் என்ன சினிமா பிடிக்கும் எந்தப் பாட்டு ரொம்பப் பிடிக்கும் 'ஹாபி' என்ன என்கிற மாதிரி ஏதேதோ பேசினார்கள். கடைசியாக பத்மினி தான் பேச்சை ஆரம்பிக்கிறுள். ''ஆமாம் எதற்காக என்னுடன் பேச விரும்பினீர்கள்''

''ஓ... அதுவா... அதுவந்து... உங்களை எனக்கு...'' என்று தடுமாறிய போது, பத்மினி ஹோட்டல் வாசலை உன்னிப்பாகக் கவனிக்கிறுள்.

''ஓ... என் தோழி பத்மா வருகிறுள்...

அவள் நம்மைப் பார்த்து விட்டால் போதும் எதையாவது கதைகட்டிஊரெல்லாம் பறக்க விட்டுவிடுவாள். அடுத்த சனிக்கிழமை நானே உங்கள் ஆபீஸுக்கு வருகிறேன். அப்ப பேசலாம்'' என்றபடி அவசர அவசரமாகக் காப்பியை குடித்துவிட்டு ஒரு கப்புக்கான தொகையை மேசைமீது வைத்துவிட்டு எழுந்து ஓடுகிறுள் பத்மினி.

அடுத்த சனிக்கிழமை பத்மினி ஃபோன் செய்கிறுள் குமாருக்கு. ஆபீஸுக்கு வரலாமா என்று கேட்டபோது, குமாரின் மனக்குள் ஒரு சின்ன நிம்மதி ஏற்படுகிறது.

''சரி வாருங்கள்'' என்றுள் சுருக்கமாக, நுழைகிறுள்.

இன்று அவள் வெளிர்ப் பச்சைக் கலர் சேலையும், வெளிர்ப் பச்சை சோளியும் அணிந்திருக்கிறுள்.

நெற்றியிலே சின்னதாக ஒரு சிவப்புப் பொட்டு ஒட்டியிருக்கிறுள்.

இந்த வெளிர்க் கலர் புடவையும் பொட்டும் அவள் தலைவாரியிருந்த விதமும் அவளுக்குப் பொருத்தமாக இருப்பதாக நினைக்கிறுன் குமார்.

''வாங்க மிஸ் பத்மினி'' என்று வாய் நிறையக் கூப்பிடுகிறுன் குமார்.

பத்மினி குமாரை நிமிர்ந்து பார்க்கிறுள்.

குமார் இன்று தலையை வாரிவிட்டிருந்த விதம் வேறுவிதமாக, ஆனல் அவன் முகத்துக்குப் பாந்தமாக, இருப்பதாக நினைக்கிறுள். அவன் போட்டிருந்த மூக்குக்கண்ணுடியின் 'ப்ரேம்' கூட வேருக, ஆனல் அவன் முகத்துக்குப் பொருத்தமாக இருப்பதை அவள் கவனிக்கிறுள்.

''ஏதாவது ஹோட்டலுக்குப் போய் காப்பி சாப்பிட்டுக் கொண்டே பேசலாமா'' என்று குமார் கேட்டதும், பத்மினி ''சரி போகலாம்'' என்கிறுள்.

சாப்பாட்டு மேசையின் முன்பு இருவரும் அமருகிறுர்கள்.

பத்மினிதான் பேச்சைத் துவக்குகிறுள்.

''உங்க மூக்குக் கண்ணுடி ப்ரேமை மாத்திவிங்களா என்ன''

''ஆமாம்... நல்லா இருக்கா''

''முன்பு நீங்க போட்டிருந்தது அவ்வளவு பொருத்தமா இல்லே ஒங்க முகத்துக்கு. இப்பப் போட்டிருக்கறது ஒங்க முகத்துக்கு எடுப்பா இருக்கு.''

''அப்படியா ரொம்ப தாங்க்ஸ். ஒங்களுக்குக் கூட லைட் கலர் சாரீஸ் ரொம்பப் பொருத்தமாக இருக்கு. சரி என்ன சாப்பிடுறீங்க'' என்றபடியே இரண்டு பாதாம்பால் வரவழைக்கிறுன் குமார். பாலைப் பருகியபடியே பத்மினி ஆரம்பிக்கிறுள்.

''எனக்கு எப்படிச் சொல்றதுன்னே தெரியல்லே. நீங்க தப்பா நினைக்கல்லேன்னு நான் ஒரு விஷயம் சொல்றேன்... எனக்கு உங்களை...' என்று தயங்கிய போது குமார் இடைமறிக்கிறுன்.

''நீங்களும் தப்பா நினைக்கல்லேன்னு நானும் ஒரு விஷயம் உங்கிட்டே சொல்லணும்... எனக்கு உங்களை... பிடிக்...'' முடிக்கும் முன், ''ஏண்டா பழி, இங்கேயா இருக்கே உனக்கு ஃபோன் வந்தது உங்க வீட்டிலேருந்து... ஓடுடா வீட்டிற்கு''

குமாரின் ஸெக்ஷன் பாஸ் வந்து சொல்லவும் ஒரு பாலுக்கான காசை மேசை மீது வீசிவிட்டு ஒரே ஓட்டமாக ஓடுகிறுன் குமார்.

ஒருவாரம் ஓடிவிடுகிறது.

பத்மினி குமாருக்கு ஃபோன் செய்கிறுள்.

''குமார் லீவில் இருக்கிறுரும். வர இன்னும் ஒரு வாரம் பிடிக்கும்'' என பதில் வருகிறது.

பத்மினியின் மனம் சற்றே சங்கடப்படுகிறது.



உங்களுக்காகவே

# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

# குண

## கூந்தல் தைலம்

தலை மயிர் உதிர்தல், செம்பட்டை நிறம்.
பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும்.
தினசரி தலைக்குத் தேய்த்து வந்தால் தலை மயிர்
நீண்டு கறுத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு
மண்டையில் சொறிந்தால் செதில் உரிதல்
குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும்
விரும்பி உபயோகிக்கின்றனர்
1 பாட்டில் விலை ரூ 16-25 V.P.P. உண்டு
தபால் செலவு இல்லை.

தேவைக்கு எழுதவும் **நவசக்தி வைத்தியசாலை**
**தபால் பெட்டி எண் 7 சேலம் 636 001**

---

*எமது தைலம் கிடைக்குமிடங்கள்:* 1. சேலம் – ரோசு மெடிக்கல்ஸ். 2. ஆத்தூர் – முத்து மெடிக்கல்ஸ், 3. நாமக்கல் – கஸ்தூரிபா மெடிக்கல்ஸ். 4. ராசிபுரம் – ராசி மெடிக்கல் ஸ்டோர்ஸ், 5. மேட்டூர் – ஜெயலஷ்மி மெடிக்கல்ஸ், 6. திருச்செங்கோடு – சீனிவாசா மெடிக்கல்ஸ், 7. தர்மபுரி – விஜயலஷ்மி மெடிக்கல்ஸ் 8. கிருஷ்ணகிரி – கோபாலகிருஷ்ணா மெடிக்கல்ஸ் 9. ஒசூர் – மூர்த்தி மெடிக்கல்ஸ் 10. பெங்களூர் – பிரசாத் ஸ்டோர்ஸ் K.G. சர்கிள். 11. சென்னை-3 – ஹேமா மெடிக்கல்ஸ். 12. அமிஞ்சிகரை – வேலவன் மெடிக்கல்ஸ் 13. குடியாத்தம் – திருமகள் மெடிக்கல்ஸ். 14. காஞ்சிபுரம் – லஷ்மி மெடிக்கல்ஸ். 15. அரக்கோணம் – அகிலாம்பிகை மெடிக்கல்ஸ். 16. ஆரணி – பாக்கியம் அண்ட் கோ., மருந்துகடை. 17. திருவண்ணாமலை – அன்னை மெடிக்கல்ஸ். 18. வேலூர் (NA) – பாரத் மெடிக்கல்ஸ். 19. திருப்பத்தூர் (NA) – லஷ்மி மெடிக்கல்ஸ் 20. விழுப்புரம் – அன்பு மெடிக்கல்ஸ் 21 கள்ளக்குறிச்சி – A. ராஜீ நாட்டு மருந்துக்கடை. 22. கும்பகோணம் – செல்வம் மெடிக்கல்ஸ். 23. தஞ்சாவூர் – சிட்டி மெடிக்கல்ஸ். 24. திருச்சி – சண்முகா மெடிக்கல் ஹால் 25. திண்டுக்கல் தமிழ்நாடு சித்த மருந்துக்கடை 26. பெரியகுளம் – N. லஷ்மணன் மருந்துக்கடை. 27. தேனி – ஆண்டாள் மெடிக்கல்ஸ் – 28. மதுரை – குமார் மெடிக்கல்ஸ். 29. மதுரை – ஸ்டேட் மெடிக்கல் கார்பரேசன் (24 மணி நேர கடை). 30. ராமநாதபுரம் – பாத்மா மெடிக்கல்ஸ். 31. காரைக்குடி – மலேசியா ஜெனரல் ஸ்டோர்ஸ். 32. விருதுநகர் – S.S.K. மெடிக்கல்ஸ். 33 தூத்துக்குடி – அன்பு மெடிக்கல்ஸ். 34. திருநெல்வேலி – கோமதி மெடிக்கல்ஸ். 35. பாளையங்கோட்டை – ஒலிவா இந்தியன் மெடிக்கல்ஸ் 36. நாகர்கோவில் – S. நல்ல பெருமாள் மருந்துக்கடை. 37. தென்காசி – M.R. மெடிக்கல்ஸ். 38. ராஜபாளையம் – அரவிந்த் மெடிக்கல்ஸ். 39. சிவகாசி – சிவகாசி மெடிக்கல்ஸ். 40. கோவில்பட்டி – சாந்தி மெடிக்கல்ஸ் – 41. ஸ்ரீ வில்லிபுத்தூர் – பாலாஜி மெடிக்கல்ஸ். 42. உடுமலை – ஜாம் ஜாம் மெடிக்கல்ஸ் 43. பொள்ளாச்சி – ராமநாதன் மெடிக்கல்ஸ் 44. கோவை – காசிநாத் அண்ட் கோ., 45. கோவை – திருமலை மெடிக்கல்ஸ் காந்திபுரம் 46. திருப்பூர் – கீதா மெடிக்கல்ஸ். 47. அவினாசி – அவினாசி மெடிக்கல்ஸ் 48. கோபி – வாணி பார்மஸி 49. ஈரோடு – ஸ்ரீ ராகவேந்திரசாமி மெடிக்கல்ஸ் 50. திருச்சி ஜங் – சுபாஸ்ரீ மெடிக்கல்ஸ் 51. புதுக்கோட்டை – மீனு பார்மஸி 52. திருவாரூர் – அன்னபூர்ணா மெடிக்கல்ஸ் 53. மாயவரம் – ஸ்வாமி மெடிக்கல்ஸ். 54. சிதம்பரம் – ராஜா பார்மஸி 55. விருத்தாசலம் – ஜெயா பார்மஸி 56. சேலம் செவ்வாய்பேட்டை – பிரபாத் மெடிக்கல்ஸ் 57. தொட்டியம் – மீனாஷி மெடிக்கல்ஸ் 58. கிருஷ்ணகிரி - பி. கே. பி. எம். ஜி. மெடிக்கல்ஸ் 59. கரூர் - அண்ணாமலை மெடிக்கல்ஸ்

---

எமது இதர சித்த ஆயுர்வேத தயாரிப்புகளான நவரத்ன கல்பலேகியம், சில்வர் பில்ஸ், வாயுக்கூர், குண மலசக்தி சூரணம், நெல்லிக்காய் லேகியம் etc. எமது ஸ்டாக்கிஸ்ட்டுகளிடம் மற்றும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

பாவம் ஏன் ஒரு வாரமாக வீவில் இருக்கிறாரமே?

உடம்பு சரியில்லையா அவருக்கு?

என்ன உடம்பாக இருக்கும்?

பத்மினிக்கு இருப்பே கொள்ளவில்லே.

மறுபடியும் ஃபோன் செய்கிறுள் குமாரின் ஆபீஸுக்கு.

''இன்னமும் குமார் லீவிலிருந்து வர வில்லையாம்.''

''அவருக்கு உடம்பு சரியில்லையா? ஏன் லீவில் இருக்கிறுர்'' பதட்டமாக கேட்கிறுள் பத்மினி.

''அவருக்கு உடம்புக்கு ஒன்றுமில்லே. அவர் அம்மாவுக்குத் தான் உடம்பு சரியில்லேயாம்'' என்று பதில் கிடைத்ததும் மனசுக்குள் சற்றே ஆறுதல் அடைகிறுள் பத்மினி.

அவர் அம்மாவுக்கு உடம்பு சரியில்லே யாளுல் அவர் ஏன் லீவு போட வேண்டும்?

ஒருக்கால் அவர் வீட்டில் அம்மாவைப் பார்த்துக் கொள்ள வேறு யாருமே இல்லேயோ? பத்மினிக்குத் தவிப்பாக இருக்கிறது.

சென்று பார்த்தால் என்ன என்ற எண்ணம் எழுந்ததும் அவளுக்கு இருப்புக் கொள்ளவில்லே.

குமாரின் வீட்டைத் தேடிக்கொண்டு கிளம்பி விடுகிறுள் பத்மினி.

வீட்டு வாசலில் குமாரின் அப்பா நின்றிருக்கிறுர்.

''மாமிக்கு உடம்பு இப்போ எப்படி இருக்கு''

கவலேயோடு பார்க்கும் பத்மினியை உற்றுப் பார்க்கிறுர் குமாரின் அப்பா.

''யாரோ பார்த்த முகம் மாதிரி இருக்கிறதே''

''குமார் யாரோ வந்திருக்கா பாரு.''

உரத்த குரலில் கூவியழைக்க, குமார் உள்ளிருந்து வருகிறுன்.

''ஓ... நீங்களா... வாங்கமிஸ். பத்மினி.'' முகமெல்லாம் சிரிப்பாக வரவேற்றபோது, ஒரு நிமிஷம் திகைத்து நின்ற குமாரின் அப்பா, 'வாம்மா பத்மினி வா... உன்னே வா...'' என்று பிரியமுடன் அழைக்கிறுர்.

ஞாபகமாக பையில் வாங்கி வந்திருந்த சாத்துக்குடிப் பழங்களே குமாரின் அம்மா விடம் நீட்டுகிறுள்.

''இப்போ எப்படிம்மா இருக்கு'' பரிவாகக் கேட்கிறுள் பத்மினி.

''இப்போ நன்னு தேவலே. உட்காரும்மா நல்ல வெய்யில்லே வந்திருக்கே. ஒரு டம்ளர் ஜூஸ் சாப்பிடறியா ''

''இதோ போய் கலந்துண்டு வரேன்'' என்று ஓடிய குமாரை தடுத்து நிறுத்து கிறுள் அவள்.

''நானே கலந்து கொண்டுவரேன்.''

பதவிசாகப் புடவைத் தலேப்பை இழுத்துச் செருகிக் கொண்டு சமையலறையுள் நுழையும் பத்மினியைப் பின்தொடர்கிறுன் குமார்.

''நீங்க ஏதோ சொல்லணும்னு சொன்னேளே'' ஜூஸைக் கலந்தபடி குறும்பாகக் கேட்டுச் சிரிக்கிறுள் பத்மினி.

''ஓ... அதுவா... அதாவது எனக்கு வாய்க்கிற பெண்டாட்டி அழகானவளாக, சிவப்பாக இருக்கணும்னு ஆசைப்பட்டேன். அதுனுலே ஒன்னேப் பிடிக்கல்லேன்னு சொல்லணும்னுதான் உன்னே ஃபோன்லே கூப்பிட்டு என் ஆபீஸுக்கு வரச்சொன்னேன். ஆனு... இப்போ...''

''ஆஹு... இப்போ...''

''இப்ப அப்படி நினைக்கல்லே. எனக்குவர்ற பெண்டாட்டி பண்புள்ளவளாகவும், பாச முள்ளவளாகவும், அடக்கமானவளாகவும் இருக்க வேண்டும். அதுதான் உண்மையான அழகு என்று எண்ணுகிறேன். நீயும் ஏதோ சொல்லணும்னு நினைச்சே இல்லே?''

''நானும் எனக்கு வாய்க்கிற புருஷன் அழகானவரா இருக்கணும்னுதான் ஆசைப் பட்டேன். ஆனுல்...''

''ஆனுல் என்ன''

''கண்ணியம், கடமை, கட்டுப்பாடு இந்த மூணும் தான் ஒரு உண்மையான ஆண்மகனுக்கு அழகுன்னு உங்களோட பழகின இந்தச் சில நாட்கள்லே புரிஞ்சுண்டுட்டேன்.''

''அப்போ எங்களுக்குப் பெண் பிடிச்சிருக்கு என்று ஒங்க அப்பாவுக்கு ஃபோன் பண்ணிச் சொல்லிட்டுமா'' குமாரின் அப்பா குதூகலமாகக் கேட்கவும்,

குமார், பத்மினி இருவர் முகத்திலும் செம்மை படருகிற அழகை குமாரின் அப்பாவும் அம்மாவும் ரசித்துச் சிரிக்கிறுர்கள்.



உலகப் பிரசித்தி பெற்ற எழுத்தாளர் டாக்டர் முல்க்ராஜ் ஆனந்தை அடுத்து மார்க் (Marg) ஆசிரியர் பொறுப்பை சரயு டோஷி ஏற்றபோது அவ்விதழ் அதிக நாள் ஓடாது என்று பலர் எண்ணினர். ஆனுல், அவர் அதைப் பொய்ப்பித்து டாக்டரை மிஞ்சும் வகையில் பல இதழ்களே வெளிக் கொணர்ந்துள்ளார்.

—எஸ்.ஏ.காதர்

# ஸீக்கோ

பித்தளையினால் செய்யப்பட்ட
எலக்ட்ரானிக் காஸ் லைட்டர்

2 வருட உத்திரவாதம்




SEIKO®




ELECTRONIC
GAS LIGHTER

**SHANTI AGENCIES**

151, Govindappa Naicken Street, Madras-1 Ph: 33983

வியாபார விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன

KAN ADS 641

# பேனினால் தலைமுடி உதிரும்

நறுமணம் கமழும் கென்ஸ் தைலத்தை
உபயோகித்து ஈறையும், பேனையும்
அறவே ஒழியுங்கள், தலை முடியை
பாதுகாத்துக் கொள்ளுங்கள்.



# கென்ஸ்

'சிறந்த பேன் நாசினி'

ஈறுகளையும் கொல்லும்
பென்சொகெயின் கலந்தது.

தீங்கற்றது







பார்ம் ப்ராடக்ட்ஸ்
தஞ்சாவூர்-613 007 தமிழ்நாடு
விற்பனை விவரங்களுக்கு எழுதவும்.

Chhaya/PP/203

நுண்ணறிவு (Intelligence) என்பது ஒரு வரப் பிரசாதம். இயற்கையின் படைப்பில், இந்நுண்ணறிவானது சாதி, சமய, இன, வர்க்க வேறுபாடில்லாமல் மனிதனுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது. அறிவுள்ள குழந்தைகள் வேண்டுமென விரும்பாத பெற்றோர் எவருமே இருக்க முடியாது. ஆனால் குறிப்பிடத்தக்க நுண்ணறிவுடைய குழந்தைகளைப் பெற்றும், அவர்களை எதிர்காலத்தில், உண்மையாகவே ஒரு திறமைசாலியாக ஆக்க முடியவில்லையே எனும் அவல நிலைக்குப் பொறுப்பாகாமல் பெற்றோர் விழிப்புணர்ச்சியுடன் நடந்து கொள்ள வேண்டியது இன்றியமையாத ஒன்று.



குழந்தையின் மொழி வளர்ச்சியானது, ஒலிகளை எழுப்புவதில் துவங்கி, தனக்குத் தானே பேசிக் கொள்வது, விளையாட்டுப் பொருட்களிடம் பேசிக் கொள்வது, பொருள்களைச் சொல்வது, கேள்வி கேட்பது, வார்த்தைகளைக் கோவையாக்கி வாக்கியங்களாகப் பயன்படுத்துவது முதலிய பல நிலைகளில் படிப்படியாக வளர்ச்சி பெறுகின்றது.




குழந்தையின் மொழி வளர்ச்சியின் வேகத்துக்கும், அதன் குடும்பச் சூழ்நிலைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. அதன் ஆர்வ உணர்ச்சிக்கு மதிப்புக் கொடுத்து, அதனுடன் ஓயாமல் பேசி, அது கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் பொறுமையாகப் பதில் சொல்லி வரும் அங்கத்தினர்களை உடைய குடும்பங்களில் வளரும் குழந்தைகள் அதிக அளவு மொழித் தேர்ச்சியும், அநேக விஷயங்களை அறிந்து கொள்ள வேண்டுமென்ற அவா அதிகம் பெற்றவர்களாகவும் விளங்குகின்றனர். இதுவே, இவர்களைப் பிற்காலத்தில் அறிவில் நாட்டமுடையவர்களாக ஆக்குகின்றது.

விஞ்ஞான விளையாட்டுக்கள், கணிதப் புதிர்கள், ஓவியம் வரைதல் முதலியன அவனது கற்பனைத் திறனுக்கு ஈடு கொடுப்பதோடு அவனுடைய ஆர்வத்தை ஒரு குறிப்பிட்ட துறையில் செலுத்துவதற்கும் கால்கோளாக அமைந்து விடுகின்றது.

குழந்தைகள் மிகச் சிறு வயதில் சொல்லும் பொய்களில் பல கற்பனையின் வெளிப்பாடே. எனவே அவற்றைக் காரணமாகக் கொண்டு குழந்தைகளைக் கடுமையாகத் தண்டிக்கலாகாது. மாறாக கற்பனையை [illegible] யோசிக்கும்வகையிலான கதைகள் சொல்லுமாறு அவர்களைத் தூண்ட வேண்டும். மற்றும் சிந்தனைக்குப் பயிற்சியளிக்கும் விளையாட்டுக்களில் அவனது நாட்டம் திருப்பப்பட வேண்டும். நாளடைவில் இந்தப் பயிற்சியானது ஆக்கப்பூர்வமான வழிகளில் அவனது சிந்தனையைச் செலவிடச் செய்யும். விஞ்ஞானிகள், பொறியியல் நிபுணர்கள் முதலியோர் சிறு வயதில் கற்பனைத் திறன் மிக அதிகமாயிருந்தவர்கள் என்பதைப் பெற்றோர் மறந்து விடலாகாது.

குழந்தைப் பருவத்தின் இன்னொரு சிறப்பு, நினைவுத் திறன். நிகழ்ச்சிகள், பசுமரத்தாணி போல குழந்தைகளின் உள்ளத்தில் பதிந்து விடுகின்றன. இதனைப் பெற்றோர் மனதில் வைத்துக் கொண்டு தவறான கருத்துக்கள் உருவாகும் சூழ்நிலைகளைத் தவிர்க்க வேண்டும். இப்பருவத்தில் கருத்துச் செறிவுள்ள நீதிக் கதைகள் நன்மை பயக்கும். நல்ல பழக்க வழக்கங்கள், அறநெறிக் கொள்கைகள், வாழ்க்கைக் குறிக்



பொருட்களை முதலியவற்றைப் பகிர்ந்துகொள்வதை உதாரணமாக எடுத்துச் சொல்லலாம்.

குழந்தையைப் பொறுத்தவரை தான் தான் முக்கியம். தன்னை மையப்புள்ளியாக வைத்தே மற்றவர்களைப் பற்றிய கண்ணோட்டத்தை வளர்க்கின்றது அது. தன்னை முக்கிய அங்கத்தினனாக குடும்பத்திலுள்ள மற்றவர்கள் கருத வேண்டும் என்றும் எதிர்பார்ப்பு குழந்தைப் பருவத்திலேயே வந்து விடுகின்றது.

தன்னை மற்றவர்கள் பொருட்படுத்துவதில்லை என்னும் எண்ணம் குழந்தைகள் மனத்தில் வேரூன்றலாகாது. அப்படி நேர்ந்தால் விளைவுகள் பயங்கரமாயிருக்கும்.

**என்பாட்டி சொன்ன வைத்தியம்!**

கொட்டைப் பாக்கைச் சந்தனம் போல் இழைத்து சுமார் ஒரு டீஸ்பூன் அளவுக்குக் காலையில் வெறும் வயிற்றில் சிறிது பாலில் அல்லது தண்ணீரில் கலந்து குழந்தைகளுக்குக்கொடுக்க குடற்பூச்சிகள் மொத்தமும் அன்றே வெளிவரும். கடும் பத்தியம் கிடையாது. குழந்தைகளின் வயதுக்கேற்ப அளவைக் கூட்டியோ, குறைத்தோ கொடுக்கலாம்.

—எஸ். இந்திரா.

மற்றவர்களது கவனத்தைத் தன் மேல் இருப்ப அது தன் சிறிய மனதுக்குத் தோன்றும் வகையில் செயல்பட ஆரம்பிக்கின்றது. பொருட்களை எறிந்து ஓசைப்படுத்துவது, தன்னுடைய குழந்தைகளை அடிப்பது, அழுது அடம் பிடிப்பது. இப்படிப் பல வகைகளில் தன்னுடைய உள்ளக் குமுறலை வெளிப்படுத்தி மற்றவர்கள் கவனத்தைத் தன்மேல் விழச் செய்கின்றது. தன்னைக் கண்டிக்கும் விதமாகவே மற்றவர் கவனம் தன்மேல் விழுந்தாலும், குழந்தையைப் பொறுத்தவரையில் அது ஒரு சாதனையே. இக்குழந்தைகள் இதேபோக்கில் வளர்வார்களாயின் பிற்காலத்தில் நெறி பிறழ்ந்த குழந்தைகளாக மாறினாலும் வியப்பில்லை.

வீட்டில் சந்தோஷமான சூழ்நிலை இல்லாதிருத்தல், ஆர்வத்திற்கு ஈடு செய்யும் வகையில் பள்ளிப் படிப்பு அமையாதிருத்தல், தன் வயதுக் குழந்தைகளிடம் பழகுவதில் ஏற்படும் சிக்கல், எதைப் பற்றியாவது உள்ள தவிர்க்க முடியாத ஏக்கம் இப்படிக் காரணங்கள் பல இருக்கலாம். கண்டு பிடித்து குழந்தைக்கு உதவும் பொறுப்பு பெற்றோருடையது.

குழந்தைகளின் திறமைகளைப் பெற்றோர் புரிந்து கொள்வதோடு, குழந்தைகளை தங்களின் திறமைகளைப் புரிந்து கொண்டவர்களாக ஆக்கப்படல் வேண்டும். குழந்தைக்கு நல்லது எது என்று பெற்றோருக்குத்தான் நன்கு தெரியும். ஆனால் நல்லது எது என்பதை அவன் தானே புரிந்து கொள்ளும்படி செய்ய வேண்டும்.

மகன் எதிர்காலத்தில் ஒரு டாக்டராகவோ, இன்ஜினியராகவோ ஆக வேண்டுமெனப் பெரும்பாலான பெற்றோர் கனவு காண்கின்றனர். வேலை வாய்ப்பு, சமூக அந்தஸ்து முதலானவற்றின் அடிப்படையில் கண்ணோக்கும்போது, மேற்கூறிய இரண்டு உத்தியோகங்களும் பெற்றோரைக் கவர்வதில் வியப்பில்லைதான். ஆனால், இதைப்போலவும் இதை விடவும் சமூக அந்தஸ்து, வேலை வாய்ப்பு உரிய வேறு எத்தனையோ தொழில்கள் இருக்கின்றன என்பதைப் பெற்றோர் முதலாவதாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

பள்ளிப் பாடத்தில் குறைந்த மதிப்பெண் பெற்றுக் கொண்டு வரும் குழந்தையை எவ்வளவு முயன்றும் சரி செய்யமுடியவில்லையெனில், அவனை ஒன்றுக்கும் உதவாதவன் என்று ஒதுக்கி விடுதல் கூடாது. எந்தத் துறையில் அவனுக்கு ஆர்வமோ அதில் ஊக்கமளித்து, அவன் வாழ்க்கையைப் பிரகாசமடையச் செய்ய வேண்டியது பெற்றோரின் கடமையாகும்.

குழந்தைகள் பெற்றோரைச் சார்ந்து வாழ்பவர்கள். பெற்றோரின் அன்பையும், கண்காணிப்பையும் பெருமளவில் எதிர்பார்ப்பவர்கள். தன்மேல் தன் பெற்றோரின் அன்பு அபரிமிதமாக உள்ளது எனபதை உணர்ந்து கொள்ளும் போது அவர்களது மகிழ்ச்சி எல்லை கடந்து விடுகிறது. பெற்றோருக்காக எச்செயலையும் செய்யும் மனப்பான்மை வந்து விடுகின்றது. பெற்றோர் இதனை மனத்தில் கொண்டு கண்டிப்பும், கட்டுப்பாடுகளும் தங்களது அன்பைக் கவசமிட்டு மறைத்துக் கொள்ளாதவாறு விழிப்புணர்ச்சியுடன் நடந்து கொள்ள வேண்டுவது அவசியம்.

-ஜெஸ்மின் சரோஜா.

## "என் பிள்ளை கஷ்டப்படுவதைப் பார்க்க சகிக்கலை எனக்கு. பள்ளியிலிருந்து வீட்டுக்கு வரும்போது மழையிலே முழுவதும் நனைந்துவிட்டான். இப்ப என்னடான்னு பாழாய்ப்போன ஜலதோஷம் பிடித்துக் கொண்டு விட்டது. அவன் எதுவும் செய்ய முடியாமல் தவிக்கிறான் பாவம்"!



இந்த நிலையிலே அவனைப் பார்த்து நான் பயந்து போனேன்—அவன் தும்மிக் கொண்டே இருந்தான். மூக்கிலே சளி, உடல் வலி வேறு, தாய் மனசு கேக்குமா? உடனே ஈரம் போக துண்டாலே அவனைத் தொடைத்து, துணியை மாத்தி அவனுடைய மூக்கு, தொண்டை, மார்பு, முதுகிலேயும் விக்ஸ் வேப்போரப்பை நல்லாத் தடவி, அவனை அப்படியே படுக்க வைத்தேன். அன்னைக்கு ராத்திரி பூரா நிம்மதியாகத் தூங்கினான். அடுத்த நாள் காலையிலே எழுந்தப்ப ஜலதோஷமெல்லாம் போயிட்டுது. சுறுசுறுப்பா பள்ளிக்குப் போகத் தயாராயிட்டான். எங்களுக்கெல்லாம் சந்தோஷம். இதுக்கெல்லாம் விக்ஸ்"க்குத்தான் நன்றி சொல்லணும்! இனிமே எனக்குக் கவலையே இல்லை. வீட்டிலே விக்ஸ் வேப்போரப் பாட்டிலை தயாரா வைத்திருக்கிறேன். அவனுக்கு ஜலதோஷம் வரும்போதெல்லாம் ரொம்ப உதவியாய் இருக்கு.''

---

### விக்ஸ் காட்டும் பாசம் உங்கள் பாசத்தைப்போல

விக்ஸ் வேப்போரப் ஜலதோஷ அறிகுறிகளை உடனே போக்குவதற்கு இரண்டு வழிகளில் செயல்புரிகிறது. முதலாவதாக அதன் விஞ்ஞான முறையில் மருந்து கலந்த ஆவி அடைபட்ட மூக்கைத் திறந்துவிடுகிறது. அதனால் நீங்கள் தாராளமாக சுவாசிக்கிறீர்கள். இரண்டாவதாக தசைவலியைப் போக்கி இதமளிக்கிறது. அதனால்தான் அது குடும்பத்தினர் எல்லோருக்கும் நம்பகமான ஜலதோஷ நிவாரணி.




## விக்ஸ்வேப்போரப்

**சுவாச நிவாரணம் அளிக்கிறது**
**நிவாரண அனுபவத்தை உணரவைக்கிறது**

RHL-20/84

பரிசுக் குறிப்புக்களைத் தேர்ந்தெடுத்தவர்கள்:

**ஹெச். வி. எஃப். பெண்கள் மன்றம்,**
**ஆவடி, சென்னை-54.**



**முதல் பரிசு:** **குத்துவிளக்கு**

## ட்ரிபிள் ஃப்ரூட் ஸோமாஸ்

**தேவையான பொருட்கள்:**

வேண்டும். நீர் அதிகமாகி விட்டால் பிறகு அது இறுகி வருவது கடினம்.

—க. ரோஹிணி, கனக்காடு.

**இரண்டாம் பரிசு:** **டால்டா டப்பா**

வெஜிடேரியன் ரிக்ஸா

வெண்ணெய் — முக்கால் கப்,
மைதாமாவு — 3 கப்,
சமையல் சோடா — அரை டீஸ்பூன்,
பேக்கிங் பௌடர் — அரை டீஸ்பூன்,
சர்க்கரை பொடித்துச் சலித்தது — ஒன்றரை கப்,
கிஸ்மிஸ், பொடித்த முந்திரி, துண்டுப் பேரீச்சை, செர்ரி, பாதாம் முதலியவை—ஒரு சிறிய கப்,
கலர் பௌடர் — விருப்பப்பட்டால்.

**செய்முறை:**

மைதாமாவு, சமையல் சோடா, பேக்கிங் பௌடர், பொடித்த சர்க்கரை இவற்றை நன்கு சேர்த்துக் கலந்து சலித்து வைத்துக் கொள்ளவும். வெண்ணெயை லேசாக இளக்கி இந்தக் கலவையில் சேர்க்கவும். மாவை மூன்றாகப் பிரித்து வைத்துக்கொள்ளவும்.

முதல் கப்பில் ஆரஞ்சுக் கலர் சேர்க்கவும். (சிறிது ஆரஞ்சு எஸன்ஸ் விருப்பப்பட்டால் சேர்க்கலாம்.) ஆரஞ்சுப் பழச்சாற்றைச் சேர்த்து நன்கு கலக்கவும். கைக்கு கெட்டியான தோசை மாவு பதத்தில் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் இரண்டு ஸ்பூன் பாலோ அல்லது ஒரு மூடி எலுமிச்சைச் சாறோ சேர்க்கலாம்.

இரண்டாவது பகுதி மாவில் மேற்கூறியபடி பைன் ஆப்பிள் ஜூஸ் சேர்த்து மாவை மேற்கூறிய பதத்திலேயே தயாரித்துக்கொள்ளவும். விருப்பப்பட்டால் இரண்டு சொட்டு பைன் ஆப்பிள் எஸென்ஸ் சேர்க்கவும். விரும்பிய கலர் போடலாம்.

மூன்றாவது பகுதி மாவில் மேற்கூறியபடியே திராட்சைப் பழச்சாறு சேர்த்து மாவைத் தயாரித்துக் கொள்ளவும். க்ரேப் எஸென்ஸ் இரண்டு சொட்டுச் சேர்க்கலாம். பச்சை வண்ணப் பௌடர் போட்டுச் சேர்க்கவும்.

ஓவனைச் சூடு ஏற்றவும். ஓவனில் உள்ளே வைக்கும் பாத்திரத்தில் சிறிது வெண்

வாழைப்பழம் — 3,
பச்சரிசி மாவு — 1 ஸ்பூன்,
பொரிகடலை மாவு — 1 ஸ்பூன்,
மைதாமாவு — அரை கிலோ,
டால்டா — அரை கிலோ,
பாசிப்பருப்பு — 1 ஸ்பூன்,
ஏலப்பொடி — அரை ஸ்பூன்,
முந்திரிப்பருப்பு — 1 ஸ்பூன்,
வெல்லம் — அரை கிலோ,
எள் — அரை ஸ்பூன்,
தேங்காய்த் துருவல் — 2 ஸ்பூன்.

**செய்முறை:**

பலாப்பழம், மாம்பழம், வாழைப்பழம் (பழங்கள் நன்கு கனிந்தவையாக இருக்க வேண்டும்.) முதலியவற்றை சிறு துண்டாக்கி வேக விடவும். நன்கு வெந்தவுடன் கீரை மத்தினால் நன்கு, மசியக் கடைந்துவிட வேண்டும். இதனுடன் வெல்லத்தைப் பொடி பண்ணிப் போட்டுக் கிளற வேண்டும். ஒரு டீஸ்பூன் டால்டாவை முந்திரிப்பருப்பு, எள், பாசிப்பருப்பு, தேங்காய்த் துருவலை சிவக்க வறுத்துப் போட வேண்டும். பச்சரிசி மாவையும், பொரிகடலை மாவையும் போட்டு, எல்லாம் ஒன்றாகக் கலந்து, உருட்டுவதற்கு ஏற்ற வகையில் இறுகும் வரை அடிபிடிக்காமல் நன்கு கிளறி, பதத்திற்கு வந்தவுடன் இறக்கவும்.

மைதாவை, பூரிக்கு மாவு பிசைவது விதத்தில், ஒரு சிட்டிகை உப்பு சேர்த்துப் பிசையவும். சிறுசிறு வட்ட பூரிகளாக போட்டுக் கொள்ளவும். பூரிகளின் நடுவில் 1 ஸ்பூன், மேற்கூறிய வகையில் தயாரித்த பூரணத்தை வைத்து, விளிம்புகளை இணைத்து ஒட்டி விடவும். ஸோமாஸ் கரண்டியை வைத்து ஓரங்களை ஒன்று போல்வெட்டி அழகுபடுத்தவும்.

வாணலியில் டால்டாவை காய்ச்சிக்காய்ந்ததும், இந்த ஸோமாஸ்களை இரண்டிரண்டாகப் போட்டு, பொன்னிறத்தில் பொரித்து எடுக்கவும்.

பின்குறிப்பு: பழங்களை வேகவிடுகையில் மிகக்குறைந்த அளவிலேயே நீர் வைக்க




**தேவையான பொருட்கள்**

கமலா ஆரஞ்சுப் பழச்சாறு — கால் கப்,
பைன் ஆப்பிள் பழச்சாறு — கால் கப்,
திராட்சைப் பழச்சாறு — கால்கப்
(சாறு புதிதாக எடுக்கப் பட்டதாக இருக்க வேண்டும். எல்லாப் பழங்களும் கிடைக்காவிட்டால் ஏதாவது முக்கால் கப் ஒரே பழ ஜூஸ் கூட எடுத்துக்கொள்ள லாம்.)

(இதுவரு [illegible]

பாத்திரத்தில், முதலில் ஆரஞ்சு பழக்கலவையை விடவும். மேலே சிறிது பழத் துண்டுகளைப் போடவும். பிறகு பைன் ஆப்பிள் கலவையைப் பரப்பவும். மேலே சிறிது பழக்கலவை தூவவும். பிறகு திராட்சை ஜூஸ் கலவையைப் போட்டு, மேலே பழத் துண்டுகளைப் போடவும். ஒன்றின் மீது ஒன்று போடும் போது அமுக்காமல் நாசூக்காகப் போட வேண்டும்.

ஓவனில் அரை மணி நேரம் வேகவிட்டு எடுக்கவும்.
கேக் ஓவன் இல்லாதவர்கள்: இரும்புச்சட்டி ஒன்றில் மணல் நிரப்பவும். நன்றாகச்சூடேற்றவும். பிறகு அடுப்பிலேயே வைத்து நடுவில் கேக் பாத்திரத்தைக் கலவையுடன் வைக்கவும். மேலே கப்பொன்று மூடி, மூடியின் மீது நல்ல செந்தணலை வைக்கவும். அரைமணியிலிருந்து முக்கால் மணி நேரத்திற்குள் கேக் பதமாகி விடும்.

—மோகனா பாலகிருஷ்ணன், மேட்டூர்.

**மூன்றாம் பரிசு** **அடுக்கு டப்பா**

## ஹவாய்யின் அன்னாசி

### தேவையான பொருட்கள்:

அன்னாசிப் பழம் — 1.
பச்சைப் பட்டாணி — 1 கோப்பை.
தேங்காய் — 1.
முந்திரிப் பருப்பு — 25 கிராம்.
பட்டை — 1 சிறிய துண்டு.
சாதிக்காய் — 1 சிறிய துண்டு.
இஞ்சி — ஒரு சிறிய துண்டு
பச்சைமிளகாய்-2
கசகசா — 1 தேக்கரண்டி.
சீரக தனியா தூள் — 1 தேக்கரண்டி.
சர்க்கரை — 1 தேக்கரண்டி.
பால் ஆடை அல்லது க்ரீம் — 2 மேசைக் கரண்டி.
நெய் — 3 மேசைக்கரண்டி.

அலங்கரிக்க:

உலர்ந்த திராட்சை — 2 மேசைக்கரண்டி.
தோல் உரித்து சீவிய பாதாம்பருப்பு—8
முந்திரிப் பருப்புத் துண்டுகள்—25 கிராம்.

### செய்முறை:

அன்னாசிப் பழத்தை தோல் சீவி, சிறிய துண்டுகளாக்கி, நறுக்கிக் கொள்ளவும் தேங்காய் துருவிக் கொண்டு, 2 மேசை கரண்டி தேங்காய் எடுத்து மசாலா அரைக்க தனியாக வைக்கவும். பாக்கியைத் தண்ணீரில் சேர்த்து மிக்ஸியில் அரைத்துக்கெட்டித் தேங்காய்ப் பால் 1 கிண்ணம், 2—வது தேங்காய்ப்பால் 1 கிண்ணம் என்று எடுத்து வைக்கவும். 25 கிராம் முந்திரிப் பருப்புடன், இஞ்சி, மிளகாய், தேங்காய்த் துருவல், கசகசா, தனியா சீரகத்தூள் சேர்த்து மையாக அரைத்துக் கொள்ளவும். அடுப்பில் வாணலியைச் சூடாக்கி, ஒரு மேசைக் கரண்டி நெய் சேர்த்து, அரைத்த மசாலா விழுதை நன்றாக வதக்கவும். க்ரீம் சேர்த்து நன்றாகக் கிளறவும். பட்டாணி, அன்னாசி, துண்டுகள் சேர்த்து 1 கிண்ணம் தண்ணீர், உப்பு போட்டுக் கொதிக்க வைக்கவும். 2—வது தேங்காய்ப் பால் சேர்த்துப் பழத் துண்டுகள் நன்றாக வேகும் வரை கொதிக்க வைக்கவும். கெட்டி தேங்காய்ப்பால், சர்க்கரை சேர்த்து, ஒரு கொதி வந்ததும் கீழே இறக்கவும். பட்டை, சாதிக்காய் நன்றாகத் தூள் செய்து போடவும். பாக்கி நெய்யில் பாதாம், முந்திரி, திராட்சை வறுத்து அலங்கரிக்கவும்.

—திருமதி சுந்தரம், பம்பாய்—52.

**ஆறுதல் பரிசு:** **தட்டு**

## தேன் நிலவு ஹல்வா:

### தேவையான பொருட்கள்

மலாம்பழம் — சிறியதாக 1.
ஆப்பிள் — கால் கிலோ.
பலாச்சுளை — 10.
தேங்காய் — 1 மூடி.
பூவன்பழம்—2.
ஏலக்காய் — 5.
சர்க்கரை — அரை கிலோ.
முந்திரிப் பருப்பு — 20.

### செய்முறை:

மலாம் பழத்தையும் ஆப்பிளையும் கொப்பரைத் துருவலில் துருவவும். பலாச்சுளையை நன்றாக வேக வைக்கவும். தேங்காயைத் துருவி வைத்துக் கொள்ளவும். முந்திரியை சிறியதாக வெட்டிக் கொள்ளவும். ஏலக்காயைப் பொடி செய்து கொள்ளவும். ஒரு சமமான வாணலியிலோ, உருளியிலோ சுயம் உள்ள அடிக்கனமாக பாத்திரத்திலோ துருவிய பழங்கள், தேங்காய்ப் பூவைப் போடவும். பழத்தையும் வேக வைத்த பலாப் பழத்தையும் கரண்டியினால் நன்றாக மசித்துச் சேர்க்கவும். இந்தக் கலவையை சுமாரான தீயில் வைத்து 1 கரண்டி பாலை விட்டுக் கிளற வேண்டும். 10 நிமிஷத்துக்குப் பிறகு இவை நன்றாக வதங்கி நீர் கண்டி வரும்.

சர்க்கரையைப் போட்டு மீண்டும் கிளறவும். இளகி கூழ் போல் வரும். இப்பொழுது காஸ் அல்லது ஸ்டவ்வைச் சற்று அதிகமாக எரியவிடவும். சர்க்கரை பாகுப்பருவம் வரும். விரலால் தொட்டால் ஒட்டும் மெழுகு போன்ற பருவம் வரும். இறக்கி வைத்து ஏலக்காய்ப் பொடித் தூவி நெய்யை லேசாக காய்ச்சி ஹல்வாவில் ஊற்றிக் கலக்க வேண்டும். நெய் தடவிய தாம்பாளத்தில் கொட்டி முந்திரிப் பருப்பைத் தூவவும். செர்ரி பழங்களை சிறு துண்டுகளாக்கி அங்கங்கே தூவவும். துண்டு போட இயலாது. ஸ்பூனால் எடுத்துச் சாப்பிட வேண்டும்.

பி. சவிதா, பெங்களூர்—33.

ஆறுதல் பரிசு — தட்டு

## பப்பாளிப் பழ பால் அப்பம்

### தேவையான பொருட்கள்:

பப்பாளிப்பழம் (சிறியது) — 1.
தேங்காய் — 1.
சீனி — அரை கிலோ,
அரிசி — முக்கால் கிலோ,
உளுத்தம் பருப்பு — கால் கிலோ,
பசும்பால் — அரை லிட்டர்,
டால்டா — அரை கிலோ,
தேவையான அளவு — உப்பு.

### செய்முறை:

முதல் நாள் இரவு அரிசி, உளுத்தம்பருப்பு, இரண்டையும் ஊற வைக்க வேண்டும். மறுநாள் பப்பாளிப் பழத்தை மேல் தோலை சீவி விட வேண்டும். பழத்தைச் சிறிய சிறிய துண்டங்களாக நறுக்கிக் கொள்ளவேண்டும். ஊற வைத்த அரிசி, பருப்பு இரண்டையும் நன்றாக அரைக்க வேண்டும். இக்கலவையுடன் பழத்தைப் போட்டு, அரைக்க வேண்டும். தண்ணீர் ஊற்றாமல் கெட்டியாக, நைஸாக அரைக்க வேண்டும். பிறகு தேவையான உப்பைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

பிறகு தேங்காயைப் பிழிந்து பால் எடுத்துக் கொண்டுபசும்பாலை நன்றாகக் காய்ச்சி, தேங்காய்ப் பாலுடன் கலந்து கொள்ள வேண்டும். ஒரு பாத்திரத்தை அடுப்பில் வைத்துத் தேவையான தண்ணீர் ஊற்றிச் சீனியைக் கலந்து பாகு காய்ச்ச வேண்டும். பாகு பதத்துடன் வந்தவுடன் பாத்திரத்தை இறக்கி வைக்க வேண்டும்.

ஒரு அகன்ற பாத்திரத்தை அடுப்பில் ஏற்ற வேண்டும். பிறகு டால்டா முழுவதையும் ஊற்ற வேண்டும். டால்டா காய்ந்தவுடன் பப்பாளிப்பழ மாவு கரைசலில் கரண்டியைப் போட்டு மாவை எடுத்து சிறிதுசிறிதாக ஊற்ற வேண்டும். அடுப்பை நிதானமாக எரிய விட வேண்டும். வெக்க நன்றாக வெந்ததும் ஒரு பாத்திரத்தில் எடுத்துவைக்க வேண்டும். பிறகு ஒருஅகன்ற பாத்திரத்தில் பாலை ஊற்ற வேண்டும். இந்த அப்பத்தைப் பாலில் ஊற வைக்க வேண்டும். அதன்மேல் சீனிப் பாகை ஊற்ற வேண்டும். 3நிமிடம் கழிந்தவுடன் பப்பாளிப்பழம் பால் அப்பம் ரெடி.

திருமதி கே. உமாகண்ணன், மேக்கண்டலீ.



### நாட்டியோற்சவம்!

ஆமாம், நாட்டியத்தை உற்சவமாகத்தான் நடத்திக் காட்டுகிறார்கள் கலாமந்திர் நிறுவனத்தினர். கடந்த மூன்றாண்டுகளாக வளரும் நாட்டியக் கலைஞர்களையும், வளர்ந்த நாட்டியக் கலைஞர்களையும் இணைத்துப் பெரிய உற்சவம் போல நடத்துகிறார்கள். பிரபல தொழிலதிபரும், என்பீல்டு கம்பெனியின் மானேஜிங் டைரக்டருமான திரு. விஸ்வநாதன் நிறுவிய அறக்கட்டளையில் தோன்றியதே கலா மந்திர்.

சமீபத்தில் பதிமூன்று ...கள் சிறப்பாக இவ்விழா நடைபெற்று முடிந்தது. விழாவில் ஆடிய கலைஞர்களுள் ஒருவரான வடிவுதேவி..

**கலந்துரையாடலில் பங்கு கொண்டவர்கள்:**

1. திருமதி. சுந்தரி ஹரன் (தபால் தந்தி ஊழியர்)
2. திருமதி. ராஜம் கணேஷ் (குடும்பத் தலைவி.)
3. திருமதி ஆனந்தி நாராயணன் (இந்தியன் ஓவர்சீஸ் வங்கி.)
4. கீதா சங்கர் (குடும்பத் தலைவி.)
5. குமாரி உஷா (கல்லூரி மாணவி).
6. குமாரி ஸ்ரீமதி (ஸிண்டிகேட் வங்கி.)

'கடன் வாங்கித்தான் வியாபாரம் செய்யவேண்டும்'—இப்படிச் சொல்பவர் மேலை நாட்டு நிர்வாக இயல் நிபுணர் பீட்டர் ட்ரக்கர். ஆனால் நம் நாட்டுக் கம்பரோ, 'கடன்பட்டார் நெஞ்சம் போல்' என்று சொல்லியிருக்கிறார். கடன் வாங்கியவர்கள் நெஞ்சம் படாத பாடு படுமாம். மனசு தவிக்குமாம். ஆனால் அன்றாட வாழ்வில் கடன் வாங்காமல் நம்மால் இருக்க முடிகிறதா? இதோ சில பெண்மணிகள் கடன் வாங்கலாமா, கூடாதா... கடன் வாங்கலாம் என்றால், எப்போது வாங்கலாம், கடன் வாங்கக் கூடாது என்றால், ஏன் கூடாது என்பதை எல்லாம் ஆராய்கிறார்கள்......

# கடன் வாங்குவது தவறா?

**ஆனந்தி நாராயணன்:** இப்போ நாம பேசப் போகிற விஷயம் கடனைப் பற்றி... கடன் வாங்கலாம். ஆனா அது அவசியமா என்று பார்க்கணும். ஒரு வீடு வாங்கு வதற்காகக் கடன் வாங்குகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அந்தக் கடனை கொஞ்சம் கொஞ்சமாக நாம் கட்டிவிடு வோம். பின்னால் வீடு நமக்கு ஒரு சொத் தாக அமையும் இல்லையா?

**சுந்தரி ஹரன்:** வாஸ்தவம்தான். ஆனா இதுல ஒரு விஷயத்தை நாம கவனிக்கணும். ஆடம்பரத்துக்காக நாம கடன் வாங்கக்





கூடாது. சொத்து வாங்குவதற்கு, பய னுள்ள ஒரு முதலீட்டிற்குக் கடன் வாங்க லாம்.

**ராஜம் கணேஷ்:** பயனுள்ள முதலீடு என்று சொல்லும் போது தான் எனக்கு ஞாபகத்துக்கு வருது. எனக்குத் தெரிஞ்ச வங்க ஒருத்தர் ஒரு மாடுக்காக கடன் வாங்கினாங்க. அந்த கடனை அந்த மாட் டோட வருமானத்திலிருந்தே அடைச் சிட்டு அப்புறம் மேற்கொண்டு அந்த வரு மானத்தை வைத்தே ஏழு எட்டு மாடு

வாங்கிட்டாங்க. இப்போ ஒரு பண்ணையே நடத்தறாங்க.

**சுந்தரி ஹரன்:** கடன் வாங்குவதிலே தப்பே கிடையாது. ஆனா நம்முடைய தகுதியை உத்தேசித்துப் பார்க்கணும். நமக்கு திருப்பிக் கொடுக்க முடியுமா என்று யோசிச்சுத்தான் கடன் வாங்கணும்.

**உஷா:** சில சமயத்தில கடன் வாங்குவது தவிர்க்க முடியாத ஒன்றாகப் போய் விடுகிறது. ஆனா அந்தக் கடனே நம்முடைய நண்பர்களையும் பிரித்துவிடுகிறது. என்னுடைய ஃப்ரெண்டு ஒருத்தி பஸ் பாஸ் வாங்க பத்து ரூபாய் என்னிடம் கேட்டாள். பஸ் பாஸ் வாங்க அன்றுதான் கடைசி நாள். எனவே இது மாதிரி டையத்துக்கு ஹெல்ப் பண்ண வேண்டும் என்று முடிவுடனனி பத்து ரூபாய் கொடுத்தேன். அந்தப்



பெண்ணால் அப்போது கடன் வாங்குவது தவிர்க்க முடியாத ஒன்றுதான். பிறகு கொஞ்சநாள் அந்தப் பெண் என்னைப் பார்க்கவே இல்லை. என்னைப் பார்க்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டால் ஒளிந்து கொள்வாள். நான் கொடுத்த பத்து ரூபாய் எங்களுடன் இருந்த நெருக்கத்தை விரிசல் அடையச் செய்துவிட்டது.

**ஸ்ரீமதி:** இதனாலதான் கிராமத்திலுள்ள கடைகளில் எல்லாம் 'கடன் அன்பை முறிக்கும்' என்று போர்டே போட்டு இருப்பார்கள்.

**தோசங்கர்:** 'கடன் அன்பை முறிக்கும்' என்ற வாக்கியம் சரியான வாக்கியம் தான். ஆனா இன்றைக்கு, பல குடித்தனங்கள் வாழ்கின்ற வீடுகளில் இதையெல்லாம் நாம வேத வாக்கியமா எடுத்துக்க முடியாது. திடீரென்று கடுகு காலியாகிப் போகலாம். நமக்கு அர்ஜெண்டாய் ஒரு கப் சர்க்கரை தேவைப் படலாம். அப்போ பக்கத்து வீட்டுக்காரரிடமோ அல்லது அண்டை குடித்தனக் காரரிடமோ தான் நாம் கேட்க வேண்டும். இதற்கு என்ன சொல்கிறீர்கள்?

**சுந்தரிஹரன்:** இப்படி, உப்பு, கடுகு, சர்க்கரை இதையெல்லாம் கடன் வாங்குவதை முற்றிலும் ஆட்சேபிக்கிறேன். நம்முடைய

> **கடன் வாங்குவதிலே தப்பே கிடையாது. ஆனா திருப்பிக் கொடுக்க முடியுமான்னு யோசித்தே வாங்கணும்.**

குடும்பத் தேவை என்ன? நமக்கு நன்றாக தெரிந்த விஷயம் அது. ஒரு பட்ஜெட் மாதிரி போட்டுக் கொண்டு நாம் சாமான்களை வாங்கி விட வேண்டும். அப்புறம் ஏன் சாமான்கள் தட்டப் போகிறது?

**ஆனந்திநாராயணன்:** நம்ம குடும்பத்துக்குத் தான் பட்ஜெட் போட முடியும். திடீரென்று உறவுக்காரர்கள் வந்து விட்டார்கள். அல்லது நம்முடைய கணிப்பையும் மீறி சில கலீட் செய்ய வேண்டி இருக்கின்றது. இப்படியெல்லாம் சம்பவங்கள் நிகழும். அப்போது...

**சுந்தரிராஜன்:** ஏன் பக்கத்து வீட்டுக்காரரிடம் கடன் வாங்க வேண்டும்? கடைக்குப் போய் நமக்கு வேண்டியதை வாங்கிக் கொள்ளலாமே! நாம் பக்கத்து வீட்டுக்காரர்களிடம் தொட்டதிற்கு எல்லாம் கடன் வாங்கப் போனால் அப்புறம் அவர்கள் நம்மைக் கண்டு பயப்பட ஆரம்பித்து விடுவார்கள். நாம் அவர்கள் வீட்டுப் பக்கம் சும்மா பேசப்போனாலும் கூடக் கடன் கேட்கத்தான் வருகிறாள் என்று நினைத்து முகத்தைத் திருப்பிக் கொள்வார்கள்.

**உஷா:** இந்தச் சிரமங்கள் எல்லாம் மிடில் கிளாஸ் ஃபேமிலிலதான். பொதுவாப் பணக்காரக் குடும்பங்களில இந்தக் கடன் பிரச்சினை ஒரு பெரிய பிரச்சினை இல்லைனு நினைக்கிறேன்.

**ஆனந்திநாராயணன்:** நீங்க நினைப்பது ரொம்பத் தப்பு. பணக்காரர்களுக்கும் கடன் வாங்க வேண்டிய சூழ்நிலை வரும். இப்போ பிஸினஸ் செய்யறாங்களே அவங்க சொந்தப் பணத்தைப் போட்டா பிஸினஸ் நடத்தறாங்க. நோ... நோ... கடன் வாங்கித்தான் பிஸினஸே நடத்தறாங்க. இது ஒரு மேனேஜ்மெண்ட் பிரின்ஸிபிளும் கூட.

ஸ்ரீமதி: கடன் வந்து தனி மனிதர்கள் மட்டும் தான் வாங்குவதாக நாம நினைக்கிறோம். ஆனா அரசாங்கமே கடன் வாங்குது. உலக வங்கியிலிருந்து கடன் வாங்கித் தான் நாம பஸ் விட்டு இருக்கோம். நிறைய சுரங்கப் பாதைகள் எல்லாம் போட்டு இருக்கோம்.

சீதாசங்கர்: ஆனா நம்ம ஜனங்களுக்குத்தான் கடனுடைய அருமையே தெரியாம போட்ட சுரங்கப் பாதையில நடக்காம ரோடை குறுக்கே கிராஸ் பண்றாங்க. இவங்க குறுக்க கிராஸ் பண்றதைப் பார்க்கும்போது வாங்கின கடனே வேஸ்ட்டோன்னு தோணுது.

(எல்லோரும் சிரிக்கின்றனர்.)

ராஜம் கணேஷ்: இப்போ சில பேர் புடவை, எவர்சில்வர் சாமான் இதையெல்லாம் வீட்டுக்கே கொண்டு வந்து கொடுத்து

*** திடீரென்று கடுகு காலியாகப் போகலாம்; அர்ஜெண்டாய் ஒரு கப் சர்க்கரை தேவைப்படலாம். அப்போ பக்கத்து வீட்டுக்காரரிடம் தானே கேட்க வேண்டியிருக்கு?**

விட்டு மாசம் மாசம் ரூபாய் வாங்கிட்டு போறாங்க. நமமால மொத்தமா பணம் போட்டு புடவை, எவர்சில்வர் சாமான் இதையெல்லாம் வாங்க முடியாது. இப்படி தவணை முறையில் கடன்ல சாமான் வாங்குவது நல்லது இல்லையா?

சுந்தரி ஹரிஹரன்: எவர்சில்வர் சாமான், புடவை இதையெல்லாம் தவணை முறையில் வாங்குவது அவ்வளவு சரியாக எனக்குப் படவில்லை. மாதாமாதம் ரூபாய் கொஞ்சம் தான் நாம் கொடுக்கிறோம். அது என்னவோ உண்மைதான். ஆனா ஒரு விஷயத்தை நாம மறந்துடறோம். சாமான்களை அதிக விலை கொடுத்துத் தான் நாம வாங்கறோம். சாமான்களோட விலையோட வட்டியையும் சேர்த்து வைச்சுதான் நம்மிடம் சாமான்களை விற்று விட்டுப் போய் விடுகிறார்கள். இதே சாமான்களை நாமே கொஞ்சம் கொஞ்சமாப் பணத்தைச் சேமிச்சு வைத்துக் கொண்டு பின்னால் வாங்கினால் தான் நமக்கு லாபம்.

சீதாசங்கர்: அதுசரி. இப்போ தங்க நகை வளையல் இதையெல்லாம் கூட சில பேர் போட்டுக் கொண்டு போக இரவல் கேட்கறாங்க. கல்யாணத்துக்குப் போகணும். வெறும் சரட்டோட போக மனசு வரலே, கொஞ்சம் உன் நகையைக் கொடேன்னு கேட்கறாங்க. மனசு சில சமயம் கேட்க மாட்டேன்கிறது. இப்படிப்பட்ட கடன்களைக் கொடுக்கும் சூழ்நிலை உங்களுக்கு ஏற்பட்டு இருக்கா?

சுந்தரி ஹரன்: எனக்கு ஏற்படலே. ஆனா என் ஃபிரண்டுக்கு ஏற்பட்டு இருக்கு. அதனலை பெரிய விபரீதமே ஏற்பட்டு இருக்கு. கடன் வாங்கி நகையைப் போட்டுக் கொண்டு போனவள் எதிர்பாராத விதமாகத் திருடன் பிடியில் சிக்கி நகையைப் பறி கொடுத்து விட்டாள். நகையும் போச்சு, நகையைக் கொடுத்தவர்களுக்குப் பணமும் கொடுக்க வேண்டியும் இருக்குது.

ராஜம் கணேஷ்: இதை விடப் பெரிய வேடிக்கை என்னவென்றால் கல்யாணத்துக்கு நகை வேணும்னு கேட்டு வாங்கிண்டு போய் சிலபேர் அடகு கடையில கொண்டு போய் வைத்துப் பணம் வாங்கிட்டு சில கடன்களைத் தீர்க்க வழிதேடிக்கிறாங்க.

(எல்லோரும் சிரிக்கின்றனர்.)

சீதாசங்கர்: சிலர் குடிப்பதற்காகக் கூட சாமான்களை வீட்டுக்கு தெரியாமல் கடையில் கொண்டு போய் வைக்கின்றனர். சில ஆண்கள் ரொம்பமோசம். இது மாதிரி கடன் வாங்குவதில் ஆண்கள் தான் அதிக ஆர்வம் காட்டுகின்றனர். எங்கிட்ட கேட்டா ஆண்கள் ஒழுங்கா இருந்தா கடன் வாங்க வேண்டிய சூழ்நிலையே ஏற்படாது. கடன் வாங்குவது அதிகம் ஆண்கள்தானே தவிர பெண்கள் இல்லை...

(எல்லோரும் சிரிக்கின்றனர்.)

சுந்தரிஹரன்: ஆண்களை மட்டும் நாம குற்றம் சாட்டப் படாது. குடி, ரேஸ் இதுக்கெல்லாம் ஆண்கள்தான் கடன் வாங்கறாங்க. அவங்களை திருத்த வேண்டியது பெண்களோட கடமை. சிலபேர் வீட்டின் சூழ்நிலை சரியில்லாமல் தான் ரேஸ், குடி இதையெல்லாம் விரும்புறாங்க. குடும்பத்தில முக்கிய பங்கு வகிப்பவள் பெண்தான். பாணிபிடிக்கும் அவனுடைய பத்தினி மகாலட்சுமியாய் இருக்க வேண்டும்.

உஷா: இப்போ கல்யாணம் நடத்தறோம். அதுக்கு நிறைய பணம் தேவைப்படும். எல்லார்கிட்டயும் மொத்தமா நிறைய பணம் இருக்கும் என்று சொல்ல முடியாது. அப்போது கடன் வாங்கி செலவு செய்வதைத் தவிர வேறு வழி இல்லை.

ஸ்ரீமதி: ஆமாம். ஆனா பாருங்க கல்யாணம் என்றால் சில செலவுகள் தவிர்க்க முடியாதவை. கல்யாணத்துக்குப் பெண்ணுக்கு புடவை, குடும்பம் நடத்தபாத்திரம், கல்யாண மண்டப செலவு இப்படி எத்தனை எத்தனையோ.. நம்ப கௌரவத்தைக் காப்பாத்திக்க வேண்டியிருக்கே..

## முகம் மலர்ந்து புன்னகை புரிந்திட மூன்று வழிகள்



சேவரிட் சேமியாவிலிருந்து தயாரிக்கப்பட்ட 'தயிர் சேமியா' அருந்தியதால் முகத்தில் அரும்பும் இளநகை.



சேவரிட் சேமியாவிலிருந்து தயாரிக்கப்பட்ட சுவையான உப்புமாவை சுவைத்தபின் ஏற்படும் பெருநகை.



சேவரிட் சேமியாவிலிருந்து தயாரிக்கப்பட்ட பாயசத்தின் சுவையை கண்டுணர்ந்தபின் ஏற்படும் கூட்டுச்சிரிப்பு.

புதிய

# சேவரிட்

சேமியா

## தித்திப்போ அல்லது காரமோ உங்களுக்கு விருப்பமான ஆகாரத்தை தயாரித்திட.

ஒரே வகையான உணவை தின்று தின்று சலித்துவிட்ட நீங்கள் புதிய சேவரிட் சேமியாவின் உதவியால் ஒரு மாற்றத்தை ஏற்படுத்துங்கள்.

சிறந்தது, சுவையானது, சமைக்கும் போது கட்டியாவது இல்லை. <u>5 நிமிடங்களில்</u>, விரைவாக, மிக எளிதாக தயாரிக்கலாம்.

பொன்னிற சேவரிட்

தித்திப்போ அல்லது காரமோ உங்களுக்கு எது விருப்பமோ அதனை பொன்னிற சேவரிட் கொண்டு தயார் செய்திடுங்கள். அவர்களது மலர்ந்த முகம் காட்டிவிடும் அதன் தெவிட்டாத சுவையை.

உப்புமா-சேவரிட் வழங்கும் சுவையான காலை உணவு. உங்கள் அன்புக்குரியவர் அலுவலகம் செல்லும்போது கொடுத்து அனுப்ப.

தயிர் சேமியா—பள்ளியிலிருந்து துள்ளிவரும் குழந்தைகளின் மாலைநேர பசியை ஆற்றிட சேவரிட் வழங்கும் 'தயிர் சேமியா' (செய்முறை கீழே தரப்பட்டுள்ளது).

பாயசம்—அறுசுவை உணவை உண்டபின், தேன்சுவை பாயசம் அருந்த வேண்டாமா? சேவரிட் சேமியாவிலிருந்து பாயசம் தயாரித்திடுங்கள். அதன் சுவையை அனுபவித்திடுங்கள்.

சேவரிட், சுகாதார முறையில், கைகள் படாமல், சுவிஸ் இயந்திரத்தினால் தயாரிக்கப் படுபவை. 200 கிராம் மற்றும் 400 கிராம் சீல் செய்யப் பட்ட பாக்கெட்டுகளில் வருகின்றன. இன்றே சுவைத்துப் பாருங்கள்.

தயாரிப்பாளர்கள்: யுனைடெட் இந்தியா மெக்கரோனி, திண்டுக்கல்-624 310 (தமிழ்நாடு)

**செய்முறை:**

தேவையான அளவு நீரை கொதிக்க வைத்து, சிறிதளவு உப்பை சேர்த்து சேவரிட் சேமியாவை அதிலே போட்டு வேக வையுங்கள். பிறகு கீழே இறக்கி, வேண்டிய அளவு தயிரோடு அதனை கலந்திடுங்கள். உங்கள் சுவைக்கு ஏற்ப வெங்காயம், கொத்தமல்லி, கறிவேப்பிலை, மிளகாய் இவற்றை அளவோடு அதிலே கலந்து கொண்டால், சுவையான 'தயிர் சேமியா' தயாராகிவிடும். உங்கள் நாவிலே நீர் ஊற்றெடுக்கும்.



சேவரிட் சேமியா ஆகாரம்
பல்சுவை நிறைந்த பலகாரம்




வழங்குவோர் tik

Sista's-UIM-1219/84-Tam

சுந்தரிஹரன்: கௌரவத்தைக் காப்பாத்திக்கணும்னு நினைச்சு கடன் வாங்குவதும் தப்புதான். போலியா வாழ்க்கை வாழ்வதை விட நிஜத்தில் தான் அழகே இருக்கு.

உஷா: சில பேர் கடன் வாங்கிச் சொத்து சேர்த்துத் திண்டாடுவாங்க. எனக்குத் தெரிஞ்ச ஒருத்தர் கடன் வாங்கி தன் பிள்ளைகள் பேர்ல வீடு கட்டி இன்னிக்கு அந்தப் பிள்ளைகளே அப்பாவை நடுத்தெருவில நிற்க வைச்சு இருக்காங்க. வாங்குவதற்கு முன்னால் நிறைய யோசிக்கணும். கடனோடு தன்மை, எதற்கு வாங்குகிறோம், சட்டரீதியா செய்கிறோமா, நம்பிக்கையுள்ளவர்களுக்காக நம்பிக்கை உள்ளவர்களிடமிருந்து வாங்குகிறோமா என்பதை எல்லாம் நமக்கு நாமே கேட்டுக் கொண்டு கடன் வாங்க வேண்டும்.

ஆனந்தநாராயணன்: படிப்புச் செலவிற்காக கடன் வாங்குவது தப்பில்லை. நீயே ஒரு கல்லூரி மாணவி தானே அது உனக்கு தெரிஞ்சு இருக்கும் என்று நினைக்கிறேன். எனக்குத் தெரிஞ்ச ஒருத்தி தன்னுடைய பெண் படிப்புக்காக கடன் வாங்கினாள். நன்றாய்ப் படிக்கக் கூடியவர்கள் படிக்கிற வாய்ப்பைப் பணம் இல்லாமல் இழக்கக் கூடாது. திறமையானவர்கள் படிக்கத் தவறுவதால் தான் ஐ.பி.எஸ்., ஐ.ஏ.எஸ்., போன்ற பரீட்சைகளில் தமிழர்களே வர மாட்டேன் என்கிறார்கள். இப்போது நான் சொன்னேனே... என் ஃபிரண்டு கடன் வாங்கி தன் மகளைப் படிக்க வைத்ததோடு முதல் வருஷத்திலே வாங்கிய கடனைத் திருப்பியும் அடைச்சுட்டா. பெண்ணுக்கு ஸ்காலர்ஷிப் வந்தது. பணம் அடைபட்டு விட்டது. ஆரம்பத் தேர்வில பாஸ் பண்ணிடுச்சு. நிச்சயம் அந்தப் பெண் ஐ. ஏ. எஸ். படிச்சு கலெக்டரா வரும் என்கிற நம்பிக்கை என் ஃபிரண்டுக்கு இருக்கு.

ஸ்ரீமதி: கடன் வாங்கவும் வேண்டும், வாங்கவும் கூடாது. என்ன இரண்டையும் சொல்றேன்னு விழிக்கறீங்களா? ஆடம்பர செலவு செய்ய, தகுதிக்கு மீறிய எண்ணத்தோட, வறட்டு ஆசைகளுக்காக கடன் வாங்கக் கூடாது. ஆனா அதேசமயத்தில அத்தியாவசியத் தேவைகளுக்கு, தவிர்க்க முடியாத சூழ்நிலையில் படிப்பு செலவுகளுக்கு, கல்யாணங்களுக்கு, வீடோ, சொத்தோ வாங்க, திருப்பிச் செலுத்தும் பொறுப்பை உணர்ந்து கடன் வாங்கலாம். சினிமாவுக்குப் போறது தப்பு இல்லே. ஆனா கடன் வாங்கித்தான் சினிமாவுக்குப் போகணும் என்று நினைக்கக் கூடாது. இன்று ஏழை மக்களுக்குப் பொழுது போக்கே சினிமா தான். அதனால தான் சொன்னேன்.

**❋ சிலபேர் கடன் வாங்கி சொத்து சேர்த்துத் திண்டாடுவாங்க...**

உரையாடல் ஏற்பாடு, தொகுப்பு:
கீழாம்பூர் **சங்கர சுப்பிரமணியன்.**
புகைப்படங்கள்: **பால்ராஜ்.**

## நடனமாடும் பொறியியல் மாணவி!

சென்னை டி. கே. வி. வட்டத் தொட்டியின் ஆதரவில் குமாரி லட்சுமியின் மோகினியாட்டம் சமீபத்தில் நடைபெற்றது. தமிழ்ப் பெண்ணான இவர் நாட்டியத்தின் நளினத்தையும் ஒயிலையும் அறிந்து ஆடியதுடன் விறுவிறுப்பாகவும் ஆடினார். ஹம்ஸ முத்திரைகளைச் சிறப்பாகக் கையாண்டார். நடனம் கோபாலகிருஷ்ணன் தந்த சிறந்த சிஷ்யைகளில் இவரும் ஒருவர்தான். லட்சுமி பொறியியல் கல்லூரி மாணவி!



# ராசி பலன் செப்டம்பர் 84

## மேஷம்



பலர் கூட்டாகச்சேர்ந்து வியாபாரம் போன்ற தனியார்த்துறை வேலைகளில் இறங்கவோ, திட்டமிட்ட காரியங்களைச் செயல்படுத்த முயலவோ ஆரம்பிக்கலாம். நிலைமைகள் சாதகமாக இருப்பதுடன் எதிர்பார்த்த இடங்களில் இருந்து பண உதவியும் கிடைக்கும். ஒன்றுக்கும் மேற்பட்ட வழிகளில் ஈடுபட வாய்ப்புக்கள் வரலாம். தீர யோசித்து எந்தப் பாதையில் செல்வது என முடிவெடுத்து விட்டீர்களானால் வெற்றி உங்கள் பக்கம் தான்.

## ரிஷபம்



உற்சாகமும், உல்லாசமும் நிறைந்த மாதமாக இம்மாதம் செல்லும். வயதான, இளைய நண்பர்களுடன் சேர்ந்து சிறு பிரயாணங்கள் ஏற்படலாம். புதிய உறவுகளின் காரணமாகக் குடும்பத்தில் சந்தோஷமும் நிலவுவதுடன் சுபநிகழ்ச்சிகளும் உண்டாகும். உறவினர்களின் வருகையும் அதிகரிக்கும். எதிர்பாராமல் ஏற்படும் தனலாபத்தால் செலவினங்கள் ஈடுகொடுப்பதுடன் குடும்பத்தில் சச்சரவுகளும் ஏற்படாது.

## மிதுனம்



பல மாதங்களாக இருந்து வந்த வேதனைகளும், சங்கடங்களும் இனி உங்கள் வாழ்க்கையில் இருக்காது. ஏற்பட்டு விட்ட வருத்தமான நிகழ்ச்சிகளுக்கு இம்மாதம் தீர்வுகள் உண்டாகும். வெளியூர்ப் பிரயாணங்களினால் சிலருக்குப் பெரும் மனமாற்றங்கள் உண்டாகும். நீங்கள் புதிய பாதையில் அடியெடுத்துச் செல்வீர்கள். புனித யாத்திரைகள் மேற்கொள்வதால் மன அமைதியும் உண்டாகும். பண வரவிற்குக் குறைவில்லாமல் இருக்கும்.

## கடகம்



வழக்கு வியாஜ்ஜியங்களில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு இம்மாதம் வெளியூர்ப் பிரயாணங்கள் ஏற்படுவதுடன், அதனால் பிரச்னைகளுக்கும் தீர்வுகள் உண்டாகலாம். நெருங்கிய உறவினர் ஒருவருக்கு ஏற்பட்ட வருத்தம் காரணமாக நீங்கள் சில சங்கடங்களில் மாட்டிக் கொள்ள நேரலாம். பண விஷயங்களில் அதி ஜாக்கிரதையாக இருப்பது நல்லது. கூடிய வரை விவாதங்கள் எவற்றிலும் ஈடுபடாமல் கடமையே கண்ணாக இருந்துவிட்டால் பல தொல்லைகளில் சிக்காமல் இருக்கலாம்.

## சிம்மம்



பொது ஜனத் தொடர்பு உள்ளவர்களுக்கு இது அருமையான மாதம். வெளியுலகில் பிரமுகர்களின் அறிமுகம் கிடைப்பதுடன் அதனால் பல பயன்களும் விளையும். வெளியூர்ப் பிரயாணங்களினால் புதிய நண்பர்கள் கிடைப்பார்கள். கலைஞர்களுக்குப் புகழ் அதிகரிப்பதுடன், சிலருக்கு விருதுகளும் கிடைக்கலாம். அரசாங்க உத்தியோகத்தில் உள்ளவர்களுக்கு மேலதிகாரிகளின் பரிவினால் பதவி உயர்வும் கிடைக்கலாம். பண வரவு சரளமாக இருக்கும்.

## கன்னி



தீர்மானமாகாத சில பிரச்னைகளின் காரணமாக எந்தப் பக்கம் முடிவெடுப்பது என்று தெரியாமல் தடுமாற வேண்டிய நிலைமை ஏற்படலாம். வரும் செய்திகளும் குழப்பமானதாகவே இருக்குமாதலால், எதுவொன்றையும் அவசரப்பட்டு முடிவெடுக்காமல் அமைதி காக்க வேண்டிய காலமிது. உறுதியான மனதுடன் சரியான முடிவெடுத்து விட்டீர்களானால் உழைக்கும் திறன் கொண்ட நீங்கள் வெகுவிரைவில் முன்னுக்கு வந்துவிடுவீர்கள். பண விஷயத்தில் நண்பர்கள் கைகொடுப்பார்கள்.

## துலாம்



மிகவும் சுறுசுறுப்பாக இயங்கும் மாதமாக இம்மாதம் இருக்கும். உற்சாகமான நண்பர்கள் உங்களை வெளியூர்ப் பிரயாணங்களுக்கு அழைத்துச் செல்லலாம். திருமணமாகாதவர்களில் சிலருக்கு இனிய உறவின் தொடர்பு ஆரம்பிக்கலாம். வெளியுலகில் வாய்ப்புகள் அதிகம் காத்திருக்கின்றன. நீங்கள் உற்சாகத்துடன் வெளிவருவீர்களானால் ஒளிமயமான எதிர்காலம் உங்களுக்குத் துவங்கவிருக்கிறது.

## விருச்சிகம்



லட்சியங்களை வாழ்க்கையின் கண்ணாகக் கொண்டிருப்பவர்களுக்கு அதற்கான வழிகள் புலப்பட ஆரம்பிக்கும். சுயதொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு புதிய நட்புகளின் மூலமாகத் தொழிலை விரிவுபடுத்தும் வாய்ப்புக்கள் உண்டாகும். மிகுந்த சக்தி வாய்ந்தபிரமுகர்கள் உங்கள் வாழ்க்கையில் தென்படலாம். வாய்ப்பைத்தவறாது பயன்படுத்திக் கொண்டு விட்டால் லட்சியத்தை அடையத்தடையே யில்லை. பணமுடை கொஞ்சம் இருக்கவே செய்யும்.

## தனுசு



நீங்கள் தீர்மானித்த படியே செல்வது தான் உத்தமம். மற்றவர்கள் பொறாமை அல்லது முன் விரோதம் காரணமாக உங்களுடைய செயல்களில் இருந்து திசை திருப்ப முயலலாம். சொந்த முயற்சியே இப்போதைக்கு வெற்றிக்கு வழிகாட்டியாக இருக்கும். தம்பதியரிடையே ஏற்பட்ட சச்சரவுகளைப் பொறுமையுடன் தீர்த்துக் கொள்வது நல்லது. குழந்தைகளின் மூலமாக சமரசத்திற்கு முயற்சி செய்தால் பெரிய பிரச்னையாகாமல் தடுத்துக் கொள்ளலாம்.

## மகரம்



நீங்கள் அவசரப்பட்டு முடிக்கவேண்டும் என்று பரபரக்கும் காரியங்கள் நினைத்துப் பார்க்காத அளவிற்குத் தாமதமாக நடக்கலாம். அதனால் எரிச்சலும், கோபமும் அடைந்து காரியத்தைக் கெடுத்துக் கொள்வதனால் பயனில்லை. கிடைத்த சிறிய சந்தர்ப்பத்தையும் பயன்படுத்திக் கொண்டு, உங்களுக்குச் சாதகமாக அதை எப்படித் திருப்பலாம் என்பதில்தான் உங்களுடைய திறமை இருக்கிறது. பண வரவு சுமுகமாக இருப்பதால் பிரச்னைகளை எளிதில் சமாளித்து விடலாம்.

## கும்பம்



அந்தரங்கமாக நீங்கள் வைத்திருக்கும் ஆசைகளும், இட்டங்களும் எதிர்பாராத வகையில் நிறைவேறத் துவங்கும். தூரதேசத்தில் இருந்து கிடைக்கும் செய்தி அல்லது வரும் நண்பரின் உதவியால் சிலருக்கு வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்படலாம். தூரத்து உறவினரில் எதிர்பாராத சொத்தும் உங்களுக்குக் கிடைக்க வாய்ப்பிருக்கிறது. நினைத்து மகிழும் நாட்களாக இம்மாதத்தில் பல நாட்கள் விளங்கும்.

## மீனம்



அதிக அலைச்சலினாலும் மனக்குழப்பத்தினாலும், உடல்நலம் சிறிதே பாதிக்கக் கூடும். நடுவில் துண்டிக்கப்பட்ட நண்பர் மீண்டும் மனம் வருந்தி வந்து சேருவார். அவரால் புதிய நட்புகளும், நம்பிக்கைகளும் உண்டாகும். பணத்திற்கு ஓரளவு சிரமப்பட வேண்டி வரலாம். கணவரின் உறவின் பக்க வருகையினால் இல்லத்தில் சுப நிகழ்ச்சிகள் உண்டாகும். குடும்பத்தில் ஒற்றுமை மிகுந்த நாட்களாக இவை அமையும்.

# இப்படியும் ஒரு தம்பதியர்!



இரண்டு கண்களும் நன்றாகத் தெரியும் தம்பதிகளே இன்றைய சூழ்நிலையில் பயந்து வாழும் இந்தக் காலத்தில்...

இரண்டு விழிகளையும் இழந்த இந்த தம்பதிகள் தங்கள் வயது வந்த பெண்களுடன் துணிச்சலுடன் வாழ்கின்றனர் என்றால் அவர்களைப் பாராட்டாமல் இருக்க முடியுமா?

ஹெலன் கிறிஸ்துவப் பெண். சில உறவினர்கள் உண்டு. பெற்றோர் யாரும் இல்லை. இவருக்கு இளம் வயதிலேயே கண் பார்வை போய் விட்டது.

இந்த நிலையில் இவரின் நண்பர் ஆசீர்வாதம் மூலம் இவரைப் பெண் பார்க்க ஜான் சாலமன் என்ற விழி இழந்த அசோக் லேலண்டு தொழிலாளி வந்தார்.

இருவரும் சந்தித்தனர். விழிகள் சந்திக்கவில்லை. மனங்கள் சந்தித்தன.

இந்த விழி இழந்த தம்பதிகளுக்கு நன்றாகக் கண் தெரியும் பார்க்கும் சக்தி கொண்ட நான்கு பெண்களும் இப்பொழுது வளர்ந்து உள்ளனர்.

இந்த நான்கு குழந்தைகளை வளர்க்க ஹெலன் என்ன பாடுபட்டிருப்பார் என்பது தாய்மார்களுக்குத் தெரியும்.

''அதிலும் குழந்தை நடக்கத் துவங்கும் பொழுது, குழந்தைகள் அங்கும், இங்கும் ஓடி விடும்பொழுது மிகவும் கஷ்டமாக இருக்கும்.

அதனால் எல்லாக் குழந்தைகளுக்கும் காலில் பெரிய சலங்கை அணிவித்து விடுவோம். அந்தச் சத்தத்தில் குழந்தை இருக்கும் இடத்தைக் கண்டுபிடிப்போம்'' என்கிறார் ஹெலன்.

சமையல் வேலையையும் அழகாகச் செய்கின்றார் ஹெலன். தேவையான பொருட்களைத் தன் கைக்கு உடனே கிடைக்கும் விதத்தில் வைத்துக் கொண்டு சாதாரணமானவர்களைப் போல் மிகச் சீக்கிரமாக சமைத்து விடுகின்றார்.

''பெண்கள் நன்றாக வளர்ந்த பிறகுதான் சற்றுச் சிரமமாக இருக்கின்றது. காரணம்.. இவர்கள் சமையல் வேலை செய்யும்பொழுது பொருட்களை மாற்றி வைத்து விடுவதினால் இப்பொழுது தான் சற்று சிரமமாக இருக்கின்றது. குழந்தைகளும் வயதாக, வயதாக என் பிரச்சினையைப் புரிந்து கொண்டு எடுத்த பொருட்களை அங்கங்கே வைத்து விடுகின்றனர்'' எனப் பெருமையாக தன் மகள்களைப் பற்றிக் குறிப்பிட்டார் திருமதி ஹெலன் ஜான் சாலமன்.

இவர்களின் குழந்தைகளும் பெற்றோர்களிடம் மிகவும் அன்புடன் இருக்கின்றனர்.

தாய்- தந்தை பற்றி பிளாரன்ஸ், அற்புத ஜோதியிடம் கேட்டபொழுது,

''அன்பு வடிவமான இது போன்ற பெற்றோர் கிடைப்பது மிகவும் அபூர்வம். அவர்கள் குறையை நினைத்து இடிந்து போகாமல் வாழ்க்கையை மகிழ்ச்சியுடன் வைத்துக் கொண்டவர்கள். எங்கள் வாழ்க்கையையும் மகிழ்ச்சியுடன் வைத்திருப்பவர்கள்'' என மகிழ்ச்சியுடன் தெரிவித்தனர்.

-சகுந்தலா பூபதி.



## மதுரையிலும் சமையல் போட்டி!

'மதுரை லேடீஸ் அசோசியேஷன்' எனும் மகளிர் அமைப்பு சமீபத்தில் சமையல் போட்டி ஒன்றை நடத்தியது. இருநூறுக்கும் மேற்பட்டவர்கள் கலந்து கொண்டார்கள். திரு. வீரராகவனின் (டி. ஐ. ஜி., மதுரை.) மனைவி திருமதி பிரேமா வீரராகவன் பரிசுகளை வழங்கினார். பல்வேறு நிறுவனங்கள் பரிசுகளை அளிக்க உதவியதாம்.



# தத்ரூபமான சித்திரங்கள்!

ஒரு கையில் வெண்ணெய்த் தாழி. மற்றொரு கையில் உருட்டிய வெண்ணெயோடு குறும்பாகச் சிரிக்கும் குண்டுக் கண்ணனின் ஓவியம். வாரி அணைத்துக் கொள்ள வேண்டும்போல் தூண்டும் குழந்தையின் அழகு. கணபதி, தசாவதாரம், ராமப் பட்டாபிஷேகம், சிவபார்வதி கல்யாணம் அடுக்கிக் கொண்டே போகலாம்.

பம்பாய் ஜஹாங்கீர் ஆர்ட்காலரியில் மராட்டிய மாநில ஆளுநர் ஏர் மார்ஷல் ஐ. எச். லத்தீப் அவர்களால் விளக்கேற்றி ஆரம்பித்து வைக்கப்பட்ட தஞ்சாவூர் சித்திரக் கண்காட்சியில் இவ்வளவு அற்புதமான ஓவியங்களும் இருந்தன.

பதினெட்டாம் நூற்றாண்டிலேயே சரபோஜி மன்னரால் ஊக்குவிக்கப் பட்டு வளர்க்கப்பட்ட இத்தஞ்சை ஓவியக்கலை, இன்று குமாரராஜா. முத்தையா ஓவியப்பள்ளியாக சென்னையிலிருக்கும் நந்தி கிராமம் செட்டிநாடு ஹவுஸில் குருகுலமாக நடத்திவருகிறார்கள். தொண்ணூற்றைந்து வயதான ஸ்ரீரங்கத்தைச் சேர்ந்த திரு. டி. கோவிந்தராமானுஜம் இப்பள்ளியின் வழிகாட்டியாக இருக்கிறார். இவரைக் குருவாக ஏற்ற திருமதி. குமார ராணி மீனா முத்தையா அவர்கள் செட்டிநாடு ஹவுஸில் இந்த ஓவியப் பள்ளியை நிறுவி ஆர்வமுள்ளவர்களுக்கு எல்லாவிதமானவசதிகளோடும் இக்குருகுலத்தை நிர்வகித்து வருகிறார்.

நீரால் பாதிக்கப்படாத பிளைவுட் பலகைகளில் மைதாவும், புளியங் கொட்டையும் கலந்த ஒருவிதமான பசையைப் பரப்பி, வெளுக்காத லாங்கிளாத் அல்லது மல் துணியை இதில் சுருக்கமில்லாமல் பரத்தி, அதன் மேல் ஓவியம் வரைகிறார்கள். நகை அலங்காரங்களுக்கு நகைகளில் பதிக்கும் நிஜக்கற்களையும் இருபத்தி நான்கு காரட் தங்கமுமே உபயோகிக்கிறார்கள். எனவே ஓவியங்கள் ஜொலிக்கக் கேட்பானேன்!

—லட்சுமிகண்ணன்

# இதோ எளிதில் உபயோகிக்கக்கூடிய ஒரு ஹேர்-டை, மிகமிகக் குறைந்த விலையில்!

**கோ**த்ரெஜ் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் உங்களுக்காகவே விசேஷமான கலவை முறையில் தயாரிக்கப்படுகிறது.
இந்தியாவில் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் இது ஒன்றே. இது தானாகவே பரவுகிறது. ஆகவே நீங்கள் சிறிதளவே உபயோகித்தால் போதும்! மிகமிக முக்கியம், நீங்கள் நம்பமுடியாத அளவுக்கு குறைவான விலையில் இது கிடைக்கிறது!



**கலப்பது சுலபம்**
இந்தப் பவுடரை சிறிதளவு நீருடன் கலக்கவும். உபயோகிப்பதற்கு இப்போது தயார்.



**உபயோகிப்பது சுலபம்**
இதை சிரமமின்றி இலேசாகத் தடவுங்கள். தானாகவே ஒரே சீராக, மென்மையாக முடிமீது பரவி விடுகிறது.
உங்கள் கேசத்துக்கு இளமையான அழகுத் தோற்றத்தைத் தருகிறது!






இந்தியாவில் தானாகவே பரவும் பவுடர் ஹேர்-டை இது ஒன்றே.

Godrej
## பவுடர்
## ஹேர்-டை
## கான்ஸென்ட்ரேட்



**தரமோ நீங்கள் நாடுவது விலையோ உங்களுக்குப் பிடித்தமானது.**

# எல்லைகளின் விளிம்பில்

வாஸந்தி

## 11

**மா**து குளிக்கச் செல்லும்போது அம்மாவின் குரல் சாப்பாட்டறையில் கேட்டது.

''என்னடி மாது, உம்முன்னு இருக்கே. வாயே திறக்கக் காணோம் இன்னிக்கு''

''நான் வாயைத் திறந்து இந்த வீட்டிலே என்ன லாபம்னு மூடிண்டிருக்கேன்...''

மேற்கொண்டு அந்தப் பேச்சைக் கேட்க விரும்பாமல், அவன் ஷவரைத் திருப்பி பெரிய குரலில் 'போனி எம்'மின் 'டாடிகூ' வைப் பாட ஆரம்பித்தான்.

இன்னும் பத்து நிமிஷத்தில் மாது கிளம்பிப் போய் விடுவாள். அதற்குப் பிறகு அப்பா அம்மாவிடம் போய்மெல்ல விஷயத்தைப் பிரஸ்தாபிக்க வேண்டும். அவர்கள் ஏதும் எதிர்ப்பைத் தெரிவிக்க மாட்டார்கள் என்று அவன் உணர்ந்திருந்தான். நாகநாதன் பெரிய மனிதர். அவருடைய ஜாதிக்காரர் என்கிற சாதகமான காரணங்கள் இருந்தன. மாது மாதிரி அதிர்ந்து போக மாட்டார்கள்.

'வெறும் வேகத்திலே, இம்பல்ஸிலே முடிவு செய்யக் கூடிய விஷயமில்லே இது'' என்று புத்தி சொல்ல மாட்டார்கள். முட்டுக் கட்டை போட மாட்டார்கள்.

'அவ அழகைக் கண்டு மயங்கிட்டே.' ஆமாம் மயங்கித்தான் போனேன். அதனால் என்ன தப்பு அழகோடு குணமும் இருக்கக் கூடாதா?

'ராங்கிக்காரி... அவ எந்தப் பெண்ணோடேயும் பழகி நான் பார்த்ததில்லே.'

மாதுவுக்குச் சித்ராவைப் பற்றித் தெரியாது. வெளிப்பேர் பேசுவதை வைத்துக் கொண்டு மேலெழுந்தவாரியாகச் சொல்கிறாள்.

நாகநாதனும் சித்ராவும் எத்தனை சரளமாகப் பழகுகிறார்கள் என்று இவளுக்கு எப்படித் தெரியும்? சித்ராவின் துக்கம் இவளுக்கு எங்கே புரியும்?

நேற்று திடீரென்று நாகநாதன் அவனை வலுக்கட்டாயமாகத் தன் வீட்டிற்கு அழைத்துச் செல்லும் வழியிலேயே அவன் எதிர்பாராமல் ஒரு வெடிகுண்டைத் தூக்கிப் போட்டார்.

''சித்ரா உங்களை விரும்புகிறாள் பாலு''

அவன் அதிர்ந்து போனான்.

பிறகு நாகநாதன் சாவதானமாகக்கேட்டார்.

''பாலு உங்களுக்குச் சித்ராவைப் பிடிச்சிருக்கா''

அவன் தூக்கிவாரிப்போட்டு அவரைப் பார்த்தான். கூச்சத்துடன் சிரித்தபடி முணுமுணுத்தான்,

''எனக்கு உங்க கேள்வி புரியல்லே''

''எனக்கு உங்களைப் பிடிச்சிருக்கு பாலு. சித்ராவிற்கு உங்களை ரொம்பவே பிடிச்சிருக்கு என்கிறது எனக்கு நிச்சயமாகத் தெரியும். உங்களுக்கு சம்மதம்னு உங்களை மாப்பிள்ளையாக்கிக்க ஆசைப்படறேன் பாலு''

வார்த்தைகளே வராத திகைப்பில் அவன் உறைந்து போனான். மார்பு படபடத்தது. நெற்றியில் வியர்வை அரும்பிற்று. சந்தோஷத்தின் நடுவே காரணம் புரியாத ஒரு கலவரம் மனசில் படுவது ஆச்சரியத்தை அளித்தது.

''உங்களுக்கு அவளைப் பிடிச்சிருக்கா பாலு''

அவன் மெள்ளத் தன்னை சுதாரித்துக் கொண்டு தலையைக் குனிந்தபடி சொன்னான்:

''எனக்குப் பிடிச்சிருக்கு. ஆனா அது கல்யாணத்துலே முடியணும்ங்கற எதிர்பார்ப்போ ஆசையோ எனக்கு நிச்சயம் இல்லே. என்னா நமக்குள்ளே இருக்கிற சமூக வித்தியாசத்தை என்னாலே மறக்க முடியாது. நா ரொம்ப சாதாரண குடும்பத்துலே வளர்ந்தவன். மாசத்துக் கடைசி வாரம் வயித்தைக் கட்டிப் பழகினவன். உங்க உலகத்துக்கும் அதுக்கும் சம்பந்தமேயில்லே மிஸ்டர் நாகநாதன்''

''நான்ஸென்ஸ்''

நாகநாதனின் செல்லக் கோபத்தில் ஒரு உரிமை தெரிந்தது.

''நமக்குள்ள எந்த வித்தியாசமும் கிடையாது. என்னுடைய பூர்வோத்திரத்தைப் பற்றி உங்களுக்குத் தெரியாது. உங்களைவிட ஏழ்மையான குடும்பத்தில பிறந்தவன் நான். மாசம் முழுவதுமே வயித்தைக்கட்டி வளர்ந்தவன்.''

அவரது இன்றைய நடை. உடை பாவனைகளையும் வாழ்க்கை முறையையும் பார்க்கும்போது நம்ப முடியவில்லை. அவன் தலை குனிந்தபடி மெல்லிய குரலில் சொன்னான்:

''நீங்கள் இருந்திருக்கலாம். சித்ராவுக்கு அந்த உலகத்தைப் பற்றிய பிரக்ஞையே இருக்காது ஸார். கீழ் மட்டத்துப் பிரச்சினைகள் என்னன்னு அவளுக்குத் தெரியாது. அவளுக்கு அட்ஜஸ்ட் செய்துக்கறது ரொம்ப கஷ்டம். என்னாலே நிச்சயமா உங்க தரத்

துக்கு மாற முடியாது. எனக்குன்னு சில லட்சியங்கள் உண்டு ஸார்.''

''எத்தனை அசட்டுப் பையன் நீ'' என்கிற புன்னகையுடன் நாகநாதன் பார்த்தார்.

''ஓ. லட்சியங்கள் யாருக்குத்தான் இல்லே. எந்தவிதக் கல்யாணத்திலேயும் இரண்டுபக்கமும் கொஞ்சம் அட்ஜஸ்ட்மெண்ட் அவசியம். அதிலே உங்கள் கொள்கைகளை முழுக்க விட்டுடணும்னு யாரு சொன்னது? நா உங்களை விடச்சிறு வயதிலிருந்து வாழ்க்கையை ஆரம்பிச்சேன். ஐ. ஏ. எஸ். பாஸ் பண்ணினதும் ரொம்பப் பெரிய பணக்கார இடத்திலே கல்யாணம் ஆச்சு. உங்களை மாதிரி நானும் முதல்லே பயந்தேன். ஆனா சித்ராவுடைய அம்மாவும், நானும் ரொம்ப சந்தோஷமாயிருந்தோம். அவ சீக்கிரமாகச் செத்துப் போனது என்னுடைய துரதிர்ஷ்டம்.''

அவர் பேச்சைக்கேட்கக் கேட்க அவனுக்கு குழப்பம் அதிகமாயிற்று. ரொம்பவும் ஆசை காட்டுகிற விஷயமாக இருந்தது.

''அஞ்சு வருஷமா அவளைத் தனியா வளர்க்கிறேன் பாலு. நான் படற கவலை அந்த ஆண்டவனுக்குத் தான் தெரியும். அவளுடைய அழகே எனக்குப் பெரிய தலைவலி. எத்தனை சினிமாக்காரங்க என்னைக் கெஞ்சியிருப்பாங்கன்னு நினைக்கறே. அதோடு குழந்தை மாதிரி அவ மனசு. ரொம்பச் சுலபமா அவளை ஏமாத்திடலாம். என்னுடைய சகலமும் அவதான் பாலு. ஒரு பொறுப்பான கண்ணியமான புத்திசாலிப்பையன் அவளுக்குத் தேவை. நீங்க எல்லா விதத்திலேயும் அவளுக்குத் தகுதியுள்ளவர். சோஷியல் லெவல் அது, இதுன்னு நீங்களா அசட்டுத்தனமா எதையாவது கற்பனை பண்ணக் கூடாது. எனக்கு ஏமாற்றத்தை அளிக்கக் கூடாது பாலு''

இந்த மாதிரி ஒரு விருப்பத்தை நிச்சயமாக இன்று



எதிர்பார்க்காத திகைப்பில் இருந்தான் அவன்.

''அப்பா அம்மாகிட்டே நா முதல்லே பேசணும் ஸார்'' என்றான் அவர்களது புல்தரையை அடைந்ததும்.

''தாராளமாப் பேசுங்க. ஆனா கடைசியிலே டிஸைட் பண்ண வேண்டியது நீங்கதான்.''

தான் பேச வேண்டியதைப் பேசி முடித்து விட்ட மாதிரி நாகநாதன் கூடை நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்து பைப்பைப் புகைக்க ஆரம்பித்தார்.

சட்டென்று அவன் நிமிர்ந்து பார்த்தான். சித்ரா காப்பி டிரேயை ஏந்திக் கொண்டு வந்தாள். அவளைப் பார்த்த மாத்திரத்தில் அவனுள் ஒரு பரவசம் பொங்கிற்று. ராஜகுமாரி மாதிரி இருக்கும் இவள் அவனுக்கு மனைவியாக முடியுமா? அது சாத்தியமானாலும் பொருந்துமா. இந்த சந்தேகமே அவனுள் ஒரு தாழ்வுணர்ச்சியை ஏற்படுத்தி விடாதா?

அவள் கையிலிருந்த ட்ரேயை வாங்கி அவன் மேஜை மேல் வைத்தான். மேலுதட்டில் வியர்வை அரும்பியிருந்தது. வெறும் ஒரு காப்பி கலக்க இத்தனை ஆயாசப் படுபவள் அம்மாவுக்கு உதவியாக சமையல் வேலை செய்வாளா?

''அப்பா உங்களுக்கு போன் வந்திருக்கு'' என்றாள் அவள்.

நாகநாதன் அவசரமாக எழுந்தார். ''ஓ, கேரி ஆன். நா பேசிட்டு வரேன்'' என்று விரைந்தார்.

''காப்பி சாப்பிடுங்கள் பாலு''

வார்த்தைகளை எப்படிக் கோர்ப்பது என்று குழம்பியபடி அவன் மெள்ளத் தயக்கத்துடன் ஆரம்பித்தான்.

''சித்ரா, உங்க அப்பா என்னவோ சொன்னாரே. அது நிஜமா ''

அவள் கண்களில் லேசான குறும்பு தெரிந்தது.

''என்ன சொன்னார் ''

தன்னை இத்தனை தூரம் படபடக்கச் செய்யும் ஒரு விஷயம் இவளை ஏதும் செய்யவில்லையா என்று அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''என்னைத் தன் மாப்பிள்ளையாக்கிக்க ஆசைப்படறதா சொன்னார். உனக்கும் அது சம்மதம்னார். அதை நான் நம்பலாமா?''

அவள் மோகனமாகச் சிரித்தாள். ''எங்கப்பா ஒரு பொறுப்புள்ள மனிதர். பொய் சொல்ல மாட்டார்.''

''நான் உனக்கு எந்த விதத்துலேயும் அருகதையில்லை சித்ரா. என்னுடைய வாழ்க்கை முறை ரொம்ப வித்தியாசமானது.''

அவள் சட்டென்று அவன் அருகில் வந்து அவன் கையை எடுத்துத் தன் கையில் வைத்துக் கொண்டாள்.

''எனக்கு எந்த வித்தியாசமும் தெரியல்லே. உங்க மேலே ஏற்பட்டிருக்கிற பிரியம் ஒண்ணுதான் எனக்குப் புரியறது. என்னை அது சத்தியமானது. இனிமே உங்க சம்மதம் ஒண்ணுதான் வேணும். வேறே எந்தப் பேச்சும் எனக்கு வேண்டாம். உங்களுக்கு ஏன் இந்த காம்ப்ளெக்ஸ் ''

அவள் அவன் விரல்களைத் தன் அதரங்களில் பதித்து அவன் கைகளைத்தன் கைகளில் பதிய வைத்துக் கொண்டாள்.

அவனுக்குப் படுகூச்சமாக இருந்தது. மார்பு வேகமாக அடித்துக் கொண்டு நெற்றி வியர்த்தது.



பேட்டண்ட் அலுவலகக் கிளார்க் கிளாரா பார்ட்டன் தாம் அமெரிக்க செஞ்சிலுவைச் சங்கத்தை 1881—ல் நிறுவினார். சின்ன உருவமென்றாலும், விசாலமான உள்ளம். அவருக்குப் போர்க்கள வான தூதர் என்ற சிறப்புப் பெயர். போர் முனையிலிருந்த வீரர்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களை அனுப்பி வந்தார்.

ஜ்யார்ஜியாவில் கான் ஃபெடரேட்.ஸ் ஜெயிலி லிறந்த 1300 பேர்களுக்குக் கல்லறைகளை இனம் கண்டுபிடித்தார்.

—எஸ். ஏ. காதர்.



For today's woman... *new* *you* PANTIES

Available in a choice of colours. 100% cotton

*From the makers of* **TANTEX**

A [logo] Product

Imageads M- 1808

''உங்கள் சமூக லெவலுக்கும் என் லெவலுக்கும் இருக்கும் வித்தியாசம் அதற்குக் காரணமாயிருக்கலாம் சித்ரா ''

''இந்த மாதிரி சமூக லெவல் அது. இதுன்னு நீங்க பேசக் கூடாது. மனுஷனுக்கு மனுஷன் எந்த வித்தியாசமுமில்லே. நா அதைப் பூரணமா நம்பறேன். ஆனா என்னைப் புரிஞ்சுகிட்டவங்க தான் யாருமில்லே. எனக்கு ஆத்மார்த்தமான சிநேகிதர்களே இடையாது பாலு.''

அவள் குரலிலிருந்த ஏதோ ஒன்று அவனை நெகிழ வைத்தது. எத்தனை நெருக்கமாகத் தன்னுடன் பேசுகிறாள் என்கிற எதிர்பார்க்காத சந்தோஷம் ஆச்சரியத்தை அளித்தது.

''நிஜமாச் சொல்றேன் பாலு — அந்த விஷயத்திலே எனக்கு அதிர்ஷ்டமில்லே. எந்தப் பெண்ணும் நெருங்கி வருவதில்லே. பெண்களுக்கெல்லாம் என்னைக் கண்டாக் காரணம் புரியாம பொறாமை ஏற்படறது. என்னுடைய ராசி அது. பெண்கள் சிநேகிதமில்லே. சிநேகமா வர ஆண் மிருகப் பார்வையோட வரான். என் உருவத்தைக் கண்டு எனக்கே வெறுப்பு ஏற்பட்டுப் போச்சு பாலு ''

இவள் தினம் தினம் அனுபவிக்கும் உணர்வை சத்யமான ஆதங்கத்துடன் சொல்கிறாள் என்று அவன் நினைத்துக்கொண்டான். மாலு இவளைப் பற்றிச் சொன்னதெல்லாம் இவள் சொல்லும் காரணத்தால் தான் இருக்க வேண்டும் என்று சுலபமாக நம்பத் தோன்றிற்று. இந்த மாதிரி வைட்டல் ஸ்டாடிஸ்டிக்ஸ் கொண்ட உடம்பு எந்த சராசரிப் பெண்ணுக்கு இருக்கும். எல்லோரும் சராசரி பெண்கள். இந்த மாதிரி ஒரு உருவத்தைக் கனவில் காணுபவர்கள்...

''இந்த அழகுக்கு நான் பொறுப்பில்லே. இருந்தும் அது எனக்குப் பாரமாக இருக்கிறது. யாரும் என்னிடம் நெருங்கி வர முடியாமல் அடிக்கிறது. நான் ரொம்பத் தனிமையை அனுபவிக்கிறேன். சில சமயம் இந்த டிப்ரெஷன் ரொம்ப அதிகமாகப் போய் விடுகிறது. ஒரு ஸைக்யாட்ரிஸ்டைப் போய்ப் பார்க்கணுமோ என்கிற பயம்கூட ஏற்படுகிறது.''

அந்த மெல்லிய மிருதுவான குரலும் அதிலிருந்த சோகமும் அவனை உலுக்கி விட்டது. என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் அவன் பேசாமல் இருந்தான்.

''எனக்கு உங்கள் உதவி வேணும் பாலு. உங்கள் சிநேகிதம் வேணும் ஆயுசுக்கு ''

அவன் ஒருவிநாடி திகைத்துவிட்டுப் பிறகு மளமளவென்று ஒரு சந்தோஷம் தேகத்தையும் மனசையும் நிறைக்க ஏதோ சமாதானமாகச் சொல்ல வார்த்தைகளைத் திரட்டுவதற்குள், அவள் மெள்ள கோப்பையைக் கீழே வைத்து முகத்தைக் கவிழ்த்து விசும்ப ஆரம்பித்தாள். அவன் பதறிப் போனான். அவளுடைய ஷில்க் தலைமயிர் இரண்டு பக்கமும் கவிழ்ந்து முகத்தை முழுவதும் மறைத்தது.

சங்கடமும் கூச்சமுமாக அவன் எட்டியிருந்தபடியே, ''சித்ரா'' என்றான்,மெள்ள. ''ப்ளீஸ், சித்ரா டேக் இட் ஈஸி.''

சற்று நேரத்துக்கு லேசாக அவள் விசும்பினாள். முன்பின் அதிகம் பரிச்சயமில்லாத அவன் எதிரில் இப்படி ஒடிந்து போகிற மாதிரி இவள் அழவேண்டுமானால் இவளுடைய துக்கம் எத்தனை ஆழமானதாக இருக்க வேண்டும். இவளுடைய தனிமை எத்தனை பயங்கரமாக இருக்கவேண்டும் என்று தோன்றிற்று. மாலு இந்த மாதிரி அழுது பார்த்ததேயில்லை என்று ஞாபகம் வந்தது.

> கேரம் போர்டு வைத்திருப்பீர்கள். அதற்குக் காய்கள் நகர என்று போர்டு மீது பவுடர் ஏதாவது தூவுவீர்கள். குறைந்த செலவில் நிறைந்த பலனைத் தரும் வழுவழுப்பான பவுடர் எது தெரியுமோ? அரோரூட் மாவு! ஆமாம். இந்த மாவை வாங்கி வைத்துக் கொண்டு கேரம் போர்டு மேல் தூவி விளையாடக் காய்கள் அழகாக ஸ்கேட்டிங் செய்வதைக் காணலாம்.
>
> —வசந்தா கோவிந்தன்.

ஓ, மாலுவுக்கும் இவளுக்கும் சம்பந்தமேயில்லை... இவளுடைய பிரச்சினைகள் மாலுவுக்கு இல்லை... இவள் அழகே இவளது பலவீனம். இந்தப் பலவீனமே இவளுடைய துயரத்துக்குக் காரணம். இத்தகைய துயரத்தை வேறு எந்தப் பெண்ணும் புரிந்து கொள்ள மாட்டாள். இவளைப் பாதுகாக்க வேண்டும் என்று சட்டென்று ஒரு கருணை அவனுள் பொங்கிற்று. அந்த அழகிய தோள்களைப் பற்றி ஆதரவாக இரண்டு வார்த்தை சொல்ல வேண்டும் போல் மனசு பறந்தது. கல்யாணப் பேச்சு என்று வந்த பிறகு இனி என்ன கூச்சம் என்கிற தைரியத்துடன் அவள் முகத்தை நிமிர்த்தி.

''உனக்கு என் சிநேகிதம் உண்டு ஆயுசுக்கு'' என்றான்.

(தொடரும்)

# வீட்டிலே ஒரு தோட்டம்!



நம்மில் பலர் வீட்டைச் சுற்றி இருக்கும் காலி இடங்களில் வெறும் அலங்காரச் செடிகளை மட்டும் நடுகிறார்கள். அல்லது புற்கள் மட்டும் வளர்ந்து இருப்பதைக் காணலாம். ஒவ்வொரு குடும்பத் தலைவியும் சற்று சிரமத்தை எடுத்துக் கொண்டு வீட்டைச் சுற்றி இருக்கும் காலியிடங்களில் வெறும் அலங்காரச் செடிகளை மட்டும் நடாமல் வீட்டிற்கும் பயன்படும் விதத்தில் காய்கறித் தோட்டங்களையும், அதேநேரத்தில் அவர்களுக்கு வருமானம் தரக்கூடிய விதத்தில் தோட்டத்தைப் பராமரிக்கும் முறைகளையும் தெரிந்து வைத்திருப்பது நல்லது.

## எதற்குத் தினமும் காய்கறி?

நமது உடலுக்குத் தேவையான ஆரோக்கியத்திற்கு மூலக்காரணம் காய்கறிகள். ஒளியிருந்த கண்கள், உறுதியான பற்கள், வலுவுள்ள எலும்புகள், பளபளப்பான மேனி, இரத்தவிருத்தி, உடல்வலிமை, நோய் எதிர்ப்பு சக்தி, ஆரோக்கியவாழ்வு, நீடித்த ஆயுள் கிடைக்கிறது.

உதாரணத்திற்கு இலைவகை காய்கறிகள், தண்டுக்கீரை, அகத்திக் கீரை, முட்டைக் கோஸ், முருங்கை இலை சிறந்த பாதுகாப்பு உணவாகும். ஏனெனில் இவைகளில் சுண்ணாம்புச்சத்து, இரும்புச்சத்து ஆகியவை அடங்கிய தாது உப்புக்களும் வைட்டமின்களும் நிறைந்துள்ளன. ''பால் சாப்பிடுவதால் என்ன நன்மை ஏற்படுகிறதோ, அதே சத்துக்களை பச்சைக் கீரைகள் அளித்துவிடும்'' என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

## எவ்வளவு இடம் வேண்டும்?

சாதாரணமாக ஐந்து பேர் கொண்ட குடும்பத்திற்கு வேண்டிய காய்கறிகளைப் பெற, சுமார் 5 செண்ட் நிலம் இருந்தால் போதும். வீட்டில் இருந்து வெளியேறும் கழிவு நீரைக் கொண்டே காய்கறித்தோட்டங்கள் அமைத்து விடலாம். குறைந்த செலவில் வருடம் முழுவதும் உங்களது வீட்டிற்குத் தேவையான காய்கறிகளையும் உங்களுக்கு ஓய்வு நேரத்தில் பொழுது போக்கும், சுற்றுப்புறம் சுத்தமாக வைக்கவும் காய்கறித் தோட்டம் பயன்படுகிறது.

## வீட்டுத் தோட்டம் அமைப்பது எப்படி?

1. மண்பரப்பின் மேலுள்ள கற்கள், ஓடுகள், சுண்ணாம்புத் துண்டுகள் போன்றவைகளை அப்புறப்படுத்த வேண்டும்.

2. பாத்திகளையும், நடைபாதைகளையும் அளவு செய்து பிரிக்க வேண்டும்.



3. ஒன்றரை அடி ஆழம் மண்ணைத் தோண்டி ஒருபுறமாக வைக்கவும்.

4. அம்மண்ணிலுள்ள புல், பூண்டுகள், கற்கள் முதலியவற்றை நீக்க வேண்டும்.

5. மேலும் ஒன்றரை அடி ஆழத்திற்குத் தோண்டி, மண் கட்டிகளை உடைத்துத் தொழு உரம் அல்லது கம்போஸ்ட் உரமிட்டு நன்றாகக் கலந்து விட வேண்டும்.

6. முதலில் எடுத்த மேல் மண்ணைப் போட்டுச் சமம் செய்தல் வேண்டும்.

## பயிரிட வேண்டிய காய்கறிகளும் பருவமும்:

எல்லாக் காய்கறி விதைகளையும் ஒரே மாதத்தில் போட்டால் நமக்குப் பலன் கிடைக்காது. அந்தந்தக் காய்கறிகளுக்கு ஏற்ற பருவத்தைத் தெரிந்து வைத்து இருந்து போட வேண்டும். அப்பொழுது தான் வருடம் முழுவதும் தோட்டத்தில் இருந்து காய்கறிகளை அறுவடை செய்ய முடியும். இங்கு கீழ்க்கண்ட அட்டவணை உங்களுக்கு உதவியாக இருக்கும்.

| பாத்தி | காய்கறிவகை | பருவம் |
|---|---|---|
| 1. | கத்தரி<br>முட்டைகோஸ்<br>வெண்டை | ஜூன்—செப்டம்பர்.<br>அக்டோபர்-ஜனவரி<br>பிப்ரவரி—மே. |
| 2. | கொத்தவரை<br>கத்தரி<br>கீரை<br>மிளகாய் | ஜூன்—செப்டம்பர்.<br>அக்டோபர்—டிசம்பர்.<br>ஜனவரி—பிப்ரவரி.<br>பிப்ரவரி — ஜூன். |
| 3. | தக்காளி<br>முள்ளங்கி<br>கொத்தவரை | ஜூன்—செப்டம்பர்<br>அக்டோபர் — டிசம்பர்.<br>ஜனவரி — மே. |
| 4. | வெண்டை<br>கொத்தவரை<br>கத்தரி<br>கீரை | ஜூன்—செப்டம்பர்<br>அக்டோபர்-ஜனவரி<br>பிப்ரவரி — மே.<br>மே — ஜூன். |
| 5. | மிளகாய்<br>வெண்டை<br>கத்தரி | ஜூன்—செப்டம்பர்<br>அக்டோபர்-ஜனவரி<br>பிப்ரவரி—மே. |
| 6. | பெல்லாரி<br>தக்காளி<br>கீரை<br>முள்ளங்கி | ஜூன்— செப்டம்பர்<br>அக்டோபர்-ஜனவரி<br>பிப்ரவரி — மார்ச்<br>ஏப்ரல் — மே. |

## விதை எங்கு கிடைக்கும்?

உங்களது ஊருக்கு அருகிலுள்ள தோட்டக்கலை துறையில் பணியாற்றும் தோட்டக்கலை அலுவலரை அணுகினால், எல்லா உதவிகளையும் செய்வார். மேலும் வீட்டுத்தோட்டம் அமைக்க ஒவ்வொரு காய்கறி வகையிலும் சுமார் 10 கிராம் முதல் 20 கிராம் வரை இருந்தால் போதும். இதற்கு வசதியாக வேளாண்மை இடங்களில் காய்கறி விதைகளை சிறுசிறு பாக்கெட்டாகப் போட்டு விற்பனை செய்து வருகிறார்கள். இதன் விலை ஒரு ரூபாய் முதல் இரண்டு ரூபாய் வரை தான் இருக்கும். மேலும் பூச்சிக்கொல்லி மருந்து, உரங்கள், வாங்க அருகிலுள்ள வேளாண்மை உரக்கடைகளில் அணுகினால் கிடைக்கும்.

## வீட்டுத் தோட்டத்தில் பயிராகும் இதரக் காய்கறிப் பயிர்கள்:

வேலியோரமாக கொடி வகைகளான பசலை, பீர்க்கு, பாகல் போன்றவை போடலாம். தோட்டத்தின் நடைபாதை ஓரத்தில் பொன்னாங்கண்ணி, கொத்துமல்லி, மூளைக் கீரை, கரிசலாங்கண்ணிகளையும், இருபாத்திகளுக்கும் இடையில் உள்ள வரப்புகளில் முள்ளங்கி, வெங்காயம், கேரட், பீட்ருட், போன்றவைகளை பயிர் செய்யலாம். காய்கறி செடிகள் மட்டுமில்லாமல் ரோஜா, மல்லிகை சாமந்தி, கனகாம்பரம் போன்ற மரச்செடிகளையும் வைக்கலாம்.

> செருப்பு கடிக்கிறதா? கவலை வேண்டாம். செருப்பின் மேல் பாகத்துத் தோலின் அடிப்பாகங்களில் மெழுகு வர்த்தியை நன்றாக தேய்த்து வைத்து விடுங்கள். பிறகு அணிந்து கொண்டால் கடிக்கவே கடிக்காது.
>
> —வசந்தா கோவிந்தன்.

## முடிவாக:

கொல்லைப்புறத்தில் அன்றாடம் கீரை கிடைக்கிற வகையில் ஒரு முருங்கை மரம், அகத்திமரம், பசலைக்கீரை இனங்களும், காய்கறிகள், பப்பாளி, எலுமிச்சை போன்ற பழமரங்களும் வைத்துப் பயிர் செய்வதால் எல்லா விதக் காய்கறிகளும், கீரை, பழங்களும் அன்றாடம் கிடைக்கும்.



இது மிக நீளமான நேப்கின்.



இது மிக அகலமான நேப்கின்.



இது மிக தடிப்பான நேப்கின்.




# கேர்ஃப்ரீ*எக்ஸ்ட்ரா லார்ஜ்

## சில பெண்களுக்கு இது தேவை.

கூடுதலான பெரிய சைஸிலே தரமுள்ள நேப்கினின் முழுமையான சுகமும், பாதுகாப்பும் தேவைப்படும் பெண்களுக்கு—இதோ! புதிய கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ். ஆம் உங்களுக்காகவே.

நீளத்தினையும், அகலத்தினையும், தடிப்புத்தன்மையினையும் கூடுதலாகவே பெற்றிருக்கும் இந்த நேப்கினின் நூலிழைகள் உறிஞ்சும் திறன் அதிகமாகப் பெற்று மிகுந்த நம்பிக்கையைத் தருகிறது.

ஒன்டர்ராப் உறைகள் ஈரத்தை உள் அடுக்கிற்குள் செலுத்துவதால் ஈரம் சீராக உறிஞ்சப்பட்டு உலர்வினையும் சுகத்தினையும் உங்களுக்குத் தருகிறது. நாப்கினின் இந்த சிறப்பான டாப்-நுனிகள் சரியாகப் பொருத்த உதவுவதோடு கச்சிதமாகவும் இருக்கிறது.

அத்துடன் ஈரம் கசியாத "நீல-பிளாஸ்டி ஷீல்டு" நேப்கினின் அடிப்பகுதியினையும், இரண்டு பக்கப்பகுதியினையும் சூழ்ந்து கொண்டு, கசிவோ, கறையோ மற்ற விபரீதங்களோ ஏற்படாமல் பாதுகாக்கிறது.

புதிய கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ்—முழுமையான சுகம், முழுமையான பாதுகாப்பு. கூடுதலான பெரிய சைஸில்




## முழுமையான சுகம், முழுமையான பாதுகாப்பு கூடுதலான பெரிய சைஸில்.

Johnson & Johnson

தமிழ்நாட்டில் மட்டுமே கிடைக்கும்.



OBM/2188 TAM

## இதோ வந்துவிட்டது! இந்தியாவின் மிக இலேசான இஸ்திரிப் பெட்டி. மற்றவற்றை மிஞ்சும் செயல் திறனுடையது.

# ஸ்:பியர்ஹாட்

### ஆட்டோமேட்டிக் இஸ்திரிப் பெட்டி, டெ:ப்லான் கோட்டிங் செய்யப்பட்டது.

ஸ்:பியர்ஹாட் இங்கு இருக்கும் பொழுது இனி வெளிநாட்டு இலேசான இஸ்திரிப் பெட்டிகளை தேடவேண்டியதில்லை. ஸ்:பியர்ஹாட் ஆட்டோமேட்டிக் இஸ்திரி வாங்க பல நல்ல காரணங்கள் இங்கே தருகிறோம்:

- சூடுபிடிக்கக் குறைந்த நேரம். மின்சாரத்தில் சிக்கனம்.
- மிக இலேசானது. எடை— ஒரு கிலோ கிராமுக்கும் குறைந்தது. ஆகவே விரைவாக இஸ்திரி செய்யலாம்.
- டெ:ப்லான் தடவிய அடிப்பாகம் உங்கள் துணிகளைப் பாதுகாக்கிறது. துருக்கறை மற்றும் கருகிய தடம் ஏற்படுவதில்லை.
- அடிப்பாகம் முழுவதும் சமமான சூடு. தரமான, உயர்ரக, ட்யூபுலர் ஹீட்டிங் எலிமென்டே இதற்குக் காரணம்.
- ஸ்நாப் ஆக்ஷன் தர்மோஸ்டாட் உங்கள் டிவி, ரேடியோவில் ஒலித் தடங்கல் ஏற்படுத்தாமல் தவிர்க்கிறது.
- எளிதான மின்வொயர் அசைவுக்கு ஏற்றவாறு ரோட்டரி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.
- சூடு ஏறாத கைப்பிடி. பிடிக்க மிகவும் வசதியானது.

மாடல்
:பெதர்லேட்




விற்பனை ஏற்பாடு:




பாட்லிபாய் & கம். லிட்.,
வி.பி. காந்தி மார்க்,
பம்பாய்-400 023.

ஸ்:பியர்ஹாட் :பெதர்லேட் பயன்படுத்தி உங்கள் பொன்னான நேரத்தைக் குறைத்திடுக.

CHAITRA-BB-209 TAM

# ஆரோக்கியமான உடம்பு எது?

1. உடலினுள் நடக்கின்ற அனைத்து வேலைகளும் (ஜீரணம், இதயத் துடிப்பு, கழிவு வெளியேற்றம் போன்றவை.) எந்தவிதத் தொந்தரவோ, வலியோ, செயற்கை முறைகளோ இல்லாமல் நடக்க வேண்டும்.
2. ஆரோக்கியமானவருக்கு வேளாவேளைக்கு நன்கு பசியெடுக்கும். அந்தப் பசி நல்ல உணவுகளினால் மட்டுமே தீர்க்கப்பட வேண்டும்.
3. ஜீரணம் ஏற்படுவது என்பது இயல்பாக நடக்க வேண்டும். அதன்மேல் கவனம் செல்லும்படி இருத்தல் கூடாது.
4. சாப்பிட்ட பிறகோ, அந்தந்த பருவகாலங்களில் விளையும் உணவுகளை உண்டபிறகோ எந்தவிதமான தொந்தரவும் இருக்கக் கூடாது.
5. தண்ணீர் குடிப்பதற்காக மட்டுமே நாக்கில் தாகம் என்ற நிலை ஏற்பட வேண்டும்.

6 சிறுநீர்:

❊ சிறுநீர் எந்தவித வலியும் இல்லாமல், அதிகச் சூடாக இல்லாமல் உடம்பிலிருந்து பிரிதல் வேண்டும்.

❊ மிக லேசான வெளிர் மஞ்சள் வண்ணத்துடன் இருத்தல் வேண்டும். வண்ணமே இல்லாமலோ இரத்தத்துடனோ, கருப்பாகவோ, கலங்கலாகவோ இருக்கக் கூடாது.

❊ இனிப்போ, கைப்புச் சுவையுடனோ இருக்கக் கூடாது.

7. மலம்:

❊ ஆரோக்கியமானவரின் மலம் ஓரளவு இளகிய தன்மையுடன், மரவண்ணத்தில் இருக்க வேண்டும்.

❊ இரத்தம், நீர், புழுக்கள் இருத்தல்கூடாது.

❊ பச்சை, க்ரே, கருப்பாகவும் இருக்கக் கூடாது.

8. தோல்:

❊ சரப்பசையுடன் இருக்க வேண்டுமே தவிர நீர் இருக்கக் கூடாது.

❊ தொடும்போது லேசான சூட்டுடன் எலாஸ்டிக் தன்மையுடன் இருக்க வேண்டும்.

(சென்னையை அடுத்துள்ள முட்டுக்காட்டில் 'இயற்கை முறை வைத்தியம் & யோகா' மருத்துவமனையை அமைத்துள்ளனர்.

ஹைதராபாதில் இதற்கான மருத்துவமனையில் உள்ள டாக்டர். வெங்கடராவ் இதற்கு ஆலோசகராக இருக்கிறார். சென்னையில் பொறுப்பாளர்களாக டாக்டர். பட்டம்பதியினர் இருக்கின்றனர் இவர்கள் கூறிய தகவல்கள்.)



# ஸ்ரீமாதா

ரா. கணபதி

## 11

அடங்காத ஆக்ரோசத்துடன் பஞ்ச ஸேநாதிபர்களும் நகுலி மேற் பாய, அவள் கருடன் மீதே ஆரோஹணித்து அவர்களோடு போரிட்டாள். அக்ஷீண நகுல அஸ்திரம் என்ற ஒன்றை அவள் எய்ய, அதன் பெயருக்கேற்பக் குறைவறியாத மாபெரும் கீரிப்படை தோன்றியது; எதிரிகளின் நூறு அக்ஷௌஹிணிகளையும் நீற்று க்ஷீணித்து விழச் செய்தன. நகுலி படை மத்தியில் பட்டிஸ ஆயுதத்துடன் குதித்துக் கரங்கனின் ரெத்தைத் துண்டித்தாள். மற்றவர் நால்வர் தலைகளும் அவளது கத்தி வீச்சில் பனங்குலையாய் விழுந்தன.

வீர விஜய நகுலியை மந்த்ரிணி மனமாரப் போற்றி, ''நீ என் அங்க தேவதையாவாய்'' என்று ஆசீர்வதித்துத் தன்னிலேயே பாகமாக்கிக் கொண்டாள். அதாவது மந்த்ரிணி நகுலேச்வரி ஆனாள்.



ஸர்ப்பமாக மூச்செறிந்தான் பண்டன். ஸர்ப்பிணியின் மாயையும் சக்தி ஸேனையிடம் பலிக்கவில்லை என்றறிந்த அப்போது! பஞ்ச ஸேநாதிபர் பஞ்சாகப் பறந்த பின் ஸப்த ஸேநாபதிகள் என்ற எழுவரை யுத்தரங்கம் அனுப்பினான்.

வலாஹகன், ஸூசிமுகன், விகடானனன், கராளாக்ஷன், கரடகன், பாலமுகன், விகர்ணன் எனும் இவ்வெழுவர் கடும் தவமிருந்து கதிரவனைக் கண்ணெதிரே வரவழைத்தவர்கள்; ''போரில் நாங்கள் விரும்பும்போது எங்கள் கண்களில் நீ குடிகொண்டு, எதிரிகளைக் கொளுத்த வேண்டும், அவர்களது ஆயுதங்களை ஸ்தம்பிக்கச் செய்ய வேண்டும்'' என்று ஆதவனிடம் வரம் கோரிப் பெற்றவர்கள்.

முந்தைய வெற்றியில் பெற்ற உற்சாகத்தில் ஏழு என்ன, எழுநூறு ஸேநாபதிகள் வந்தாலும் எதிர்முகம் கொடுக்கச் சக்தி ஸேனை தயாராயிருந்தது. ஆனைக்குட்டி மதிலிலே மோதி மோதி விளையாட்டாகவே அதைத் தகர்ப்பதை 'வப்ரக்ரீடா' என்பார்கள். சக்திகள் அவுணரோடு இப்படி 'வப்ரக்ரீடா' விளையாடியே நாசம் விளைவித்தனராம்!

வலாஹகன் வாஹனமாகக் கொண்டிருந்த ஸம்ஹாரகுப்தம் என்ற பெரும் கழுகு ஒவ்வொன்றும் அரைக்ரோச (ஒரு மைல்) நீளமுள்ளதான இறகுகளை விரித்துப் பறந்து வந்து, கொள்ளிக் கண்களால் சக்திகளை அச்சுறுத்தி, அக்னி குண்டமான அலகினால் அவர்களைப் பக்ஷித்தது. இப்படியே மற்ற ஆறு சேநாபதிகளும் காட்டிய பேராற்றல் போதாதென்று அவர்களது ஊர்திகளான காகம், பருந்து, பேருண்ட பக்ஷி, சேவல், ப்ரேதம் (சவம்), வேதாளம் முதலியனவும் பெருஞ் சேதம் விளைவித்தன. இத்தனைக்கும் ஈடு கொடுத்தும் ''பூஞ்சை'' லலிதையின் பூவைப் படையினர் பூவாக மலர்ந்தே நின்றனர்.

தோள்வலிமையையும், போர்க்கலை நுட்பங்களையும் காட்டிய பின்பே வீரர்கள் வரபலத்தைப் பயன் செய்து கொள்வரென்று முன்பே கண்டோமல்லவா? அந்த கட்டம் வந்து விட்டது என்று ஸப்த ஸேநாபதியர் கருதினர். மாதவம் செய்து ஆதவனிடமிருந்து பெற்ற இறலை வெளிக்காட்டினர். அவர்களுடைய கண்கள் ஸூர்ய கர்ப்பமாக அக்னியைப் பொழிய, பூவைச் சக்திகள் பூ வாடுவது போலச் சாம்பினர். அவர்கள் கணைகளை எய்வதற்குமில்லாமல் ஸ்தம்பனம் ஆகிவிட்டிருந்த நிலையில் அவுணர்கள் ஆயுத மழை பொழிந்து அவர்களைக் குருதி கொட்ட வைத்தனர் — செந்தளிர் செறிந்த கங்கோளக் கொடிகளாக இந்த அலங்கோலத்திலும் அவர்கள் அலங்காரமுற்றதாகப் பௌராணிகர் சொல்கிறார்.

ஸ்ரீமாதாவின் கம்பீர ஆக்ஞை பிறந்தது. உடனே தண்டநாதையின் வெளி உறுப்புக்களின் காவலாளியான திரஸ்கரிணி வெளிப் போந்தாள். திரஸ்கரிணி என்றால் மாயமாக மறைக்கும் சக்தி. 'இருள் பூசி' எனப் பொருள்படும் 'தமோலிப்த' விமானத்திலேறி வந்தாள் இந்த இருள் வர்ண பயங்கரி. அந்தாஸ்திரத்தை எய்தாள். ''அந்த'' என்றால் குருடு. ஸூர்ய வெப்பத்தில் தாக்குண்டிருந்த சக்தி ஸேனைக்கு இவளது இருட்பிரவேசமே ஆறுதலாயிருந்தது. அந்தாஸ்திரத்தின் ஆற்றலில் அவுணர்களின் கண்கள் குருடுபட்டன. பார்வை மறைபட்டதால் போர் புரியாமல் அஸுரர்கள் ஸ்தம்பித்து நிற்க, இதுவரை ஸ்தம்பித்து நின்ற சக்திகள் எழுச்சி பெற்றனர். ''ஆக்ஞையிட்ட மஹாராக்ஞியும், உன்னை அங்க ரக்ஷகியாய்க் கொண்ட தண்டினியும் களிக்க ஸப்த ஸேநாபதியரை ஸம்ஹாரம் செய்வாய்; நாங்கள் அவர்களது படைகளை மரணதேவனுக்குப் படையல் செய்கிறோம்'' என்று அவர்கள் திரஸ்கரிணியிடம் கூறினர்.

அவளும் ஆர்த்து எழுந்தாள். எழுவரும் எழாவண்ணம் தீர்த்துக் கட்டினாள். அவர்களுடைய அருமை வாஹனங்களோடு சேர்ந்து அவர்களது கணங்கள் சக்திகளின் கணைகளுக்கு பலி ஆயின.

சங்கதி கேட்டு அதிர்ந்த பண்டனின் வாயிலிருந்து அவனையுமறியாது உண்மைகள் உதிர்ந்தன. ''அவுணர் குலத்துக்கு அழிவு காலம் வந்து விட்டது. அதனாலேயே வரபலமும் தேய்கிறது. எதிரிப் படையை வெல்லத் திறமிருந்தாலும், விதியை யாரே வெல்வது?'' என்றான்.

ஆயினும் ''நாம் எதும் செய்வதற்கில்லை'' என்று விடுவது வீரருக்கு அழகல்லவே! எனவே விசுக்ர — விஷங்கருடன் விஷயாலோசனை செய்தான் தானவராஜன். வேரை அறுத்தாலே விருக்ஷம் சாயுமாதலால் தலைவியான பராசக்தி லலிதையையே நேராகப் போருக்கு இழுத்து இரண்டில் ஒன்று தீர்க்க வேண்டுமென முடிவு செய்யப்பட்டது.

''இதற்குப் பூர்வாங்கமாகப் 'பரிமித ஸேனை' என்று அவளைச் சுற்றியுள்ள பரிவார கணங்களை அழிக்க வேண்டும், விஷங்கா! சுற்றி வளைப்பதில் நீயே கெட்டிக்காரன். உன் ரஹஸ்ய வேலையை வெளிக்காட்ட இதோ வாய்ப்பு. போ போருக்கு! நீ மறைவாக, குறைவான படையுடன் சென்றாலும் ஸேநாபதியர் பதினைவர் தலைக்கு ஓர் அக்ஷௌஹிணியுடன் பின்னணியில் நின்று உனக்கு உதவி செய்யட்டும்'' என்று தட்டிக் கொடுத்துத் தம்பியைக் கிளப்பினான் தைத்ய ராஜன். விசித்திரப் பெயர்கள் கொண்ட ஹும்பேகன், ஹுஹூமல்லன், கல்கஸன், புல்கஸன், கல்கிவாஹனன் முதலான பதினைந்து தானைத்தலைவர்களும் படை ஸஹிதம் தயாராகி விட்டனர்.

அஸுரரின் பலம் பெருகுவது அந்திப் பொழுதுக்குப் பிற்பாடுதான். எனவே, கதிரவன் மலைவாயில் சாய்ந்த பின்னர் ரஹஸ்ய யுத்த தந்திரம் காட்ட விஷங்கன் புறப்பட்டான். கருத்த வஸ்திர, கவச, தலைப்பாகைகளுடனும் காரிருள்மனத்துடனும் இரவோடு இரண்டறக் கலந்து சென்றது அஸுரப்படை. யுத்த பேரி முழக்கம், வீரவாத கோஷம் எதுவுமின்றி மௌனமாக முன்னேறியது. காலடி ஒலி, மூச்செறியும் ஓசை கூட இல்லாமல் அத்தனை நிசப்தமாக!

தண்டினியும், மந்த்ரிணியும் முன்னே செல்ல ஸ்ரீமாதா படைகளின் பின்னே வந்ததை முன்பு பார்த்தோமல்லவா? விஷங்கன் அவ்விருவரின் எதிர்ப்பை விடுத்து, பின்புறமாகச் சென்று நேரே அம்பாளைப் பிடிக்க (அவள் பாதத்தைப் பிடிக்க அல்ல,




அவளையே சிறைப் பிடிக்க) எண்ணினான். குறைவான படையுடன் மறைந்து மறைந்து சென்றான். எதிரிகள் எவரேனும் எதிர்ப்பட்டால் தங்களை அம்பிகையின் படையினர் என்றே தோன்றச் செய்யும் ஸமிக்ஞைகளைச் செய்தபடி முன்னேறினான்.

இதோ மகிமை பொருந்திய சக்ரராஜ ரதம்!

அதன் உச்சி மையத்தில் முத்துக்குடையின் கீழ் — உலகுக்கே மையமான ஆதார பராசக்தி; உலக மாயையிலிருந்து விடுவிக்கவும் செய்யும் முத்தி நாயகி.

முத்து முறுவல் பூத்து, தன்னைச் சுற்றியுள்ள நித்யா தேவிகளோடு விளையாட்டுப் பேச்சில் விநோதித்துக் கொண்டிருக்கிறாள்! நித்யா தேவிகள் பதினைவர். காலதத்வ வடிவினராகிய அவர்கள் ப்ரதமை முதலான பதினைந்து திதிகளுக்கு அதிதேவதையராவர். அவுணர்கள் பெயர்ப் பட்டியல் நிறையப் பார்த்து விட்ட நாம் இந்த அன்பு அன்னையரின் புண்ய நாமங்களையும் பார்க்கலாம். ப்ரதமையின் அதிதேவதையான முதல் நித்யைக்கு ஸ்ரீமாதாவின் சிறப்புப் பெயரான காமேச்வரி என்பதேதான் பெயர். மற்ற பதினால்வர் பகமாலினி, நித்யக்லின்னா, பேருண்டா, வஹ்நிவாஸினி, வஜ்ரேச்வரி, சிவதூதி, த்வரிதா, குலஸுந்தரி, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வமங்களா, ஜ்வாலாமாலினி, சித்ரா என்பவர்கள். லலிதாதேவியே பதினாறாவது நித்யையாகக் கருதப்படுவதிலிருந்து இவர்தம் பெருமையை அறியலாம்.

விளையாட்டுப் பேச்சிலும் அம்பாள் கடமை மறவாது தனது தீர்க்க நயனங்களால் முன்னே விரிந்த மாபெரும் படையைக் கண்காணித்துக் கொண்டேயிருந்தாளாம். 'படாதா? நம் மீது படாதா?' என்று மாமுனிவோரும் ஏங்கும் அக்கண் பார்வை தன் மீது படாமலே ஒளிந்தபடி முன்னேறினான் விஷங்கன். ஸர்வஸாக்ஷியான அவளிடம் மறைய முடியாதாயினும், அவளும் விந்தை லீலையில் அச்சத்ருவின் ஊடுருவலை அறியாதது போலத்தான் நடித்தாள்!

முன்னணிப் படை சக்ரராஜ ஸேனைப் பிரிவுக்கு உதவ இயலாது என்று உறுதிப் படுத்திக் கொண்ட விஷங்கன் ஒன்பதடுக்கு கொண்ட அத்தேரின் வெளி ஓரத்திலிருந்த அணிமாதி சக்திகளின் மேல் தாக்குதலைத் தொடங்கினான். முன்னணிப் படைகளை விட்டு, இப்படிப் பின்புறத் திடீர் தாக்குதல் நிகழும் என்று அச்சக்திகள் எதிர்பார்க்கவில்லை. கருமையோடு ஒருமையுற்ற சத்ருக்களைப் புரிந்து கொள்ளவே அவர்களுக்குச் சிறிது பொழுது பிடித்தது. கவசங்களைக் கழற்றிவிட்டு, ஆயுதங்களையும் கைக்கொள்ளாமல் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த சக்திகள் அவற்றை காரிருளில் தேடி எடுத்து தரிப்பதற்குள் விஷங்கன் அவர்களை நையப் புடைத்து விட்டு உள்ளடுக்குகளுக்கு முன்னேறப் பார்த்தான். அவ்வப்போது அண்ணனுக்கு அறிவுரை சொல்பவனாயினும் அடித்தளத்தில் இவன் விஷ அங்கனே ஆதலால் இப்படி யுத்த தர்மம் மீறி அயுக்தங்கள் செய்து கொண்டே போனான்.

இந்த அல்லோலகல்லோலத்தில் உள் ஆவரணங்களின் (அடுக்குகளின்) சக்திகணங்கள் விழிப்புற்றன. ப்ரதம ஆவரணத்திலிருந்து காதுக்குக் காது செய்தி போய் நவம ஆவரணத்திலிருந்த ஸ்ரீமாதாவின் திருச்செவி எட்டியது. அவள் நித்யாதேவிகளை உஷார்ப்படுத்தினாள்.

இனி ரஹஸ்ய தந்திரம் பலிக்காதெனக் கண்டான் விஷங்கன். முக்ய ஸேனாதனனை குடிலாக்ஷனுக்கு "S O S." அனுப்பினான். குடிலாக்ஷன் உடனே பத்து அக்ஷௌஹிணியுடன் தண்டினீ — மந்த்ரிணீ ஸேனைகளுக்கும் சக்ரராஜ ரதத்துக்கும் இடையே புகுந்து அவை லலிதைக்குத் துணை வர முடியா வண்ணம் தடை செய்தான்.

அம்பாள் லீலை யாரே அறிவர்? ஸகல ஆதார, ஸர்வ பூரண சக்தி, தனது நேர்ப் படைப் பகுதியுடன் மட்டுமே தனித்து விடப் பட்டாள். அவளது சக்ர ராஜ மஹாரதம் சத்ருக்களின் சரங்களால் மூடப் பட்டு விட்டது.

கூந்தலுக்கு
எழிலோ எழில்
மென்மை
சுகமோ சுகம்...
வழங்குவது
ஹேலோ
ஷாம்பூ

ஹேலோ வழங்குது
கூந்தல் எழில்—
கூந்தல் பெற்றிடும்
மென்மை சுகம்.
அதன் மணமோ
அபூர்வப் புதுமையே,
ஹேலோ உணர்வே
உன்னதமே.




வியப்பூட்டும் புதிய ஹேலோ வரிசை

ஹேலோ எக்
ஷாம்பூ—
புரத
ஊட்டத்திற்கானது.

புதிய ஹேலோ
க்ரீன் ஆப்பிள்
ஷாம்பூ—
வியப்பூட்டும்
புத்துணர்வு மணம்
அளிக்கிறது.

புதிய ஹேலோ
ஹெர்பல்
ஷாம்பூ—
மூலிகைகளின்
இயற்கை நலன்கள்
உள்ளது.

ஹேலோ உணர்வே உன்னதமே!

GKBE.893.29.TM

புருவவில்லைச் சிறிதே வளைத்தாள். நித்யா தேவியர் பொங்கி எழுந்தனர். பெயராலேயே பேரொளியைச் சாற்றும் வஹ்நிவாஸினியும், ஜ்வாலாமாலினியும் முற்பட்ட மாத்திரத்தில் அங்கு படிந்திருந்த கனஇருள் கரைந்தோடியது. அதிகம் வளர்த்துவானேன்? நித்யைகள் பதினைவருக்கு எதிராக வந்த தைத்ய ஸேநாபதியர் பதினைவரும், தங்களது பதினைந்து அக்ஷௌஹிணி ஸஹிதம் அத்தேவிகளின் கணைகளுக்கு இரையாகி விட்டனர்!

விஷங்கனும் அதே கதிக்கு, அதோகதிக்கு ஆளாகித்தானிருப்பான். ஆனால் சத்தயுத்த முறைகளை விட்ட அவன் இப்போது பேடி போல் போர் முனையை விட்டு ஓடுகிறான். புறமுதுகிட்டவனைத் தாக்குவதில்லை என்று தேவியின் கணங்கள் பெருமனத்தோடு அவனை விட்டனர். ''மாவீரனாயினும் விதியை யாரே வெல்வது? தண்டினியால் தான் வதையுற வேண்டுமென விதிக்கப் பட்டதாலேயே நம்மிடமிருந்து தப்பி ஓட எண்ணம் கொண்டு விட்டான்'' என்று கூறி அவனை நிரபராதியுமாக்கி விட்டனர்!

இரவு கழிந்தது. இரவி உதித்தான். அவ்வொளியையும் தண்மையாலேயே விஞ்சும் நிலவுப் பார்வையை அம்பிகை தனது பரிவாரத்தினர் மீது பொழிவித்தாள். அவர்களது இருமேனிகளில் ஏற்பட்டிருந்த ரண காயங்கள் அந்த நொடியே ஆறின. வெற்றி கண்ட அவர்களை மெச்சி மகிழ்ந்தாள் மஹாராக்ஞி.

பதினைந்து படைத் தலைவரும் உற்ற பரிபவத்தினால் குடிலாக்ஷன் பதற்றமுற்று, தனது மாவீரத்துக்கு உகாத முறையில் விஷங்கனைப் பின்பற்றி ஓட்டம் பிடித்தான்.

''அடடா! அரசியின் ரதம் இவ்வளவு நேரம் நம்மிடமிருந்து துண்டித்து விடப்பட்டதே'' என்ற ஆதுரத்துடன் தண்டினியும் மந்த்ரிணியும் அன்னையிடம் ஓடிவந்து அவள் அடி பணிந்தனர்.

''தேவி! தப்பிதம் நடந்து விட்டது. க்ஷமித்தருள்வாய். இனி அஸுரர்கள் இடும் பிரவேசம் செய்து நேரே உன்னிடம் வர விட மாட்டோம். நாம் ஓய்வு கொள்ளும்போது தங்குவதற்காக இதோ இந்த மஹேந்த்ர பர்வதத்தின் தென்புறம் விசாலமான கூடாரம் அமைப்போம். அதைச் சுற்றி வஹ்நி ப்ராகாரம் என்பதாகத் தீப் பிழம்புகளாலேயே கோட்டை கட்டி எதிரிகள் அணுகாத வண்ணம் செய்வோம்'' என்று விண்ணப்பித்துக் கொண்டனர்.

''ஆஹா'' என தேவி மந்தஹாஸம் புரிந்தாள். ''நம் ஸேனைகளுக்கு உரிய காப்புத் தருவதே நமக்கான தர்மம். அதை நீங்கள் உணர்ந்து கூறியதில் மகிழ்ச்சி'' என்றாள். ஜ்வாலாமாலினியை, ''குழந்தாய்'' என்று அழைத்தாள். ''அக்னிசக்தியான நீயே இந்த வஹ்நிப்ராகாரத்தை எழுப்புவாயாக'' என ஆசீர்வதித்தாள்.

கூடாரம் அமைக்கப்பட்டது. ரத்தினத்தால் எடுத்த மதிலோ என வியக்கும் வண்ணம் செந்தீயால் சுற்றிலும் அரண் எடுத்தாள் ஜ்வாலாமாலினி.

இருபது அக்ஷௌஹிணி ஸேனைகளை வெளியே சுற்றிலும் காவல் வைத்தனர். அவர்களுக்குத் தலைமை தாங்கியவர் இருவர். ஒருவர் தண்டினியின் விக்னதேவி என்று போற்றப்படும் தண்டாயுததாரிணியான ஸ்தம்பினி. மற்றவர் இந்த லலிதோபாக்யானத்தைக் கும்பமுனிக்குக் கூறும் பரிமுகனேதான்!

தோல்விக்கு மேல் தோல்வி கண்ட பண்டன் தன் முப்பது மைந்தரை அழைத்தான். ''வீரச் செல்வங்களே! உங்கள் துணை கொண்டே அன்று அமரேந்திரன் உள்ளிட்ட அஷ்டதிக்பாலரையும் வென்றேன். பெண்டிருடன் போர் செய்வது பழிப்புக்கிடமல்லவா என ஒதுங்கும் சிங்கக் குட்டிகளே! நம் குலம் நசியாது காக்கவே இப்போது அபகீர்த்தியையும் பொறுத்துக் கொண்டு போரிடச் செல்லுங்கள். இது என் ஏற்பாடல்ல, விதியின் ஏற்பாடு'' என்றான். மெய்யே! நேராகத் தன் குலத்தை நசிப்பிக்கவேதான் விதியின் உகப்பில் மக்களை பலி பீடத்துக்கு விரைவுபடுத்துகிறான்!

இருபது அக்ஷௌஹிணியுடன் அசுர அரசகுமாரர்கள் புறப்பட்டனர். மூத்த ஸுமங்கலிகள் பொரி இறைத்து சோபனம் செய்தனர். வந்திகள் வாழ்த்திப் பாடினர். வீட்டுக்கு வீடு ஆரத்தி சுற்றப்பட்டது. ஆனால் இந்த மங்களங்களை விஞ்சிக்கொண்டு அபசகுனத்துக்கு மேல் அபசகுனமாக ஏற்பட்டது. நில நடுக்கமே உண்டாயிற்று.

பண்டபுத்ரர் மனம் நடுங்கவில்லை. ''வானை வில்லாய் வளைப்போம். அக்னிக்கோட்டையை அரை நொடியில் அணைப்போம்'' என்று வீராட்டஹாஸம் செய்து முன்னேறினர்.

அடிநிலையில் உள்ளோரைப் போருக்கு அனுப்பிப் பின்னரே மேல்நிலையினர் செல்லும் வழக்கமுண்டு. பண்டன் இப்படித்தான் நகரிலேயே இருந்து கொண்டு ஏனையோரை அனுப்பி வந்தான். தண்டு இறங்கும் எதிரி முக்யஸ்தர்களும் இவ்வாறே பாசறையில் இருந்து கொண்டு, பிறரைப் போருக்கு அனுப்புவதுண்டு.

இன்று லலிதை இப்படித்தான் அக்னிக் கோட்டையுள் தன் நேர்ப் பரிவாரப்படை மட்டுமே சூழ இருந்தாள். அவளையே சமருக்கு இழுத்து வெல்ல வேண்டுமென்பது பண்டபுத்ரர் திட்டம். கோட்டையைச் சூழ்ந்து கொண்டு அவளை அழைக்குமுகமாக கர்ஜனை செய்தார்கள். கர்ஜிக்கும் கடும்புலிகளை எதிர்க்கவந்தது அன்னப்பேடு! அதை அடுத்த அத்யாயத்தில் சந்திப்போமே!

(தொடரும்)

# அசத்துங்கள்!

## கண்ணுக்கினிய சாண்ட்விச்சுக்கள்

**தேவையான பொருட்கள்:**

450 கிராம் எடையுள்ள 3 ரொட்டிகள்,
200 கிராம் வெண்ணெய் (அ) உப்பு வெண்ணெய்.
கால் டீஸ்பூன் கடுகு தூள்.
அரை டீஸ்பூன் மிளகு தூள்.
தேவையான அளவு உப்பு.
1 பெரிய உருளைக் கிழங்கு (வேகவைத்து இடியாப்ப உரல் (அல்லது) ஓமப்பொடி அச்சில் பிழிய வேண்டும்.)
25 கிராம் சீஸ் (பாலாடைக் கட்டி) (தேவையானால்)
கால் கப் பச்சை மிளகாய் கொத்துமல்லி தேங்காய் சட்னி,
கால் கப் வேக வைத்து காரட் துருவியால் துருவிய காரட்,
கால் கப் வேக வைத்துத் துருவிய பீட்ரூட்.
1 டேபிள் ஸ்பூன் பச்சைக் காரட் துருவல்,
அலங்கரிக்கக் கொத்துமல்லித் தழை.

**செய்முறை:**

**வெண்ணெய் பேஸ்ட்:**

வெண்ணெய் உப்பு, மிளகுதூள், கடுகு தூள், மசித்த உருளைக்கிழங்கு, துருவிய சீஸ், இவற்றை மரக்கரண்டியால் நன்றாகக் கலக்கவும்.

இந்த அடிப்படை பேஸ்ட்டை வைத்துக் கொண்டு இதனுடன் சட்னி சேர்த்து பச்சை நிற பேஸ்ட்டாகவும், வேகவைத்துத் துருவிய காரட் சேர்த்து ஆரஞ்சு நிற பேஸ்டாகவும், வேக வைத்துத் துருவிய பீட்ரூட் கலந்து சிவப்பு நிற பேஸ்டாகவும், வேக வைத்துத் துருவிய முட்டை சேர்த்து மஞ்சள் நிற பேஸ்டாகவும் பயன்படுத்தலாம்.

**ரிப்பன் சாண்ட்விச்:**




4 பிரட் ஸ்லைஸ்கள் எடுக்கவும்.
ஒன்றில் ஆரஞ்சு பேஸ்ட் தடவி மற்றொன்றால் மூடவும். அதன் மேல் பச்சை பேஸ்ட் தடவவும். இன்னொன்றால் மூடி அதன் மேல் சிவப்பு நிற பேஸ்ட் தடவவும். 4—வது ஸ்லைஸினால் மூடி விடவும்.




ஓரங்களை பிரட் கத்தியால் நறுக்கி விடவும். பின்னர் மேற்கண்ட வடிவங்களில் வெட்டவும்.

**2. ஸ்ப்ரிங் ஃப்ளவர்**

ஒரு பிரட் ஸ்லைஸ் மேல் ஆரஞ்சு (அ) பச்சை நிற பேஸ்ட் தடவி மற்றொன்றால் மூடவும்.
வட்ட வடிவ அச்சினால் வெட்டவும்.
மற்றொரு சிறிய அச்சினால் மூடியுள்ள பிரட் ஸ்லைஸில் நடுவில் சிறு வட்டம் வெட்டி மூடவும்.
நடுவிலுள்ள சிறு வட்டத்தினுள் துருவிய பச்சைக் காரட் தூவி கொத்து மல்லித் தழை செருகவும்.

**3. சான்ட்விச் போட் (படகு):** 

பிரட் ஸ்லைஸை மேற்கண்டவாறு நறுக்கவும்.
மஞ்சள் நிற பேஸ்ட்டை ஐஸிங் டியூபிலோ, முள் முறுக்கு அச்சிலோ நீள்வட்ட வடிவில் நடுவில் பிழியவும்.
காரட்டை வட்டங்களாக நறுக்கி இரண்டாக வெட்டிப் பாய் மரம் போல் செருகி விடவும்.

**இலையும் பூவும்** 

ஒவ்வொரு பிரட் ஸ்லைஸிலும், மஞ்சள் ஆரஞ்சு, சிவப்பு நிற பேஸ்ட் தடவி பூ அச்சினால் வெட்டவும்.
வேறு பிரட் துண்டுகளில் பச்சை நிற பேஸ்ட் தடவி இலை வடிவில் வெட்டவும்.
ஓரங்களை துண்டுகள் வெட்டப் பயன்படுத்தவும். தட்டால் அலங்கரிக்கவும். விருந்துகளில் மேஜை அலங்காரத்துக்கு ஏற்றது.



## பிரட் ரோல்கள்

**தேவையான பொருட்கள்:**

அரை கிலோ மைதாமாவு.
40 கிராம் புதிய ஈஸ்ட் (செட்டியானது).
1 டீஸ்பூன் உப்பு.
1 டீஸ்பூன் சர்க்கரை.
30 கிராம் வெண்ணெய்.
தண்ணீர்.
கறி செய்ய:
2 காரட்,
5 பீன்ஸ்,

உங்களுக்குத் தேவை இவைதான்:
சாந்தமுள்ள மனநிம்மதி
சக்தியுள்ள உணவுகள்.



ஆம். குழந்தைக்கு பாலூட்டத் தயாராகும் நீங்கள் கவனத்தில்கொள்ள வேண்டியது மிக எளிய விஷயம்; மன நிம்மதியோடு பாலூட்டுங்கள். அதிகமாக பால் சுரப்பதற்கு உதவிடும் உணவுகள் அனைத்தையும் உண்ணுங்கள்.

### கவலைப்படுவதை நிறுத்துங்கள்

கவலைப்படுவது உங்களுக்குத் தீங்கு விளைவிக்கும்—என்றால், உங்கள் குழந்தைக்கும்தான். கவலைப்படுவதால் உங்களுக்கு நோய் ஏற்பட்டு பால் வற்றிவிடும்.

நோய்ப் பிரச்சனைகள் எதுவும் உங்களுக்கு இருந்தால், அலட்சியமாய் இருந்து விடாதீர்கள்; டாக்டரிடம் செல்லுங்கள் அவரை உங்கள் மூத்த நண்பராய்க் கருதுங்கள்.

### ஆரோக்கியமான உணவைத் துவக்குங்கள்:

உடலுக்கு உகந்த ஆரோக்கிய உணவு எது என்பதை அறிந்திட பிரமாதமாக நூல் நிலையத்திற்குச் சென்று புத்தகங்களைப் புரட்டுவதோ, கலோரிப் பட்டியலைப் பார்ப்பதோ அவசியமில்லை. உங்களுக்குத் தேவை பொது அறிவுதான். உதாரணமாக, குழந்தையின் வளர்ச்சிக்கு புரதம் அதிக அளவில் தேவைப்பட்டால் அதை வழங்கக்கூடியவை, உடல் வளர்ச்சியை உருவாக்கும் பால், முட்டை, மாமிசம் ஆகும். அவற்றை நீங்கள் உண்ண வேண்டும்; புரதம் செறிந்த உணவுப் பானங்களை அருந்த வேண்டும். புரதச்சத்தை அதிக அளவில் நீங்கள் பெறுவது, உங்கள் குழந்தையும் பெறுவதாகும்—உங்களிடமிருந்து. மிகவும் முக்கியம் என்னவென்றால் கார்போஹைட்ரேட்டுகள் அதிகம் கூடாது. காரணம் அது பாலின் தரம் மற்றும் அளவைப் பாதிக்கும்.

இதுபோன்ற எளிய நடவடிக்கைகள்கூட, உங்கள் குழந்தை முறையாக முலைப்பால் குடித்திட உதவும். உடல் நிலை மோசமாக பாதிக்கப்பட்டிருக்கும் பட்சத்தில் உங்கள் குழந்தைக்கு நீங்கள் மாற்றுப்பால் தேர்ந்தெடுக்க வேண்டும்.

### ஸ்ப்ரே ட்ரை செய்யப்பட்ட அமுல்ஸ்ப்ரே

அமுல்ஸ்ப்ரே—நன்கு சமச்சீராக கலக்கப்பட்ட சத்துக்களுடன் கூடியது—பிரதம தரமுள்ள புரதம், ஜீரணிக்க எளிதான கொழுப்பு மற்றும் கார்போஹைட்ரேட்டுகள், சரியாகக் கலந்துள்ள வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள்.

ஏற்கனவே கொதிக்க வைத்த வெதுவெதுப்பான நீரில் அதைக் கலப்பது எளிது. முன்னாலேயே அதை பசைபோல் தயாரிக்கவேண்டிய அவசியம் இல்லை.

### சிக்கனமானது

டின்னில் அடைக்கப்பட்டுள்ள குழந்தை உணவுகளில் மிகவும் சிக்கனமானது, அமுல் ஸ்ப்ரே. காரணம், அது இந்தியாவின் 'வெண்மைப் புரட்சிக்கு' முன்னோடியான நவீன பால் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டது.

ஆனால் கொதிக்க வைத்த நீர், சுகாதார முறையில் கிருமி நீக்கம் செய்யப்பட்ட பாத்திரங்கள் மற்றும் பால் புட்டிகள் உபயோகித்தலை உறுதி செய்து கொள்ளுங்கள். பால் கலக்கப்படும்போது அதிகம் நீராகி விடுவதை தவிர்ப்பதற்கும், போதுமான ஊட்டச் சத்துக்களை உறுதி செய்வதற்கும் டின்மீது குறிப்பிட்டுள்ள வழிமுறைகளை கவனமாக பின்பற்றுக.




# அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்கு அடுத்ததுதான்.**

### இலவசம்! அமுல் வளர்ப்பு வழி—

இதில் அடக்கியுள்ளவை: கருத்தரித்தல், பேறு காலத்திற்கு முன் கவனிப்பு, பிரசவம், தாய்ப்பால் ஊட்டுதல், வெளியில் கிடைக்கும் உணவு வகைகள், லேசான தானிய உணவு தருதல், குழந்தையின் அன்றாட கடன்கள், குழந்தையின் வளர்ச்சி, நோய்த் தடுப்பு, முதலுதவி, பொதுவான நோய்கள், நோயுற்ற குழந்தையைப் பாதுகாத்தல் தமிழ், இந்தி, மராத்தி, குஜராத்தி, ஆங்கிலம், தெலுங்கு மற்றும் மலையாள மொழிகளில்.

உங்கள் பெயர் மற்றும் முகவரியுடன் ரூ. 1.25 தபால் தலை ஒட்டி எழுதுக இம் முகவரிக்கு: தபால் பெட்டி எண் 10124, பம்பாய் 400 001.



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத் மாநிலம்.

ASP/AS-TAM7/83

அரைக்கால் கப் பட்டாணி, நறுக்கி
1 பெரிய உருளைக்கிழங்கு வேக
1 வெங்காயம் விடவும்.
1 டீஸ்பூன் மிளகாய்த் தூள்,
அரை டீஸ்பூன் கரம் மசாலாத் தூள்,
உப்பு,
கறிவேப்பிலை, கொத்துமல்லி,
அரைத்த இஞ்சி பூண்டு விழுது.

காய்களைப் பொடியாக நறுக்கவும். வாணலியில் நெய் (அ) எண்ணெய் விட்டு காய்ந்ததும் இஞ்சி பூண்டு விழுதைப் போடவும். வாசனை வந்ததும் வெங்காயம் சேர்க்கவும். இலேசாக வதங்கியதும் உப்பு மிளகாய்த் தூள் சேர்த்து வேக வைத்த காய்கறிகளைச் சேர்த்துக் கிளறவும்.

கரம் மசாலாத் தூள் சேர்த்துக் கிளறி அரிந்த கொத்துமல்லி கறிவேப்பிலை சேர்க்கவும்.

தேவையானால் அரை மூடி எலுமிச்சம் பழம் பிழியலாம்.

**செய்முறை:**

மைதாவை ஒரு தாம்பாளத்தில் கொட்டவும்.

ஈஸ்ட்டுடன் உப்பு சர்க்கரை சேர்த்து, சிறிதளவு தண்ணீர் கலந்து ஈஸ்ட் நுரைக்கும் வரை வைத்திருக்கவும்.

ஈஸ்ட் கலந்த தண்ணீரை மாவில் கொட்டி வேண்டிய அளவு தண்ணீர் சேர்த்து மிருதுவான சப்பாத்தி மாவு போல் பிசைந்து கொள்ளவும்.

வெண்ணெ சேர்த்து நன்கு அடித்துப் பிசையவும். ஈரம் பிழிந்த துணியால் மூடி இரட்டிப்பாக உப்ப விடவும்.

மாவை மறுபடியும் அடித்துப் பிசைந்து 16 துண்டுகளாக்கி, ஒவ்வொன்றையும் உள்ளங்கைகளில் வைத்து உருண்டைகளாக்கவும்.

ஒவ்வொரு உருண்டையிலும் நடுவில் கறி வைத்து மூடி நீள வாக்கில் உருட்டி, வெண்ணெ தடவிய தட்டில் வைத்து 350°F சூடுள்ள ஓவன் அடுப்பில் 25 நிமிடங்களுக்கு வேக விடவும்.

தேவையானால் மேல் புறத்தில் அடித்த முட்டையைத் தடவலாம். பளபளவென்றிருக்கும்.

## தேங்காய் நாண் பன்

### தேவையான பொருட்கள்

400 கிராம் மைதாமாவு.
50 கிராம் புதிய ஈஸ்ட் (கெட்டி ஈஸ்ட்),
80 கிராம் பொடித்த சர்க்கரை,
அரை டீஸ்பூன் உப்பு,
50 கிராம் வெண்ணெ.
தேவையான அளவு தண்ணீர்.

**பூர்ணத்திற்கு:**

1 கப் தேங்காய்த் துருவல்,
அரை கப் பொடித்த சேக் துண்டுகள் அல்லது பொடித்த லட்டு,
1 டேபிள் ஸ்பூன் கிஸ்மிஸ் பழம்,
1 டேபிள் ஸ்பூன் முந்திரிப் பருப்பு,
1 டேபிள் ஸ்பூன் டுட்டி புருட்டி பழம்,
கால் டீஸ்பூன் வெனிலா எசென்ஸ்,

**செய்முறை:**

மைதாமாவை பெரிய தாம்பாளத்தில் கொட்டி நடுவில் பள்ளம் செய்யவும்.

ஈஸ்டை சிறிதளவு தண்ணீரில் கரைய விடவும். கரைந்ததும் மாவில் கொட்டி, சப்பாத்தி மாவு பதம் வரும் வரை தண்ணீர் சேர்த்துப் பிசையவும்.

மாவு உருண்டையை மேஜைமேல் போட்டு அடித்துப் பிசையவும். நன்கு பிசைந்து மாவு தளர்ந்ததும் சர்க்கரை சேர்த்து அடித்துப் பிசையவும்.

சர்க்கரை சேர்த்ததும் மாவு தளரும். பின் மேல் மாவு சிறிதளவு சேர்த்துப் பிசைய மறுபடி கெட்டியாகும். கெட்டியானதும் வெண்ணெ சேர்த்துப் பிசையவும்.

முன்பு கூறியபடியே பிசைந்து கடைசியில் உப்பு சேர்க்கவும். மாவு ரப்பர் போல் இடிபடும் வரை சுமார் 10 நிமிடங்கள் அடித்துப் பிசைய வேண்டும்.

மாவின் மேல் சிறுசிறு கொப்புளங்கள் தோன்றும் வரை அடிக்கவும்.

ஈரம் பிழிந்த துணியால் 10 நிமிடம் வரை மூடவும். பின்னர் 4 ஆகப் பிரிக்கவும்.

ஒரு மாவு உருண்டையைக் கட்டையால் வட்டமாகக் கால் அங்குல அகலத்துக்கு சுற்றி வர ஒரு அங்குலம் விட்டு நடுவில் நன்கு கலக்கிய பூரணக் கலவையை வைக்கவும். (பாதியளவு போதும்.) இன்னொரு உருண்டையை கட்டையால் வட்டமாகப் பரப்பவும். இவ்வட்டம் முதல் வட்டத்தை விட, சிறிதாக இருக்கவேண்டும். 2—வது சப்பாத்தியை பூர்ணம் வைத்த சப்பாத்தி மேல் வைத்து அடியிலுள்ள சப்பாத்தி விளிம்பை மேல் சப்பாத்தியின் மேல் மடித்து விடவும். (கொழுக்கட்டை மடிப்பு போல.)

நெய் தடவிய தட்டில் மடிப்பு பாகம் கீழிருக்கும்படியாக பன்னைப் போட்டு மேல் புறத்தில் டுட்டி புருட்டி பழங்களையோ திராட்சைப் பழங்களையோ ஆங்காங்கு அமுக்கி விடவும்.

தேவையானால் முட்டையைத் தடவலாம். 350°F சூடுள்ள அடுப்பில் 25 நிமிடங்களுக்கு வேக விடவும். மேல்பாகம் சிவக்க வேண்டும்.

துண்டுகளாக நறுக்கிப் பரிமாறலாம்.

-சியாமளா சிவராமன்

வண்ணப்படம்: பால்ராஜ்



# ஐந்தாவது மனைவியின் குழந்தை!

**பெற்றோர் தவறுக்குப்பிள்ளை என்ன செய்தது?**

இந்து, கிறிஸ்துவ, பார்ஸியத் திருமணசட்டங்கள் அநேகமாக ஒரேமாதிரிதான் இருக்கும். ஆனால் முகமதியச் சட்டங்கள் பெருமளவுக்கு வேறுபட்டே இருக்கிறது. பழக்க வழக்கங்களாலும், சம்பிரதாயச் சடங்குகளாலும் வேறுபட்ட இந்திய முகமதியச் சட்டங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

முகமதியர்களின் திருமணம் ஒப்பந்த முறையில் நடைபெறுவது தான். வயதுக்கு வந்த இருவர் பரஸ்பரம் சம்மதம் பெற்றுத் திருமணம் செய்து கொள்கிறார்கள். வயதுக்கு வந்த' என்பதற்குப் பதினைந்து வயது முடிதல் என்பதாக அர்த்தம் கொள்கிறார்கள்.

பதினைந்து வயது முடிந்த ஆணும், பெண்ணும் திருமணம் செய்து கொள்ளலாம். இந்து சம்பிரதாயத் திருமணத்திலே 'சப்தபதி' முடித்த திருமணமே செல்லுபடியான திருமணம் என்று வைத்திருக்கிறார்கள் அல்லவா? அதேபோல 'மஹர்' கொடுத்த திருமணமே முகமதியச் சட்டப்படி செல்லுபடியான திருமணமாகும்.

**'மஹர்' என்றால்...**

வரதட்சணைக் கொடுமைகளைப் பற்றி இந்துக்களிடையே அதிகம் அடிபடுகிறது. இதனுடைய மறுவிவகாரம் தான் 'மஹர்'. அதாவது மணப்பெண்ணிற்கு நான் இவ்வளவு மஹர்' கொடுக்கிறேன்' என்று நிச்சயிக்கப்படும். அப்படி மணமகளுக்கு மணமகன் கொடுக்கும் பணமே 'மஹர்' என்பது.

## ஆயிரம் கிளைகளைத் திறந்த அபூர்வ சிந்தாமணி!

மக்களின் வாழ்க்கையில், சில சாதனைகளில், சில நிறுவனங்களில் ஒரு குறிப்பிட்ட காலம் சிறப்புப் பெறுகிறது. ஒருவருக்கு அறுபது வயது நிரம்பும்போது சஷ்டியப்த பூர்த்தி கொண்டாடுகிறோம். திரைப்படத்தின் நூறாவது நாள், கிரிக்கெட்டில் நூறு ரன், ஒரு நிறுவனத்தின் வெள்ளிவிழா எனப் பெருமைப்படத் தக்க நிகழ்ச்சிகள் உண்டு. அதேபோல ஒரு வங்கி ஆயிரம் கிளைகளைத் திறந்து மக்களுக்கு சேவை செய்திருக்கிறது என்றால் சிறப்புதானே! சமீபத்தில் ஐ.ஓ.பி. அந்த வகையில் ஆயிரமாவதுகிளையை சென்னை ஆயிரம் விளக்குப் பகுதியில் திறந்து பெருமை கொண்டது.



அது எவ்வளவு? இவ்வளவுதான் கொடுக்க வேண்டும் என்று நியதியில்லை. பிள்ளையின் வருமானத்திற்கும் அந்தஸ்திற்கும் ஏற்ப உயரும், குறையும்.

### மஹர் முக்கியத்துவம் வாய்ந்தது

திருமணமான முகமதியர்களின்வாழ்க்கையில் மஹர் மிகவும் முக்கியமானது. நிச்சயிக்கப்பட்ட மஹரைக் கொடுக்கவில்லையென்றால் நீதிமன்றத்தில் கேட்டு வாங்கக் கூடப் பெண்ணிற்கு உரிமையுண்டு. மஹர் கொடுக்கப்படாத திருமணம் முகமதியச் சட்டப்படி செல்லுபடியாகாத திருமணமாகவே கருதப்படும்.

### சரி, முகமதியத் திருமணத்திற்குத் தகுதியானவர்கள்...

1. திருமணம் செய்து கொள்ளும் இருவரும் வயது வந்தவர்களாக இருக்கவேண்டும். அதாவது பதினைந்து வயது முடிந்தவர்களாக இருக்க வேண்டும்.

2. திருமணம் செய்து கொள்ளும் இருவரும் சுயநினைவுடன், புத்திசுவாதீனத்துடன் இருக்க வேண்டும்.

3. நிச்சயம் பற்றிப் பேசுவதும், திருமணத்தின் ஒப்புதலும் ஒரே சந்திப்பில் முடிவதாக இருக்க வேண்டும். ஷியாஸ்' என்ற உட்பிரிவில் இருப்பவர்களுக்குச் சாட்சிகள் தேவையில்லை. ஆனால் சுன்னிஸ்' என்ற பிரிவில் இருப்பவர்கள் திருமண நிச்சயத்திற்கு இரண்டு ஆண் சாட்சிகள் இருக்க வேண்டும் என்று கூறுகிறார்கள்

4. தடை செய்யப்பட்ட உறவு முறைகளில்திருமணம்செய்து கொள்ளக்கூடாது. தாய், மகன், சகோதர சகோதரிகள், மாமன் மருமகன், அத்தை மருமான் இவை போன்றவை தடை செய்யப்பட்ட உறவுகளாகக் கருதப்படும்.

5. ஏற்கெனவே நான்கு மனைவிகளை மணந்தவராக இருந்தால், ஐந்தாவது திருமணம் சட்டப்படி முறையாகாது.

6. மனைவியின் சகோதரி (அ) அத்தை போன்ற தடைசெய்யப்பட்ட உறவுகளிலும் மணமகன் திருமணம் செய்து கொள்ளக் கூடாது.

இவை தவிரவும் முகமதியர்களிடையே இருக்கும் நான்கு வகை பிரிவுகளுக்கும் சிறிய சிறிய சம்பிரதாயச் சட்டங்கள் உண்டு.

### நான்கு முறை திருமணம்

முகமதியச் சட்டப்படி ஒரு முகமதியர் நான்கு பெண்களைத் திருமணம் செய்து கொள்ளலாம். ஐந்தாவது மணமே சட்டப்படி செல்லுபடியாகாத திருமணமாகிறது.

ஆனால் நான்கு மனைவிகளில் ஒருவரை விவாகரத்து செய்துவிட்டு மீண்டும் திருமணம்செய்துகொண்டால்அதுசட்டப்படி செல்லுபடியான திருமணமாகும்.

### தலாக்... தலாக்... தலாக்...

இந்த வார்த்தை முகமதியர்களுக்கு மிக முக்கியமானது. ஒரு மனைவியைப் பார்த்து அவள் கணவன் 'தலாக்' என்ற வார்த்தையை மூன்றுமுறை சொல்லிவிட்டால் அவளை விவாகரத்து செய்து விட்டதாக அர்த்தம்.

### விதவா விவாகங்கள்:

முகமதியர்களிடையே கணவன் இறந்த பிறகு மறுமணம் செய்து கொள்வதை ஆதரிக்கிறார்கள். ஆனால் அதற்குவைத்திருக்கும் சில சட்ட திட்டங்கள் மிக அற்புதமானவை.

ஒரு மனைவிக்குத்தன் கணவன் இறந்தபிறகு நான்கு மாதங்களும், பத்து நாட்களுக்குள் இறந்த அவளுடைய கணவனால் அவள்வயிற்றில் கரு ஜனித்திருக்கிறதா என்று தெரிந்து விடும்.

அதேபோலவிவாகரத்துசெய்து கொண்ட முகமதிய பெண்ணும் மூன்று மாதங்கள் வரைமறுமணம் செய்து கொள்ளக்கூடாது. மூன்று மாதங்களும் மாதவிலக்கு வரப் பெற்று அவள் கர்ப்பமில்லை என்றுதெரிந்து கொண்ட பிறகு செய்து கொள்ளப்படும் திருமணமே சட்டப்படி செல்லுபடியாகும்.

இப்படி சில நெறிமுறைகளைப் பெண்கள் கடைபிடிப்பதை இத்தாத்' என்றுகுறிப்பிடுகிறார்கள். இந்த இத்தாத்' கடைப்பிடிக்கும் பெண்ணை ஒரு முகமதியர் திருமணம்செய்து கொண்டால் அந்தத் திருமணம் சட்டப்படி செல்லுபடியாகாது.

### ஐந்தாவது மனைவியின் குழந்தை

ஒரு முகமதியர் நான்கு பெண்களையே திருமணம் செய்து கொள்ளலாம் என்றிருக்கிறது. ஐந்தாவது பெண்ணை மணப்பது சட்டப்படி செல்லுபடியாகாது. அவளுக்குத் தன் கணவனின் சொத்திலோ, வேறு எந்த விதத்திலோ பாத்தியதை கிடையாது.

ஆனால் பெரியவர்கள் செய்ததவற்றிற்கு குழந்தைகள் எப்படிப் பொறுப்பாவார்கள்? இந்த அடிப்படையில் இந்துத் திருமணச் சட்டத்தில் இரண்டாவது மனைவியின் குழந்தைகளுக்குச் சொத்துரிமை கொடுத்திருப்பது போலவே முகமதியச் சட்டத்திலும் ஐந்தாவது மனைவியின் குழந்தைகளுக்கும் சொத்துரிமை கொடுக்கப்பட்டுள்ளது.

**டி. ஆர். ரமேஷ்**

ஒலிம்பிக்ஸில் இந்தியாவின் தோல்விகள் ஓரளவு எதிர்பார்த்ததுதான். ஆனால் பி. டி. உஷா நூலிழையில் பதக்கம் பெறத் தவறியது துரதிர்ஷ்டமான செய்தி. அடுத்த ஒலிம்பிக்ஸ் தென் கொரியத் தலைநகரான ஸியோலில் நடக்கவிருக்கிறது. அதற்குள் விளையாட்டு அரங்கிலிருந்து அரசியல் ஆதிக்கத்தை நீக்கி உஷா போன்ற வீராங்கனைகளுக்கு தக்க ஊக்கம் கிடைக்கச் செய்ய வேண்டும். இல்லாவிட்டால் தோல்விகள் தொடரும்.

இனி தேர்தல் முடியும் வரை அரசியல் தான் பெரிய செய்தியாக இந்தியப் பத்திரிகைகளில் அடிபடும். ஐந்து வருடங்களுக்கு ஒருமுறை பார்லிமெண்ட் தேர்தல் நடந்தாக வேண்டும். 1980 ஜனவரி முதல் தேதி இந்திராகாந்தி பார்லிமெண்ட் தேர்த

# செய்தி மலர்

லில் வென்று 1977–ல் ஜனதாவிடம் இழந்த பதவியை மீட்டுக் கொண்டார்

இம்முறை அவரது வெற்றி அத்தனை பெரிதாக இருக்காது என்றாலும், தோல்வி இல்லை என்பது நிச்சயம். லோக்சபையில் 425 இடங்களில் குறைந்தபட்சம் 350 இடங்களாவது பெற்று உறுதியான மெஜாரிட்டியைப் பெற்று விடுவார் என்று அனுமானிக்கப்படுகிறது.

இதற்கு முக்கியக் காரணம் எதிர்க்கட்சிகளின் பலவீனம். ஜனதா கட்சி பரவலாகப் பிரிந்து மிகவும் குறுகிப் போய் விட்டது. சந்திரசேகர் தலைமையில் கட்சியின் செல்வாக்கு மங்கிக் கொண்டே வருகிறது.

ஜனதாவிலிருந்து பிரிந்தவர்களில் முக்கியமானவர் லோக்தளக் கட்சித் தலைவர் சரண்சிங்கும், பாரதியஜனதா கட்சித் தலைவர் வாஜ்பாயியுமாவர். இருவருக்கும் சொந்த அளவில் பெரும் செல்வாக்கு உண்டு. ஆனால் இவர்கள் சேர்ந்து கூட்டாக அமைத்துள்ள தேசிய ஜனநாயகக் கூட்டணி வளருவதற்கும் வாய்ப்பில்லாமல் இருக்கிறது. கூட்டணிக் கட்சிகளுக்கிடையே உள்ள கொள்கை வேறுபாடு, தலைவர்களிடையே சுமுகமின்மை இரண்டும் காரணங்கள்.

இடையில் இந்திராகாந்தியின் மருமகள் மேனகாகாந்தியின் ராஷ்ட்ரீய விசார் மஞ்ச் உத்தரப்பிரதேசத்தில் அதிகச் செல்வாக்குப் பெற்று வருகிறது. குறிப்பாக ராஜீவ்காந்தி போட்டியிடவிருக்கும் அமேதி தொகுதியில் மேனகா காந்தியும் போட்டியிட



விருக்கிறார். ராஜீவ்காந்தியைத்தோற்கடித்து விடுவார் என்று சொல்கிறார்கள்.

காஷ்மீரில் இந்திராகாந்தி மக்களின் அபிமானத்தைப் பெற்றுள்ள பரூக் அப்துல்லாவை நீக்கிவிட்டு ஜி. எம். ஷாவை முதல்வராக்கி விட்டதுபெரும் சர்ச்சைக்குள்ளாகி இருக்கிறது. பரூக் முன்னாள் முதல்வர் ஷேக் அப்துல்லாவின் மகன். ஜி. எம். ஷா வீட்டு மருமகன். ஷேக் அப்துல்லாவின்மனைவி மகன் சார்பிலும் மகள்- கணவன் சார்பிலும் கட்சி பிரிந்திருக்கிறார்கள். பரூக்கின் தம்பி எதிர்த்தரப்பில் சேர்ந்துள்ளார்.

இத்தனைக்கும் காஷ்மீரில் கட்சி மாறுவதைத் தடை செய்யும் சட்டம் இருக்கிறது. பரூக்கின் ஆதரவாள

ரான சபாநாயகர் கட்சி மாறிவைக்க உறுப்பினர் தகுதியை இழந்து விட்டார்கள் என்று சொல்லி புதியமந்திரி சபையை செல்லாது என்று சொல்லி விட்டார். ஆனால் ஹைகோர்ட்டு ஜெட்ஜ் ஒருவர் கட்சி இரண்டாகப் பிரிவது கட்சி மாற்றம் இல்லை என்று சொல்லி புதிய அரசு செல்லும் என்று தீர்ப்பளித்திருக்கிறார்.

இந்த நாடகத்தின் சூத்திரதாரி இந்திராகாந்தியினால் புதிதாக நியமிக்கப்பட்டுள்ள கவர்னர் ஜக்மோகன் ஆவார். இதற்குமுன் இருந்த கவர்னர் பி. கே. நேரு இந்த அரசியல் தில்லுமுல்லுக்கு உடந்தையாக இருக்க



மறுத்து விட்டதால் அவரைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டார் பிரதமர்.

ஆந்திராவில் புதிய டிராமா ஒன்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. முதல்வர் என். டி. ராமராவை காஷ்மீர் பாணியில் பதவி கடத்தி விட்டார்கள். ஆனால் பதவியில் உள்ள என். டி. ஆரை விட பதவி கடத்தப்பட்ட என். டி. ஆரின் செல்வாக்கும், பலமும் பல மடங்கு என்பதை அடுத்து நிகழ்ந்த சம்பவங்கள் காண்பித்து விட்டன. என். டி. ஆரை மையமாக வைத்து எதிர்க்கட்சிகள் அனைத்தும் ஒரே அணியாகச் சேர்ந்துள்ளன.

பஞ்சாபில் அமிர்தசரஸ் கோயிலில் ராணுவ நடவடிக்கையினால் சேதமடைந்த பகுதிகளை பழுது பார்க்க இந்திராகாந்தியின் ஆதரவாளரான ஒரு சீக்கியத்தலைவர் முன்வந்து 'கர் சேவா' என்னும்பணியைத் துவக்கியுள்ளார்.

பக்தர்கள் தாமே செங்கல் எடுத்து வந்து கோயில் கட்டிடப்பணிக்கு உதவுவதற்குப் பெயர் 'கர் சேவா'!

இதற்கு அனுமதி தர மறுத்து: அகாலிதள சீக்கிய குருத்வாரா பிரபந்தக் கமிட்டி ''ஹூகன்னுமா' பிரகடனம் செய்தது. அதுபற்றி லட்சியமே செய்யாமல் தனது 'கர் சேவா'வைத் தொடர்ந்து இந்திய ராணுவ உதவியுடன் செய்து வருகிறார் பாபா சாந்தாசிங்.

இனி என்ன செய்வது என்று புரியாமல் திகைத்து நிற்கிறது அகாலி தலைமை. பஞ்சாபில் தேர்தல் நடந்தால் சீக்கியர் எதிர்த்து ஓட்டுப் போட்டாலும் இந்துக்கள் மற்றும் சீக்கியர்களில் ஒரு பகுதியினரின் ஓட்டுக்களைப் பெற்று வெற்றி விடும். ஆனால் தீவிரவாதிகளின் தொல்லை நீடித்த தலைவலியாக இருக்கும்.

இலங்கையில் தமிழ் தீவிரவாதிகளின் நடவடிக்கை உச்சகட்டத்தை எட்டியதின் விளைவாக சென்னையில் விமான நிலையத்தில் குண்டு வெடித்து பெரும் சேதமேற்பட்டது. அந்த குண்டுகள் கொழும்பு விமான நிலையத்தில் வெடிப்பதற்காக நேரம் குறித்து வைக்கப்பட்டதாம். விமானம் தாமதமாகப் புறப்பட்டதால் குறித்தநேரத்தில் சென்னை விமான நிலையத்திலேயே வெடித்து விட்டது. நாற்பது பேர் உயிரிழந்தார்கள். இவர்களில் 24 பேர் இலங்கை பிரஜைகள்.

இதைத் தொடர்ந்து தமிழர்வாழும் யாழ்ப்பாணப் பகுதியில் இலங்கை ராணுவக் கடற்படைகள் தீவிரவாதிகளை வேட்டையாடி நூற்றுக்கணக்கான பேர் கொல்லப்பட்டனர். ஏராளமான அகதிகள் இந்தியாவுக்கு ஓடி வந்து கொண்டிருக்கிறார்கள்.

இனி பேச்சு வார்த்தைகளினால் இலங்கைத் தமிழர் பிரச்சினைக்குத் தீர்வு காண வழியில்லை என்பது தெளிவு. இந்திய அரசு நேரடியாகத் தலையிட்டு இலங்கைத் தமிழர்களின் உடைமைகளையும் உயிரையும் பாதுகாக்க ஏதாவது செய்ய வேண்டும்.

-ரங்கஸ்ரீ

புதியது

# பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

# அதிக சுவையானது அதிக முழுமையானது




**நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும் உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரணசக்திக்கென முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. ஒவ்வொரு கவளத்திலும் அதிக முழுமையான திட உணவு.

CLARION/B/GX/3/203 Tml

# திருமண மலர்

## மணமகள் தேவை

இருதய நோயினால் மணவாழ்க்கையில் நிரம்ப விதிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டிய இந்து நாயுடு வகுப்பைச் சேர்ந்த வாலிபர் 30 வயது இன்ஜினியர் ரூ. 2200/- சம்பளம் வாங்குபவருக்கு தியாக மனப்பான்மையுள்ள எளிய, ஏழை மணமகள் தேவை. உடலில் குறையுள்ளவர்களோ, ஊமை, விதவை கூட ஜாதகத்துடன் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1530.

எம். ஏ. படித்த வேலையில் உள்ள இவர் பிராமணப் பையனுக்கு சென்னையில் வேலையில் உள்ள ஐயர் பெண் தேவை. பையனின் நட்சத்திரம் பூராடம். தனுர் ராசி. வடமாள், வயது 29. வரதட்சிணை தேவையில்லை. பெட்டி எண்: 1531.

46 வயதான மாதம் ரூ. 2500- வருமானம் உள்ள வசதி படைத்த திடகாத்திரமான இந்து மணமகனுக்கு பிராமண ஜாதியில் சம்மதம், வீட்டு வேலைகள் தெரிந்த ஏழை குடும்பத்தில் நல்ல அழகான மணமகள் தேவை. படிப்பு அதிகம் தேவையில்லை. குழந்தைகள் இல்லாத விதவையானாலும் சம்மதம். வயது 35-க்குள் இருக்க வேண்டும். நகைகள் சீதனம் தேவையில்லை. போட்டோ ஜாதகத்துடன் பதில் எழுத வேண்டியது. பெட்டி எண்: 1532.

Proposal invited from affluent Vadama Graduate tall girl for Haritha 25 years 167 cms. well employed graduate decent family. Box No: 1533.

ஸ்ரீவத்ஸ கோத்திரம், வடகலை, பூரம் வயது 26 Clerk Bhel, Trichy, சம்பளம் ரூ.1400-, உயரம் 6' உள்ள மணமகனுக்கு, நல்ல உத்தியோகத்தில் உள்ள அழகான மணமகள் தேவை. பெற்றோர்கள் ஜாதகம், போட்டோவுடன் (விருப்பப்பட்டால்) விண்ணப்பிக்கவும்." பெட்டி எண்: 1534.

Tamil Smartha Brahmin boy 29, Post-graduate, 170 cms., tall, fair, good personality, employed Multinational firm, income over Rs. 2100/- seeks suitable Bride. Box No: 1535.

கௌசிக கோத்திரம், எஸ். எஸ். எல். சி. தமிழக அரசு வேலையில் ரூ. 1100- சம்பாதிக்கும் 42 வயதுள்ள பிள்ளைக்கு அரசாங்க வேலையிலுள்ள எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்த வடமா பிரிவை மட்டும் சேர்ந்த பர்சனாலிடியான சிகப்பு நிறமுள்ள பெண் தேவை. ஜாதகத்துடன் எழுதுக. பெட்டி எண்: 1536.

தஞ்சை ஜில்லாவிலுள்ள செல்வந்தர் (60 வயது) ஒருவருக்கு படிப்பும், ஓரளவு சங்கீத ஞானமும் உள்ள துணைவி (Companion) ஒருவர் தேவை. குழந்தைகளற்ற விதவைகளும், விவாகரத்து செய்தவர்களும், ஆதரவற்றவர்களும் விண்ணப்பிக்கலாம். எந்த ஜாதிமதமாகவும் இருக்கலாம். பெட்டி எண்: 1537.

Alliance for graduate teacher, Hindu, 36 widower with two children (Age 11 and 9)

திருமணமலர்ப் பகுதியில் விளம்பரம் செய்ய கட்டணம் ரூ. 30/- தொகையை 'மங்கையர் மலர்' என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பவேண்டும். ஒரு விளம்பரத்தில் ஒருவருக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். பதில் அனுப்புபவர்கள் "விளம்பரதாரர், பெட்டி எண்.... c/o மங்கையர் மலர், கிண்டி, சென்னை-600032 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.

Graduate, religious minded and affectionate Hindu girl preferred. Box No: 1538.

மின் வாரியப் பொறியாளருக்கு 26/160, ஜாதிப் பற்றற்ற நடுத்தர வகுப்பைச் சேர்ந்த நற்குணம் மிக்க, அழகிய, எளிமையை விரும்பும், சேவை மனம் கொண்ட 22 வயதிற்குள்ளான பட்டதாரித் தமிழ் நங்கை தேவை. பெட்டி எண்: 1539.

ஆதி திராவிடர் இளம் எம். பி. பி. எஸ். டாக்டர் வசதியான குடும்பம் வயது 28.

சிவந்த நிறம், உயரம் 6 அடி உடைய மணமகனுக்கு அதே இனம் அல்லது பரந்த நோக்குமுள்ள வேறு இனத்தைச் சேர்ந்த 25 வயதுக்குள் உள்ள வசதியுள்ள எம்.பி.பி.எஸ். பெண் டாக்டர் போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1540.

ஸ்ரீவத்ஸ கோத்திரம் தென்கலை ஐயங்கார் வங்கியில் வேலையாக உள்ள 35 வயது பட்டதாரிப் பையனுக்கு தகுந்த கண்ணியமான குடும்பத்திலிருந்து நல்ல வரன் தேவை. வடகலை தடையில்லை. வேலைக்குச் செல்லும் பெண்கள் உசிதம். பெட்டி எண்: 1541.

எம். எஸ். ஸி. 23 வயதுள்ள இந்து – அகமுடைய முதலியார் – யாதவர் கலப்பு மணத்தில் பிறந்துள்ள வசதியுள்ள மணமகனுக்கு தகுந்த குடும்பப்பாங்கான அழகான பெண் தேவை. மற்றவைகள் முக்கியத்துவம் இல்லை. புகைப்படத்துடன் விண்ணப்பிக்கவும். உடன் திருமணம். பெட்டி எண்: 1542.

Wanted beautiful graduate bride below 25 for Cholia Vellala groom handsome 31, postgraduate employed in a very reputed company's Coimbatore branch drawing Rs. 2000/- bride from Coimbatore district preferred, immediate marriage, please contact with Bride's photograph. Box No: 1543.

Wanted Non-Kaundinya graduate bride preferably employed for a boy 31/167 cms (suddha Jathakam) working in a reputed firm in Cochin drawing a four figure salary - send Horoscope details to Box No: 1544.

வயது 32, பிள்ளை, உயரம் 180 செ. மீ. தனியார் நிறுவனத்தில் ஸ்டோர் கீப்பர் பதவி. சொந்த வீடும் ரூ. 1000–/ மாத வருமானமும் கொண்ட வரனுக்கு படித்த அழகும் பண்பும் கொண்ட கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த இந்துப் பெண் தேவை. ஜாதி பேதமில்லை. போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1545.

மத்வ கன்னட வகுப்பு, விஸ்வாமித்திர கோத்திரம் வயது 33. பூராட நட்சத்திரம் படிப்பு எஸ். எஸ். எல். ஸி. மின் வாரியத்தில் அஸிஸ்டெண்டாகப் பணிபுரியும் வரனுக்கு, அதே வகுப்பைச் சேர்ந்த அரசாங்க அலுவலகத்திலோ அல்லது பள்ளியில் ஆசிரியையாகவோ நிரந்தரமான வேலையில் உள்ள குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகம் இல்லை. பெட்டி எண்: 1546.

தமிழ்நாடு அரசுப் பணியில் மாதம் ரூ.1000 சம்பளம் பெறும் 32 வயதுள்ள மருத்துவகுலப் பட்டதாரி இளைஞருக்கு படித்த அழகிய 5 அடிஉயரமுள்ள மணமகள் தேவை. வரதட்சிணை இடையாது. அரசில் பணிபுரியும் பெண்களும் விண்ணப்பிக்கலாம். மதுரை மாவட்டத்தில் வசிப்பவர்களாயிருப்பின் நல்லது. பிற மாவட்டத்தைச் சேர்ந்தவர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1547.

பாரத்வாஜ கோத்திரம், அசுவதி நட்சத்திரம் அய்யர், வடமாள், 37 வயது சென்னையில் மத்திய அரசு அலுவலகத்தில் ரூ. 1300– மாதச் சம்பளத்தில் உள்ள பையனுக்கு அய்யர், எஸ். எஸ். எல். ஸி. படித்து வேலைக்குப் போகாத குடும்பப்பாங்கான, அடக்கமான மணமகள் தேவை. பையனுக்கு உடம்பில் லூகோடர்மா உள்ளது. வரதட்சிணை கிடையாது. சிக்கனத் திருமணம். ஜாதகம் குடும்ப விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1548.

26 வயது; 5' 3'', சம்பளம் 1500– சொத்துள்ள வங்கியில் பணியாற்றும் அழகான பட்டதாரி வாலிபருக்கு தேசிய மயமாக்கப்பட்ட வங்கியிலோ, மத்திய அரசாங்கத்திலோ (மாற்றல் வசதியுள்ள) பணியாற்றும் அழகான இந்துமத மணமகள் தேவை. சிக்கனத் திருமணத்துக்குச் சம்மதம். தகப்பனார் பிராமணர்; தாயார் பிராமணரல்லாதார். சாதி முக்கியமல்ல. பெட்டி எண்: 1549.

Alliance for Vadama Bharadwaja, widower no child, 34 years, Swathi, 165 cms., C. A., smart, good looking Executive in Oil Corporation, Bombay, drawing 3500/- p. m. from a well to do respectable family Non-working, graduate fair & good looking girls 25 to 28 years reply with horoscope to Box No: 1550.

முதலியார் வகுப்பைச் சேர்ந்த நிரந்தர உத்தியோகத்தில் இருக்கும் 27 வயது மணமகனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த மணமகள் தேவை. மணமகனின் மாத வருமானம் ரூ. 550/– சொத்து உண்டு. லேசாக காதுகேளாது. வரதட்சிணை சீர் தேவையில்லை. மணமகள் வேலையில் இருந்தால் உத்தமம். தொடர்பு கொள்க. பெட்டி எண்: 1551.

Karkathar Saiva vellala Pillai 29 years Bank Officer, cityemployed sevvoyDosham seeks alliance from educated employed brides or from well to do educated family in same caste. Reply with horoscope. Box No: 1552.

Alliance from beautiful girls upto 32 for Tamil Brahmin (Iyer) boy 33/164, Wheatish, slim, handsome, divorcee without encumbrance, graduate, employed in Nationalised firm, decent salary. Any brahmin (any language and province)/ any economic status/widows/divorcees no bar. If employed should be transferable. Send details including extra-talent like dance, veena or music if any and photograph (returnable) Box No: 1553.

Alliance invited from beautiful Non-Kousika Vadakalai Iyengargirls for handsome graduate CAIIB Bank Employee drawing Rs. 1500/- p.m. Sathayam. 28/170 cms. Bank Employed preferred, give details to Box No: 1554.

சேனைக்குடையார் வயது 42, உயரம் 168செ.மீ. விவாக ரத்து செய்து விட்டவர், குழந்தைகள் இடையாது, சைவம், துர்ப்பழக்கங்கள் இல்லாதவர், சொந்த வீடும், மாத வருமானம் 1500/– உடையவருக்கு, இந்து மதத்தைச் சேர்ந்த, கௌரவ மிக்க குடும்பத்திலிருந்து, சுமாரான அழகுடைய, குறைந்தபட்சம் எஸ். எஸ். எல். ஸி. வரை படித்த,

புத்திசாலியான, குடும்பப் பொறுப்புள்ள, 30வயதுக் குட்பட்ட, 162 செ. மீட்டருக்கு மேல் உயரமுள்ள தேக ஆரோக்கியமுள்ள நற்குணமுடைய மணமகள் தேவை. குடும்பப் பொருளாதார நிலைபற்றி அக்கறையில்லை. ஜாதகத்தின் நகல் (அவசியம்) புகைப்படம், குடும்ப விவரம், ஜாதி குறிப்பிட்டு எழுதவும். பெட்டி எண்: 1555.

வடமாள், நைத்திருவகாசியபகோத்திரம் 29வயது. மத்திய பிரதேச சர்க்காரில் சுமார் ரூ. 1200— சம்பளம் வாங்கும் பையனுக்கு மாற்றலாகிவரக் கூடிய உத்தியோகத்தில் உள்ள அழகான பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1556.

வடமாள் நைத்திருவ காசியப கோத்திரம் 26 வயது. தேசிய மயமாகிய பாங்கில் மகாராஷ்டிர பிரதேசத்தில் வேலை பார்க்கும் பையனுக்கு குடும்பத்தை நன்றாக நிர்வகிக்கக் கூடிய அழகான பெண் தேவை. அல்லது மாற்றலாகி வரக்கூடிய உத்தியோகத்தில் உள்ள பெண் இருந்தாலும் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1557.

கர்க கோத்திரம், வடமாள் 48 வயது ரூ. 800, மாத வருமானமுள்ள பாலக்காட்டு பிராமண வகுப்பைச் சேர்ந்த மணமகனுக்குப் படித்த வேலையில் இருக்கும் பெண் தேவை. பெண்ணிற்கு வயது 35—க்குமேல் 42க்குள் இருக்க வேண்டும். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1558.

மனைவியை இழந்த தனித்த 65 வயதுள்ள, திட ஆரோக்கியமான, ஓய்வு பெற்ற மத்திய அரசாங்க ஆபிசருக்கு (பென்சன் 1200 மற்றும் இதர சொத்துக்கள்) 50—55 வயதுள்ள உடல்நலக் குறைவில்லாத தனித்த பிராம்மண விதவை/விவாகரத்தான பெண்மணி வாழ்க்கைத் துணைவியாகத் தேவை. பெட்டி எண்: 1559.

கௌசிக கோத்திரம், வடமாள் 29 வயது அவிட்டம் Diploma in Automobile Engineering செவ்வாய் தோஷம் உடைய தனியார் நிறுவனத்தில் மாதம் ரூ. 1200 சம்பளம் வாங்கும் பையனுக்கு வேலைக்குச் செல்லும் பெண் தேவை. பெட்டி எண்: 1560.

தென்கலை ஐயங்கார், ஆத்ரேயம், ஆயில்யம், வயது 37, உயரம் 5.5" படிப்பு எஸ். எஸ். எல். சி. சம்பளம் 1500/— பெருங்களத்தூர் ஸ்டாண்டர்டு மோட்டார் தொழிற்சாலையில் சீனியர் எழுத்தராகப் பணிபுரியும் வசதியுள்ள வரனுக்கு நல்ல படிப்பும் நல்ல உத்தியோகத்திலுள்ள, குடும்பப்பாங்கான, மணமகள் தேவை. ஜாதகத்துடன் வடகலையும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1561.

ஸ்ரீவத்ஸ கோத்திரம், ரோகிணி நட்சத்திரம் (சுத்த ஜாதகம்) மத்திய அரசு நிறுவனத்தில் ரூ. 1200—க்கு மேல் மாதச் சம்பளம் வாங்கும் சொத்துள்ள தென்கலை ஐயங்கார் வரனுக்கு வயது 34, உயரம் 5' 3" வேலையில் இருக்கும் பெண் தேவை. வடகலை பாதகமில்லை. பெட்டி எண்: 1562.

சென்னையில் பப்ளிக் லிமிடெட் கம்பெனியில் மானேஜராக உள்ள மாதம் ரூ. 1200 சம்பளம் பெறும் சோழிய வெள்ளாள பிள்ளை வகுப்பு 28 வயது 5' 8" மாநிறம் வசதியுள்ள பட்டதாரி மணமகனுக்கு அழகான, படித்த, வசதியுள்ள மணமகள் தேவை. ஜாதகம் புகைப்படத்துடன் முழு விபரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1563.

Alliance invited from Tamil Iyer girls age 27 - 33, good-looking, and healthy for 38 years, 170 cms Vatthima Srivatsa graduate boy,own business with Rs. 2000-3000 monthly income. Sub-sects acceptable. please reply with horoscope, photograph and family particulars to Box No: 1564.

குஜராத் மாநிலத்தில் தனியார் நிறுவனத்தில் நிரந்தர வேலையில் ரூ. 1150/— சம்பளத்தில் உள்ள திருநெல்வேலி ஜில்லா, மூப்பனூர், முதலியார் (சேனைத் தலைவர்), பையனுக்கு படித்த, நல்ல குணமும், அழகும், முற்போக்கு எண்ணமும் உள்ள பெண் தேவை. போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். இந்து மதத்தில் எப்பிரிவும் சம்மதம். பெட்டி எண்: 1565.

Invited horoscope from Non-Athreya good-looking Iyer brides domestically trained for widower, 37, Uttaram having two girls (7, 2) ownership house and Rs .3000/ -income in Bombay. Box No:1566

Bride for handsome, affluent, well-qualifiedTelugu Brahmin,31/ 2500, company Executive - slight defect in one hand (not obvious) - language no bar - Vegetarian, doctor/Nurse preferred - No demands. reply Box No: 1567.

கபி கோத்திரம், பிரஹசரணம், ஐயர், உத்திராடம் நட்சத்திரம், பெண்ணுக்கு வயது 27, எஸ். எஸ். எல். சி பாஸ் செய்து, தையல் ஹையர் கிரேடும் பாஸ் செய்துள்ளாள். வேலைக்குச் செல்லவில்லை. ஆனால் குடும்ப காரியங்கள் நன்கு அறிந்தவள். வயது 29 முதல் 37 வரையிலான மணமகன் தேவை. உட்பிரிவு சம்மதம், நான்காவது பெண் என்ற காரணத்தினால் திருமணம் எளிய முறையில் நடத்த விருப்பம். பெற்றோர்கள் வயதானவர்கள் என்ற காரணத்தினாலும், வீட்டில் மணப்பெண்ணுக்கு அண்ணா மட்டும் சம்பாதிப்பதாலும், திருமணத்தை விரைவில் நடத்துகிறோம். சொந்த ஊர் "விஷ்ணம் பேட்டை" திருக்காட்டுப்பள்ளி (தஞ்சாவூர் மாவட்டம்), ஆனால் 1946—ல் இருந்து சென்னை நகரில் இருக்கிறோம். பெண்ணுக்கு மற்ற மூன்று அக்காவிற்கும், ஒரே அண்ணாவுக்கும் திருமணம் ஆகிவிட்டது. பெட்டி எண்1568.

நல்ல ஒழுக்கம், குணம், நிறம், தோற்றம், குடும்ப பாரம்பரியம் உள்ள இந்து வியாபாரி நாடார் எம். பி. பி. எஸ் டாக்டருக்கு நிறமும் மிகுந்த அழகுமுள்ள எம். பி. பி. எஸ். அல்லது வசதியான பட்டதாரி மணமகள் தேவை. விளம்பரம் நேரடியான தொடர்பிற்காகவே. தபால் பெட்டி எண்: 59, இராஜபாளையம்—626 117.

நாற்பது வயது நிரம்பிய தனியார் தொழில் நிர்வாகியும், சொத்து வசதி படைத்தவருமான தாரமிழந்தவருக்கு குரும்ப கவுண்டர் இனத்தைச் சேர்ந்த பெண்களோ அல்லது வேறு எந்த இந்துப் பெண்மணிகளோ விண்ணப்பிக்கலாம். மணமகள் பட்டதாரியாக இருக்க வேண்டும். கணவரின் முதல் தாரக் குழந்தைகளைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்று தொழில் நிர்வாகத்திற்கு உதவவும் முன்வரவேண்டும். தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: என். ஆர். கிருஷ்ணமூர்த்தி, எண்:1, சத்தியமூர்த்தி தெரு, ஸ்ரீரங்கம், திருச்சி—6.

Parry's

வழங்கும்

புத்தம் புது சுவை ததும்பும்




# பிஸ்லி

## மில்கின் பிஸ்கட்டுகள்

பழம்பெரும் பாரி நிறுவனம்
தன் பிஸ்கட் தொடர்புகளை
புதுப்பித்து வழங்கும் புது சுவை
பிஸ்லி மில்கின் பிஸ்கட்

பிஸ்லி மில்கின் பிஸ்கட்டுகளில்
பாலின் நறுமணமும், பசுமை
கோதுமையின் புரதச் சத்தும்
செவ்வனச் செறிந்திணைந்து சுவை
அளிக்கின்றன.

பிஸ்லி மில்கின் பிஸ்கட்டுகள்
முற்றிலும் மொரமொரப்பானவை;
நாவூறும் நற்சுவை நிறைந்தவை;
உங்கள் உள்ளத்தை கொள்ளை
கொள்ளும் உன்னதமான
பிஸ்கட்டுகள்.

தயாரிப்பாளர்கள்:
மெட்ராஸ் ஸ்நாக்ஸ் அண்டு
டயட்ஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை.




மில்கின். பால் பிஸ்கட்டுகளை ரசித்து ருசிப்பவர்களுக்கேற்ற பதமான பாலூறும் பிஸ்கட்டுகள்.

Jaisons/MSD/7.84 TAM

# நீங்கள் முற்றிலும் எதிர்பார்த்தது இதோ!
# ஒரு முழுமையான சமையல் சாதனம்

# கோபி

**5** வருட உத்திரவாதம்
நிரந்தர இலவச சேவை.

கலக்க, மற்றும் சாறு எடுக்க $1\frac{1}{2}$ லிட்டர் ஜாடியுடனும் 450 வாட் சக்தி வாய்ந்த மோட்டார் பொருந்தியதும், 60 நிமிடம் தொடர்ந்து செயல்படும் சமையல் சாதனம் "கோபி" ஒன்று மட்டுமே.

கலக்க, அரைக்க மற்றும் பொடிக்க தனிப்பட்ட 3 மூல ஜாடிகளும், துருவ, சீவ, இறைச்சி கொத்த, பழச்சாறு பிழிய, மற்றும் கடைய தனிப்பட்ட 6 ஜாடிகளை உடன் கொண்டது, "கோபி"

பொடிக்கவும் அரைக்கவும் தனிப்பட்ட ஜாடிகள் இருப்பதினால் வேலை நேரத்தை மிச்சப்படுத்துகிறது.

கலக்க மற்றும் சாறு எடுக்க $1\frac{1}{2}$ லிட்டர் ஜாடியும், அரைக்க 1 லிட்டர் ஜாடியும் மற்றும் பொடிக்க 350 கிராம் ஜாடியும் மூல இணைப்புகளாக கொண்டது "கோபி"

உங்கள் சுவைக்கேற்றது கோபி!



**GOPI**

**MUCH MORE THAN A MIXER GRINDER**




KAN ADS 817

அனைத்து பிரபல வீட்டு உபயோகப் பொருட்கள் விற்பனையாளர்களிடம் கிடைக்கிறது.

தமிழ்நாடு விநியோகஸ்தர்கள்:

**தி அலுமினியம் & க்ளாஸ்வேர் எம்போரியம்**

196, நேதாஜி சாலை, சென்னை-600 108. போன்: 21776/21066.

## மணமகன் தேவை

பி. பூ. பி. தேதிய 11.12.1956 தேதியில் சைவ வேளாளர் (கார்காத்த வேளாளர்) குலத்தில் பிறந்த 5 அடி உயர முள்ள பெண்ணுக் கு அதேகுலத்தில் பிறந்த (உட்பிரிவுகள் சம்மதம் ஆனால் சைவமாக இருக்க வேண்டும்.) அரசாங்க உத்தியோகத்தில் இருக்கும் (ஒரு குமாஸ்தா அளவில்) நகை வரதட்சிணை எதிர்பார்க்காத மணமகன் தேவை. ஜாதகம், புகைப்படம், மற்ற விபரங்கள் ஆகியவற்றை அனுப்பவும். பெட்டி எண்: 1569.

வன்னியகுல க்ஷத்திரியர் – வயது 23 – படிப்பு எம். எஸ்ஸி., எம். பில் அழகும் நற்குணங்களும் நிறைந்த பெண்ணுக்கு அதே வகுப்பில் வயது 28க்குள் உயர்ந்த உத்தியோகத்தில் இருக்கும் மணமகன் தேவை. ஜாதகம், மற்றும் குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டிஎண்:1570

திருநெல்வேலி சைவ பிள்ளைமார், 27 வயது, எம். ஏ. (எகனமிக்ஸ்), மாநிறம், 5' 3'' உயரம், அழகும், குணமும் நல்ல குடும்ப பின்னணியும் கொண்ட பெண்ணுக்கு வரதட்சிணை, சீர் எதுவும் எதிர்பார்க்காத நல்ல வேலையில் இருக்கும் மண மகன் தேவை. பெட்டி எண்: 1571.

Alliance solicited for Kousika, Brahacharanam Barani girl, 36 years employed in Delhi Bank, respectable family, reply with horoscope. Box No: 1572.

Alliance invited from Brahmin boy from respectable family well settled in life for good looking, Tirunelveli, Vadama, Vadula, graduate, Iyer, girl, Aswini, 35/ 5'-1'' in permanent Government service in Madras, pensionable job an drawing decent salary, reply with horoscope and Biodata. Box No: 1573.

செங்குந்த முதலியார் எம். எஸ்ஸி (Maths) படித்து முடித்துள்ள பெண் வயது 23. நல்ல குண மும், அறிவும் பொறுமையும் உடைய பெண் ணிற்கு இதே வகுப்பைச் சேர்ந்த பேங்கிலோ கவர்ன்மெண்ட் உத்தியோகத்திலோ உள்ள பையன் தேவை. சொந்த ஊர் கும்பகோணம் வசிப்பது கான்பூர். கான்பூர், டில்லி, லக்னோ, மெட்ராஸ், ஹைதராபாத் போன்ற ஊர்களில் இருந்தும் விண்ணப்பிக்கலாம். போட்டோ ஜாதகத் துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்:1574

கௌசிக கோத்திரம், வடமாள், புனர்பூசம், மாநிறம், எஸ். எஸ். எல். ஸி. வரை படித்த 5 அடி உயரம், 7 வருடங்கள் நர்ஸ் வேலை பார்த்து ஆபரேஷன் தியேட்டர் அனுபவம் உள்ள குடும்பப் பாங்கான 30 வயதுப் பெண்ணுக்கு மணமகன் தேவை. எந்த பிராமணப் பிரிவும் சம்மதம். பெட்டி எண்: 1575.

கௌசிக கோத்திரம் விசாகம் 4–ம் பாதம் எஸ். எஸ். எல். சி. மத்திய அரசாங்க வேலையில் ரூ. 990 சம்பாதிக்கும் 34 வயதுள்ள பெண்ணிற்கு அரசாங்க மற்றும் பாங்க் வேலையிலுள்ள வடமாள் பிரிவை மட்டும் சேர்ந்த பிள்ளை தேவை. சீர் வரிசைகள் நன்கு செய்யப்படும். பெட்டி எண்: 1576.

பூராடம் நட்சத்திரம், ஸ்ரீவத்ஸ கோத்திரம், அய்யர் 35 வயது பெங்களூரில் ஒரு தனியார் கம்பெனியில் வேலை செய்யும் பட்டதாரிப் பெண் ணுக்கு மணமகன் தேவை. அய்யர் உட்பிரிவு எதுவாக இருப்பினும் சம்மதம். பெட்டி எண்:1577

ஸ்ரீவத்ஸம், மூலம், தென்கலை பிரிவில் சேர்ந்த, நல்ல நிறம், அழகு, குணம் நிறைந்த, 25 வயது பட்டதாரி (பி.ஏ.) பெண்ணிற்கு, கண்ணியமான குடும்பத்திலிருந்து, நல்ல படிப்பும், தகுந்த உத்தி யோகமும் உள்ள வரன் தேவை. வடகலை சம்மதம். பெட்டிஎண்: 1578.

Alliance for Kerala Brahmin Vadama star Utthiradam Bharadwaja girl, 30, studied P.U.C. unemployed well domestically trained, decently employed Kerala Brahmins preferred, subsects no bar, apply with horoscope. Box No: 1579.

Brahacharanam, Bharadwaja girl aged 32; 148 cms; matriculate; very fair; well-trained in domestic duties. Suitable bridegroom aged 35-45 years. Widowers with no encumbrances may correspond. Horoscope required. Sub-sects no bar. Simple marriage. Apply box No: 1580.

நிரந்தர அரசாங்க உத்தியோகம் உள்ள முதலி யார் வகுப்பைச் சேர்ந்த பெண்ணிற்கு அதே இனத்தைச் சேர்ந்த மணமகன் தேவை. பெண்ணின் மாதச் சம்பளம் 750/– 28 வயதுள்ள இப்பெண் மாநிறம் உடையவர். பெண்ணின் நட்சத்திரம் மகம். முழு விவரங்களுக்கு தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: த. ந. ஆறுமுகம் 17 செங்கழனி அம்மன் கோவில் முதல் தெரு, கிண்டி, சென்னை-32: பெட்டி எண்: 1581.

Alliance solicited for 24 Manai Telugu Chettiar, Makkadeyar gothram, tall, fair, employed graduate girl aged 30, Reply Box No: 1582.

புகழ்பெற்ற தனியார் நிறுவனம் ஒன்றில் பி. காம்., எம். பி. ஏ., கல்வித் தகுதியோடு நல்ல பொறுப்பான பதவி வகிக்கும் சிறப்பான உயர் குணங்கள் இயற்கையிலேயே அமையப்பெற்ற 23 வயதான அழகான கம்மாவார் நாயுடு பெண் ணுக்கு பொருத்தமான வரன் தேவை. விளம்பரம் தகுதியான தேர்வுக்காக மட்டுமே. பெட்டி எண்: 1583.

கௌண்டின்ய கோத்திரம், பட்டதாரி, பெங்களூரில் நிரந்தர வேலை பார்க்கும் ரூ. 2000/– மாத வரு மானம் உள்ள 31 வயது மணமகளுக்கு பெங்களூரிலோ அல்லது பெங்களூருக்கு மாற்ற லாகும் வேலையிலுள்ள 35–38 வயதுக்குள், ரூ. 1300– மேல் வருமானமுள்ள, பட்டதாரி மணமகன் தேவை. பெட்டி எண்: 1584.

கௌண்டின்ய கோத்திரம், தெலுங்கு அந்தணர் கர்ணகம்மது வகுப்பைச் சேர்ந்த 26 பி. ஏ. வரை படித்துள்ள மாநிறம், அழகும், அடக்கமும் உள்ள பெண்ணிற்கு வேலையிலுள்ள தக்க மண மகன் தேவை. உட்பிரிவுகள் பரவாயில்லை. விரைத்துடன் தொடர்பு. கொள்க. பெட்டி எண்: 1585.

அரசு அலுவலகத்தில் 850– மாத சம்பளம் 32 வயது விவாகரத்து செய்யப்பட்ட இந்து பெண் ணிற்கு சென்னையில் பிஸினஸ்மேன் அரசு/வங்கி

அலுவலகங்களில் வேலை செய்யும் வசதியுள்ள 42 வயதிற்குட்பட்ட பிரம்மச்சாரி / விவாகரத்து செய்த மணமகன் தேவை. அனைத்து ஜாதியும் சம்மதம். பெட்டி எண்: 1586.

அய்யர், பிரஹசரணம், ஸ்ரீவத்ஸ கோத்திரம், வயது 23, கேட்டை நட்சத்திரம் 3—ஆம் பாதம், சிவப்பு நிறம், 10 + 2 படித்துள்ள, வீட்டுவேலைகளில் நன்கு தேர்ச்சி பெற்ற வேலைக்குப் போகாத குடும்பப்பாங்கான பெண்ணிற்கு சர்க்கார், பாங்க் அல்லது அலுவலகங்களில் 900–1000 வரை சம்பாதிக்கும் மணமகன் வடமாளாக இருந்தாலும் 35 வயதிற்குள் தேவை பெட்டி எண்: 1587.

Alliance invited for Brahacharanam Moudhkalya Gothram graduate girl aged 27, good looking, intelligent, pious, Star Chithirai, Employed in Madras drawing around Rs. 1500 p. m. Respectable family. Reply Box No... 1588.

பிரஹசரணம், சங்க்ருதி கோத்திரம் வயது 22, கார்த்திகை நட்சத்திரம் மாநிறம், உயரம் 5' 2'' எம். ஏ. கடைசி வருஷம் படித்துக் கொண்டிருக்கிற வீட்டு வேலைகளில் தேர்ச்சி பெற்ற வேலைக்கு போகாத குடும்பப்பாங்கான பெண்ணிற்கு. டாக்டர், இன்ஜினியர், ஆடிட்டர், எம். பி. ஏ., படித்துள்ள 30 வயதுக்குள் உள்ள மணமகன் தேவை. உட்பிரிவு பாதகமில்லை. பெட்டி எண்:1589

சௌராஷ்ட்ரா வகுப்பைச் சேர்ந்த ரூ. 1170/— சம்பளத்தில் ரிசர்வ் பாங்கில் பணிபுரியும்பி.காம். 21 வயது, அழகான பெண்ணிற்கு, 27 வயதுக்குட்பட்ட நல்ல உத்தியோகத்திலிருக்கும் சௌராஷ்டிர மணமகன் தேவை. போட்டோ, ஜாதகம், விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண்: 1590.

ஸங்க்ருதி கோத்திரம், பரணி நட்சத்திரம், 152 செ.மீ. உயரம், நல்ல நிறம், வயது 26. பி. எஸ்ஸி படித்து டெல்லி மத்திய சர்க்காரில் வேலையில் உள்ள வடஆற்காடு அய்யர் பெண்ணுக்கு நன்றாகப் படித்துள்ள ஆபீஸர் பதவியில் உள்ள வரன் தேவை. பெட்டி எண்: 1591.

காமுகாயன விஸ்வாமித்ர கோத்திரம், ரோகிணி நட்சத்திரம், பத்தாம் வகுப்பு வரை படித்த, தையல் அறிந்த, இந்தி தெரிந்த குடும்பப்பாங்கான 29 வயது தெலுங்கு பிராமணப் பெண்ணிற்கு (உட்பிரிவு—கர்ணகம்மலு) நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டிஎண்:1592

Alliance invited for Vadama, Khashiba Gothram, Makam star, aged 25, height 150 cms. goodlooking Brahmin girl. please eply with horoscope etc. Box No: 1593.

Parents of graduate Nationalised bank employed divorcee girl without encumbrrances aged 24 earning around 1300, solicit correspondence from brahmin Iyer grooms. decent marriage. Box No :1594.

20 வயது, மாநிறம், உயரம் 4' 9'', கணிதப் பிரிவு Plus 2 பாஸ், வீட்டு வேலைகளில் தேர்ச்சி பெற்ற தமிழ் யாதவ இனத்தைச் சார்ந்த அழகிய இளம் பெண்ணிற்கு, சர்க்கார் / தனியார், பேங்க்/ கம்பெனியில் நிரந்தர வேலையில் மாதம், ரூ. 1000/— சம்பளம் பெறும் 28 வயதிற்குள் உயரமுள்ள பட்டதாரி மணமகன் அதே இனத்தைச் சார்ந்த மணமகன் போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1595.

பி. யூ. சி., டைப்ரைட்டிங், ஷார்ட்ஹாண்ட் தேறிய, 28 வயது, வசதியுள்ள தமிழ் முஸ்லிம் விதவைப் பெண்ணுக்கு, முஸ்லிம் சமயத்தைச் சார்ந்த வசதியுள்ள படித்த மணமகன் தேவை. மனைவியை இழந்தவராயினும், வேலையில்லாதவராயினும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1596.

Alliance invited from Broad minded, well placed, educated groom, age 32/34 for Brahacharanam Iyer Haritha Gothram Bride, 26 years, Visakam, height 5' 3'' S. S. L. C. passed, domestically trained, beautiful but no sight in the left eye which is not noticeablc, subsects no bar, slight defect acceptable. Decent marriage, apply withhoroscope and Biodata. Box No: 1597.

Alliance solicited from Hindu-Tamil Vegetarian decently employed or well-settled grooms for smart, Good-looking, domestically trained, home loving graduate girl 25/165 cms Kirutthikai. Intercaste Parentage. Father Vellala Pillai / Mother Brahmin. Box No: 1598.

சைவ வெள்ளாளப் பிள்ளை நடுத்தர வகுப்பைச் சேர்ந்த 23 வயது, 5 அடி உயரம், மாநிறம், அழகு, குடும்பப்பாங்கு, பண்புள்ள எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்த பெண்ணுக்கு அதே இனம் வகுப்பைச் சார்ந்த 29 வயதுக்குள், சம உயரமும் படிப்பும், நிரந்தர வேலையுமுள்ள மணமகன் தேவை. வரதட்சிணை இல்லை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1599

## மணமகள் / மணமகன்

Alliance for Kousika vadakalai bride 34 years, matric, knows Hindi, tailoring, excellent in household, and of calm and quiet manners. Mutual acceptable for brother 32, postgraduate and law graduate senior officer in statutory body 3300 per month. Broad-minded decent families to correspond to Box No: 1600.

நான் பூர்விகமான சைவப்பிள்ளை. எனது மகன் வயது 26. படிப்பு பி. ஏ. சென்னையில் மத்திய அரசில் பணி வருவாய் ரூ. 900/— எனது மகள் வயது 19. படிப்பு பி. காம்., (2வது ஆண்டு) ஆங்கிலத் தட்டெழுத்தும் சுருக்கெழுத்தும் தற்போதைய வேலையில் வருவாய் ரூ. 350/— இருவரும் குண நலன்களுடன் தோற்றமும் கொண்டவர்கள். இருவர் தகுதிக்கும் ஏற்ற மணமக்கள் தேவை. பூர்வீகக் குடும்பம் மற்றும் விவரங்களுடன் ஜாதகம், புகைப்படத்துடன் தொடர்பு கொள்ளவும். பூர்வீக சைவப் பிரிவுகள், ஐயர் உள்பட விருப்பம். கொடுத்தும், கொள்ளவும் செய்யலாம். பெட்டி எண்: 1601.

Vadakalai Iyengar bride for Advocate, practising Taxation, 30, 165 cms Nithruva-Kasyaba Gothram, also Bridegroom for sister, fair, healthy, 23, 155 cms, studying B. A. both Kettai star, Thenkalai No bar, reply to Advertiser box No: 1602.

Edited, Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: Manjula Ramesh.













# அமிர்தாஞ்சன் அறியும் தலைவலியின் கடுமையை

எளிதாகப் பூசிட ஏற்ற மிருதுவான அடிப்படைபொருள் கொண்டது.

புத்தம் புதிய, கார்க்கிறுலான உள் அமைப்பு மருந்தின் சக்தியைப் பாதுகாக்கிறது.








1984 ஒலிம்பிக் போட்டி இந்திய விளையாட்டு வீரர்களுக்கு பெய்ன்-பாம் சப்ளை செய்ய அங்கீகாரம் பெற்றவர்கள்.

# அமிர்தாஞ்சன்

துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது.

தீய பின்விளைவுகள் இல்லாதது.

OBM 8708 TM

# இந்தத் தரச்சிறப்பு மிக அருமையானது!

# நெரோலாக்

## வாஷபிள் ஆயில் பௌண்ட் டிஸ்டெம்பர்

ஸோல்ஜர்
புதிய பெயர்! டிஸ்டெம்பரின்






இல்லத்தின் எழிலிற்கு நீவகளை ஊட்டும் நெரோலாக் டிஸ்டெம்பரின் தரம்பற்றி கவலைப்படவே தேவை இல்லை. இது கூடுதல் அளவு பரவுகிறது, உடனடியாக உலர்கிறது. மேலும் பரப்புகளுக்குப் பாதுகாப்பும் அளிக்கிறது. அதாவது சிக்கனம், வனப்பு மற்றும் செயல்திறன்.

நெடுங்காலம் உழைக்கவும் செய்கிறது. எனவே ஆண்டுதோறும் சுவர்களுக்கு வண்ணம் பூசும் அவசியமில்லை. வாஷபிள் என்பதால், எங்கேயாவது கறை—வடு ஏற்பட்டால், ஈரத் துணியைக் கொண்டு லேசாகத் துடைத்தால் போதும்.

வெள்ளை தவிர, முற்றிலும் புதிய 5 சாயல்கள் அடங்கிய கவர்ச்சியான 31 சாயல்களில் வருகின்றன. இவைகளிலிருந்து, எத்தனை வண்ணங்கள் வேண்டுமானாலும் தயார் செய்துகொள்ளலாம்.

**நெரோலாக் பெயிண்ட்ஸ்**
எந்த ரூபத்திலும்,
எந்த வண்ணத்திலும் மேம்பட்டது!



ULKA-GNP-12-84-TAM

REGISTERED No. TN MS (S) 231
Registered as a Newspaper in Sri Lanka